ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ப்ரபந்நஜநகூடஸ்தரான

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

[ஐந்தாம்பத்து]

---

பெருமாள்கோயில்

ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியரால்

எல்லார்தமக்கும் இன்பம்பயக்குமாறு எளியநடையில் தெளிய எழுதப்பட்ட

திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.

சென்னை நியூமன் அச்சுக்கூடத்தில் ஷை அச்சுக்கூடத் தலைவரால்

பதிப்பிக்கப்பட்டது.

1939.

# காஞ்சீ. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இயற்றிய நூல்கள்.

திருப்பல்லாண்டு உரை
பெரியாழ்வார் திருமொழி உரை
திருப்பாவை உரை
நாச்சியார் திருமொழி உரை
பெருமாள் திருமொழி உரை
திருச்சந்தவிருத்தம் உரை
திருமாலை உரை
திருப்பள்ளியெழுச்சி உரை
அமலனாதிபிரான் உரை
கண்ணிநுண்சிறுத்தாம்பு உரை
பெரிய திருமொழி உரை
திருக்குறுந்தாண்டகம் உரை
திருநெடுந்தாண்டகம் உரை
நான்கு திருவந்தாதிகளின் உரை
திருவிருத்தம் உரை
திருவாசிரியம் உரை
பெரிய திருவந்தாதி உரை
திருவெழுகூற்றிருக்கை உரை
சிறிய திருமடல் உரை
பெரிய திருமடல் உரை
இராமாநுச நூற்றந்தாதி உரை
திருவாய்மொழி உரை (4-பத்துக்கள்)
திருப்பல்லாண்டு ச்லோகமாலிகை
திருப்பள்ளியெழுச்சி டை.
திருவெழுகூற்றிருக்கை தண்டகம்
திருவாசிரியம் தண்டகம்.
சிறியதிருமடல் ச்லோகமாலிகை
பெரியதிருமடல் ச்லோகமாலிகை
பெரியாழ்வார் திருமொழிப்பொழிப்புரை
ஆழ்வாராசார்ய வைபவதீபிகை
தேவராஜமங்கள வியாக்யானம்
தேவராஜாஷ்டக வியாக்யானம்
சதுச்ச்லோகீ வியாக்யானம்
முகுந்தமாலை வியாக்யானம்
ஸ்தோத்ரரத்னம் டை.
சதுச்லோகீ டை.
ஸுதர்சந சதகம் டை.
ஸ்ரீரங்கராஜஸ்தவம் டை
பஞ்சஸ்தவ வியாக்யானம்
வைராக்யபஞ்சகம் டை.
தேசிகமங்களம் டை.
பிள்ளையந்தாதி உரை
ஸ்ரீவசனபூஷண ஸாரம்
ஆசார்யஹ்ருதய ஸாரம்
கூரத்தாழ்வான் வைபவம்
பகவத் கைங்கர்யமுதம்
ஸ்ரீவேங்கடநாத குருஸ்தோத்ரம்.
ஸத்ஸம்ப்ரதாயப்படி
வாதிபீகர விஜயம்
மணவாளமாமுனிகள் வைபவம்
பரமார்த்தஸ்துதி வியாக்யானம்
த்வம்மேறைப்மேவியாக்யானம்.
அத்திகிரிவைபவவசனம்.
வால்மீகிராமாயண வசனம்.
உபந்யாஸ ஸங்க்ரஹம்
வேதலக்ஷண விசார நூல் தொகுதி
அர்ச்சாவதாரத் திருமண்காப்பு.
வேதார்த்த தீபிகாவிமர்சம்
ராமாநுஜதயாபாத்ர தத்வம்
பாத்ர தத்வ விஜயத்வஜம்
ஸத்ஸம்ப்ரதாய பரிசுத்தி
ரக்ஷாவிமர்சிக்ஷா
ஸ்ரீவரவரமுநி வைபவஸ்தோத்ரம்
ஸ்ரீலோகாசார்யஸ்துதி
ஸ்ரீவரவரமுநி நக்ஷத்ரமாலிகை
முதலிய ஒன்பது ஸ்துதிகள்
ஹயக்ரீவ சதகம் முதலியன 24
உபாக்யான ரத்னமாலா 16
ஸமஸ்யமாரோக்தி வைஷ்டவ
விமர்சம்
வேதாந்த தேசிகன் வைபவம்
ஸதாசார்ய ஸூக்திரக்ஷா
தேசிகஸூக்தி வித்தாஞ்ஜனம்
தத்வவிவேதநம்.
கோதாஸ்துதி வியாக்யானம்.
தேசிகஸூக்திபரிமளம்
ரக்ஷாவிலோசக பாவ ப்ரகாசிகா
ஆராய்ச்சி மணி மாலை
ஸ்வஸ்வரூப நிரூபணம்.
பரஸ்வரூப நிரூபணம்.
லக்ஷ்மீதத்வ நிர்ணயம்
உபந்யாஸ ரத்னமாலா
தர்க்க சாஸ்த்ர ஸர்வஸ்வம்
ரஸிக புதாஞ்சனம்
காஞ்சீ ஹஸ்திகிரி வைபவம்
பரிபக்திபஞ்சபதீ
யாத்ரா ஸ்தோத்ராம்ருதம்
ஸ்ரீராமாயண தண்டகம்
ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா
அத்யமே பத்யார்த்தசதநவநீ
தத்வப்ரதிஷ்டா விஜயத்வஜம்
விஜயத்வஜவைஜயந்தீ
திருப்புட்குழிஸ்வாமி வைபவம்
ரத்னபரீக்ஷா
க்ருஷ்ணாவதார ரஹஸ்யம்
அக்ருஷ்டார்த்த ஸர்வஸ்வம்

திருவாய்மொழி உரை கிடைக்குமிடம் :—T. நாராயணசாமி நாயுடு, ப்ரொப்ரைட்டர், ஹியூமன் ப்ரஸ் 19, டேவிட்சன் தெரு, ஜி. டி.. மதராஸ்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழியில்—ஐந்தாம்பத்து.

## முதல்திருவாய்மொழி—கையார்சக்கரத்து.



உரையவதாரிகை:—கீழ் நாலாம்பத்தில் * நண்ணாதார் முறுவலிப்ப வென்னும் பதிகத்திலே ஸம்ஸாரிகள் படுகிற வருத்தங்களை நினைத்து, அவ்வருத்தங்கள் அவர்களுக்குத் தொலையும்படி எம்பெருமானுடைய பெருமையை உணர்த்துவோமென்று பார்த்து அதனையுணர்த்தினர் கீழே * ஒன்றுந்தேவுமென்கிற திருவாய்மொழியிலே. அவ்வுபதேசம் கேட்டுத் திருந்தினவர்கள் இந்நிலத்திலே நிரம்பியிருக்கிறபடியைக் கண்டவாழ்வார் "பொலிக பொலிக" வென்று அவர்கட்கு மங்களாசாஸநம் பண்ணுவதாக இருக்குமளவிலே, தம்மைப்பற்றிச் சிறிது நினைந்துக் கொண்டார்; 'நாமும் இவர்களைப்போலே ஸம்ஸாரத்திலே தோள்மாறிக்கிடவாதே இவர்களுக்கு உபதேசம்பண்ணும்படியாகவும் இவர்களைத் திருத்தும்படியாகவும் எம்பெருமான் நமக்கு அருள்புரிந்திருக்கின்றானே, இவ்வருளுக்கு நிதானம் ஏதேனுமுண்டோ?' என்று ஆராய்ந்து பார்த்தார்; அவ்வருள் நிர்ஹேதுகம் என்பதை நன்கறிந்தார்; உள்குழைந்து அதனைப் பேசியநுபவிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

சப்தாதிவிஷயங்களிலேயே நான் மண்டிக்கிடக்க, பகவத் விஷயத்தையும் வாயாலே சொல்லுபவனைப் போல் பாவனை செய்தவனேயல்லது உள்கனிந்த ப்ரேமம் சிறிதுமுடையேனல்லேன்; அப்படியிருந்தும், க்ருத்ரிமமான அந்த உக்திதன்னையே பற்றாசாகக் கொண்டு எம்பெருமான் என்னை விஷயீகரித்தவாறு என்னே! என்று ஆச்சரியப்படுகிறாராயிற்று. .... .... .... .... *

கையார்சக்கரத்து என்கருமாணிக்கமேயென்றென்று*
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி *
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்றுகாப்பாரார்? *
ஐயோ! கண்ணபிரான்! அறையோவினிப்போனாலே. (க)

| | |
|---|---|
| கை ஆர் சக்கரத்து | 'திருக்கையில் பொருந்திய திருவாழியாழ் வானையுடையவனும் |
| என் கரு மாணிக்கமே | எனக்கு விதேயமான கருமாணிக்கம் போன்ற வனுமான பெருமானே!' |
| என்று என்று | என்று பலகாலும் |
| பொய்யே | பொய்யாகவே |
| கைம்மை சொல்லி | கபடவார்த்தையைச் சொல்லி |
| (அந்த வார்த்தைக்குத் தகுதியில்லாதபடி) | |
| புறமே புறமே ஆடி | விஷயாந்தரங்களிலே யே அங்காஹித்திருந்தும் |
| மெய்யே பெற்றொழிந்தேன் | மெய்யன்பர் பெறும் பலனையே பெற்று விட்டேன்; |
| விதி வாய்க்கின்று | பகவத்க்ருபை பலிக்குமிடத்தில் |
| காப்பார் ஆர் | அதைத் தடுக்கவல்லார் யார்? |
| கண்ணபிரான் | ஸ்ரீக்ருஷ்ணனே! |
| இனி | உன்க்ருபை எனக்குப் பலிக்கப் பெற்றபின்பு |
| போனால் | என்னைவிட்டு நீ போக விரும்பினுயாகில் |
| அறையோ | [illegible]ாளமாகப்போகலாம்; (தடுப்பேனல்லேன்.) |
| ஐயோ | (சந்தோஷக் குறிப்பு) |
| [இனி உன்னால் பெயர்த்துபோக முடியாதென்றபடி.] | |

* * * [கையார்சக்கரத்து.] நான் இதரவிஷயங்களிலே மிகவுமீடுபட்டவனுயிருந்து வைத்து, பகவத்விஷயத்திலீடுபட்டவன் போல நடித்துச் சில க்ருத்ரிமச் சொற்களைச் சொல்ல, அவ்வளவிலே எம்பெருமான் என்னை விஷயீகரித்தருளினுனென்கிருர்.

எம்பெருமான் கையுந்திருவாழியுமாயிருக்கிற இருப்பு உண்மையிலே நெஞ்சை உருக்குமதாயிருந்தாலும் இரும்புபோல் வலிதான என்னுடைய நெஞ்சம் அதிலே ஈடுபட்டிலது; ஆனாலும் ஈடுபட்டவர்கள் பேசுகிற பாசுரங்களிலே "கையார்சக்கரத்தென் கருமாணிக்கமே" என்று பேசினேன்; இப்படி ஒரு தடவை சொல்லி நிற்காதே பலதடவை சொன்னேன்; பல்லாயிரந்தடவை சொன்னாலும் உள்கனிந்து சொன்னால் அழகியதே; அப்படியன்றிக்கே எம்பெருமானையும் வஞ்சிப்பதற்காகச் சொன்னேனத்தனை. வாயாற்சொல்லுவதோ இது; நடத்தையோ விஷயப்ராவண்யமேயாயிற்று. அப்படியிருந்தும் மெய்யன்பர் பெறும் பேற்றை நானும் பெற்றுவிட்டேன்; பொய்யான சொல்லுக்கு மெய்யான பலன் எங்ஙனம் பெறமுடியும் என்று சிலர் சங்கிக்கக்கூடும்; [விதிவாய்க்கின்று காப்பாரார்?] எம்பெருமானுடைய அருள்வெள்ளம் கரையுடைந்து பெருகப்புகுந்தால் எம்பெருமானுந்தன்னாலும் அதைச் செய்யமுடியாதன்றோ.

ஆக மூன்றடிகளைத் தம்மிலேதாம் சொல்லிக்கொண்டு, நான்காமடியை எம்பெருமான்றன்னையே நோக்கிச் சொல்லுகிருர், "கண்ணபிரானே! இனி நீ என்னைவிட்டுப்போகத் திருவுள்ளமாகில் விட்டுப்போ பார்ப்போம்" என்று விரவாதம் பண்ணுகிருர். இனி உன்னாலும் விட்டுப்போகமுடியாதென்றவாறு.

அறையோ வென்பது தம்முடைய வெற்றியைக் காட்டுகிறது. வீரவாதத்தைத் தமிழர்கள் அறைகூவுதலென்றும் காவலிடுதலென்றும் சொல்லுவர்.

* ஸ்நேஹாவேத ஸம்ஹாரஷ்ச ந க்ருதேஸ்ய ஸம்பந்த மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந * என்றபடி உனக்கு இனி என்னை விடப்போகாதென்பது திண்ணம் என்று காட்டினபடி.

இப்பாசுரத்தினால் எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபை நிரூபிக்கப் பட்டதாயிற்று. ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில் "இவன் நடுவே அடியானென்ன, ஓலைப்புறமாப்ரமாணம் பக்ஷபாதிலையும் வங்களாலே நடுவ மாக இந்திரஜாலங்கள் காட்டிக்கொள்ளக் காப்பாரற்று விதிசூழ்ந்தது" என்றருளிச்செய்த சூர்ணிகை இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

விதியென்று பகவத்க்ருபையைச் சொல்லுகிறது. விதி எப்படித் தப்ப வொண்ணாததோ அப்படி க்ருபையும் எம்பெருமானுமேல தப்பவொண்ணாததா யிருக்கையாலே விதியென்றது.

இனிமேல் எம்பெருமான் தம்மை விட்டுப் பெயர்த்துபோக முடியாதென் கிற உறுதியைக்காட்டுவது ஈற்றடி. கண்ணபிரானால் இனி எங்ஙனம்போக முடியு மென்கை. .... .... .... .... .... (க)

போனாய்மாமருதின்நடுவே என்பொல்லாமணியே! *
தேனே! இன்னமுதே! என்றென்றேசிலகூத்துச்சொல்ல *
தானேலெம்பெருமான் அவனென்னாகியொழிந்தான் *
வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மா மருதின் நடுவே | பெரிய மருதமரங்களி னிடையே | சில கூத்து சொல்ல | சில பொய்யுரைகளைச் சொல்ல, |
| போனாய் | தவழ்ந்து சென்றவனே! | எம்பெருமான் அவன் தான் | அவ்வெம் பெருமானா வன் |
| என் | எனக்கு விதேயமான | என் ஆகி ஒழிந்தான் | எனக்கு விதேயனாய் விட்டான்; |
| பொல்லா மணியே | துளைபடாத ரத்தினம் (போன்றவனே! | | (அன்றியும்) |
| தேனே | தேன்போன்றவனே! | வான் மா நிலம் மற்றும் முற்றும் | அவனுடைய விபூதிகளெல்லாம் |
| இன் அமுதே | இனிமையான அம்ருதம் போன்றவனே! | என் உள்ளன | என்னுள்ளே நடத்தும் படியாயின. |
| என்று என்றே | என்று இவ்வண்ணமாக வே | | |

* * * [போனாய] கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்புறுத்து கின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கண்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி உரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே யெழுந்தருள, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்ட சக்தியினால் அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவென்பது யமளார்ஜுநபஞ்ஜனகதை. அக்காலத்திலே

* * * [உள்ளன] முன்னிரண்டடிகளால், கீழுள்ள காலமெல்லாம் தாம் பொய்யே கைம்மை சொல்லிக்கொண்டிருந்த வாற்றைச்சொல்லி, பின்னடிகளால்—அந்தக் கைம்மை தவிர்ந்து கபடமற்ற பக்திபோடேகூடி பகவத் ப்ராவண்யம் மேலிடப் பெற்றேனென்கிறார்.

மனத்தினுள் நடையாடுகின்ற எண்ணங்களோ வேறுபட்டவை; வெளியில் வாயாற் சொல்லுகிறவாசகங்களோ புறப்பூச்சான பொய்யுரைகளேயாம்; எம்பெருமானுடைய ஔதார்யம் முதலிய குணங்களிலும் வடிவழகிலும் மிக ஈடுபட்டவன்போல 'வள்ளலே! மணிவண்ணனே!' என்று பலகாலுஞ்சொல்லி * உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறியும் அப்பெருமானையும் வஞ்சிக்கும்படியான கள்ளமனமுடையவனாகவே யிருந்தேன்; அப்படிப்பட்ட நான் அந்தக் கள்ளமனம் தவிரப்பெற்று உஜ்ஜீவிக்கவல்லவனாயினேன். இனி வேறுவழிகளிலே செல்ல ப்ரஸக்தியில்லை என்றதாயிற்று.

"வஞ்சக்கள்வன் மாமாயன்" என்று ப்ரஸித்தி பெற்றிருக்கிற எம்பெருமானையும் வஞ்சிக்கவல்லவனாயினேன் என்பது தோன்ற 'உன்னையும்' என்று உம்மைகொடுத்துப்பேசினார். .... .... .... .... .... (௩)

என்கோள்வனுன்னைவிட்டென்னும் வாசகங்கள்சொல்லியும் *
வன்கள்வனேன்மனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து *
நின்கண்நெருங்கவைத்தே எனதாவியைநீக்ககில்லேன் *
என்கண்மலினமறுத்து என்னைக்கூவியருளாய்கண்ணனே! (ச)

| | | | |
|---|---|---|---|
| கண்ணனே | எம்பெருமானே!, | நின் கண் | உன்னிடத்திலே |
| வன் கள்வனேன் | மிகக்கொடிய ஆத்மாபஹாரக்கள்வனாகிய நான் | நெருக்க வைத்து | மனத்தை ஊன்றவைத்து |
| உன்னை விட்டு என் கொள்வன் என்னும் வாசகங்கள் சொல்லியும் | 'உன்னைவிட்டு வேறு எதைக்கொள்வேன்!', என்கிற கபடவார்த்தைகளைச்சொல்லியும் | எனது ஆவியை | என் ஆத்மாவை |
| மனத்தை வலித்து | விஷயாந்தரங்களில் ஊன்றின நெஞ்சை பலாத்காரமாக மீட்டு | நீக்ககில்லேன் | ஸம்ஸாரத்தில் நின்றும் விடுவிக்க முடியாதவனாயிருக்கின்றேன்; |
| கண்ண நீர் கரந்து | அவ்விஷயாந்தரங்களை அநுபவிக்கப் பெறாமையாலாகும் துக்கத்தையும் மாற்றி | என் கண் மலினம் அறுத்து | என் பக்கலிலுள்ள அவித்யா தோஷத்தை போக்கி |
| | | என்னை கூவி அருளாய் | என்னை உன்பக்கலிலே அழைத்துக் கொண்டருள வேணும். |

* * * [என் கோள்வன்] இதற்கு முன்பெல்லாம் இப்படி உன் பக்கல் பொய்யனாய்ப் போந்தது ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலேயாதலால் அந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கித்தரவேணுமென்கிறார். [இப்பாட்டுக்கு மற்றொருவகையான அவதாரிகையும் உண்டு;] கீழ்ப்பாட்டில் "உன்னைக் கண்டு கொண்டுய்ந்தொழிந்தே

னே" என்றார்; அந்தக் காட்சி மாநஸமான காட்சியாயிருந்தது; காட்சிக்குப் பிறகு பாஹ்ய ஸம்ச்லேஷத்திலே ருசி பிறக்குமாகையாலே கையை நீட்டினார்; கைக்கு அகப்படாமையாலே தளர்ந்து, இப்படி எம்பெருமான் நம்முடைய கைக்கு அகப்படாமைக்குக் காரணம் தேஹஸம்பந்தமாயிருந்ததென்று உணர்ந்து, இவ்விரோதியை நீயேபோக்கி உன் திருவடிகளிலே அழைத்துக் கொண்டருளவேணுமென்கிறார்—என்று சில ஆசாரியர்கள் நிர்வஹிப்பர்கள்.

**உன்னைவிட்டு என்கொள்வனென்னும் வாசகங்கள் சொல்லியும்** = சிறந்த பரமைகாந்திகளன்றோ இவ்வார்த்தை சொல்லத் தகுந்தவர்கள்; உன்னைத் தவிர மற்ற வஸ்துக்களிலேயே காலாழ்ந்து திரிகின்றயான் "உன்னையொழிய வேறு எதைக்கொள்வேன்?" என்று சொல்லத்தகுந்தவனோ? அல்லனாயினும், வாயாலே இங்ஙனம் பச்சைப்பசும்பொய் பேசிக்கொண்டு திரிந்தேனென்கிறார். அதற்கு இப்போது அநுதபித்து வன்கள்வனேன் என்கிறார்.

எவனுடைய பொருளைத் திருடுகிறோமோ அவனைப் பற்றவும், எந்தப் பொருளைத் திருடுகிறோமோ அந்தப் பொருளைப்பற்றவும் களவு வலிமை பெற்றிருக்கும்; இங்கு ஆத்மவஸ்துவோ ஸர்வேச்வரனான எம்பெருமானுடையது; வஸ்துதானும் கௌஸ்துபம்போலே மிகச்சீரியது; ஆக இரண்டாலும் இதனில் மிக்ககளவில்லையென்று துணிந்து வன்கள்வனேனென்கிறார்.

**மனத்தை வலித்து** = விஷயாந்தரங்களிலே சென்ற மனத்தை அவற்றில் நின்றும் மீட்டு என்றபடி. மனத்தை மீட்பதிலுள்ள அருமை தோன்ற வலித்து என்கிறார்.

**கண்ணநீர் கரந்து** = விஷயாந்தரங்களிலே ஊன்றிக்கிடந்த காலத்தில் அவற்றின் அநுபவம் யதேஷ்டமாகக் கிடையாதபோது கண்ணீர் பெருகுமே, அதைச் சொல்லுகிறது இங்கு; அந்தக் கண்ணீரையும் மாற்றவேணுமே இப்போது. இவையெல்லாம் கில்லேன் என்பதிலே அந்வயிப்பன; அதாவது, மனத்தை வலிக்ககில்லேன், கண்ணநீர் கரக்க [மாற்ற] கில்லேன்; (மனத்தை) நின்கண் நெருங்க வைக்ககில்லேன்; எனதாவியை நீக்ககில்லேன்—என்று ஒவ்வொன்றும்மாட்டாமை கூறியவாறு.

**எனதாவியை நீக்ககில்லேன்** = இந்த ஸ்தூலதேஹத்தை விட்டு ஆத்மாவைப் பிரிக்கமுடியவில்லையென்கை. அதாவது — ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுக்கமாட்டிற்றிலேனென்றவாறு.

**என்கண் மலினமறுத்து** — இங்கு மலினமென்கிறது ப்ராக்ருத ஸம்பந்தத்தை; அத்தையறுத்து உன்திருவடிகளிலே என்னையழைத்துக்கொண்டருளவேணுமென்கை.

இரண்டுவகையான அவதாரிகைகளுக்கு இணங்க, இரண்டாமடி மூன்றாமடிகளுக்கு இரண்டுவகையான பொருள்கள் காணத்தக்கன. இங்கே ஈட்டு

ஸ்ரீஸூக்திகள்; "அதவா, [என்கோள்வனித்யாதி.] ஸ்வரூபாநுரூபமான பாகஸத்தை வாயாலே சொல்லி நிற்கச்செய்தேயும். [வன்கள்வனேன்] உத்தேச்ய வஸ்துவைக் கடுக லபிக்கப்பெறாத இன்னாப்பாலே 'மஹாபாபி' என்பாரைப்போலே சொல்லுகிறார். [மனத்தை வலித்து இத்யாதி] பக்திபாரவச்யத்தாலே சிதிலமாகிற மநஸ்ஸைத் திண்ணிதாக்கி, * தன கேழிலொண் கண்ணநீர் கொண்டாள் * என்கிற கண்ணநீரையும் மாற்றி. [நின்கண் நெருங்கவைத்தே] * காலாழும் நெஞ்சழியும் * என்கிறபடியே உன்னைக்கிட்டினவாறே உடைகுலைப்படுகிற மநஸ்ஸைத் தரித்துநின்று உன்னையநுஸந்திக்கும்படி பண்ணி இச்சரீரத்தில்நின்றும் ஆத்மாவைப் பிரியவநுஸந்திக்க க்ஷமனாகிறிலேன்" என்பதாம். (ச)

கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை *
நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு *
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்சயிற்றால் *
புண்ணைமறையவரிந்து என்னைப்போரவைத்தாய்புறமே. (ரு)

| பதம் | பொருள் |
|---|---|
| கண்ணபிரானை | ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்து மஹோபகாரங்கள் செய்தவனும் |
| விண்ணோர் கருமாணிக்கத்தை | நித்யஸூரிகளுக்கு ஸேவ்யமான விலக்ஷண விக்ரஹத்தையுடையவனும் |
| அமுதை | அமிருதம்போன்றவனுமான உன்னை |
| நண்ணியும் | கிட்டியிருக்கச் செய்தேயும் |
| நண்ணகில்லேன் | கிட்டப்பெறாதார் கணக்கிலே யிராநின்றேன்; |
| (அதற்குக் காரணமேதென்னில்;) | |
| நடுவே | இடைச்சுவராக |
| ஓர் உடம்பில் இட்டு | ஒரு சரீரத்திலே சேர்ப்பித்து |
| பல செய் வினை வல் கயிற்றால் | பலவகைப்பட்ட கருமங்களாகிற வலிய பாசங்களாலே |
| திண்ணம் அழுந்த கட்டி | மிகவும் திடமாகக்கட்டி |
| புண்ணை | ஹேயதோஷங்களை |
| மறைய வரிந்து | தெரியாதபடியாகப் பண்ணி |
| என்னை | அசக்தனான என்னை |
| புறமே | உனக்குப் புறம்பான விஷயங்களிலே |
| போர வைத்தாய் | தள்ளிவைத்தாய். |

* * * [கண்ணபிரானை.] கீழ்ப்பாட்டில் மலினம் என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ராக்ருதஸம்பந்தத்தைப்பரக்க அருளிச்செய்கிறாரிதில். மிகவும் ஹேயமாய் ஜுகுப்ஸிக்கத்தகுந்ததான அந்தப்ராக்ருத ஸம்பந்தத்தைப்பற்றிப் பேசுவதற்குமுன்னே நெஞ்சுகுளிர பகவத்விஷயத்தைப் பேசுகிறார்—கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை என்று.

'விண்ணோர்கருமாணிக்கத்தை' யென்பதைமுந்துற அந்வயித்துக்கொள்ள வேணுமென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். "ஸ்ரீவைகுண்டநிலயனாய் * அபர்வநுமமார்களதிபதியாயிருந்தவைத்து ஸர்வபோக்யனும்படிவந்து வஸுதேவக்ருஹே அவதீர்ணனானவுன்னை" என்பது ஆறாயிரப்படியருளிச்செயல்.

"சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபம் தராநிற்கவேயங்கு, ஓர்மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து" (திருவிருத்தம்) என்றபடியே விண்ணோர்களை வஞ்சித்துவந்து கண்ணபிரானாகத் திருவவதரித்து, அப்போதைய அதிமாநுஷசீலவ்ருத்த வேஷங்களையெல்லாம் ப்ரத்யக்ஷஸமாநாகாரமாக எனக்கு ஸேவைஸாதிப்பித்து ஆராவமுதமாயிருக்குமெய்பெருமானை என்றபடி.

நண்ணியும் நண்ணகில்லேன்—பெற்று வைத்தும் பெறாதார்கணக்கானேன். ஞானலாபம் பெற்றது கொண்டு 'நண்ணியும்' என்றார்; சரீர ஸம்பந்தத்தோடேயிருக்கிற இருப்பைப்பற்ற 'நண்ணகில்லேன்' என்றார். அதுதன்னைத் தாமே விவரித்தருளுகிறார் நடுவேயோருடம்பிலிட்டு என்று தொடங்கி. நடுவே என்பதனால், இந்த அழுக்குடம்புதான் அநுபவவிரோதியாய் நிற்கிறதென்று காட்டியவாறு. இருவர்க்கு நடுவிலே ஒரு சுவர் இருந்தால் அது விரோதியாகிருப்போலே ஜீவாத்ம பரமாத்மாக்களின் அநுபவத்திற்கு இவ்வுடலே காணும் இடைச்சுவராயிருக்கின்றது. கழித்துக்கொள்ளப் பார்த்தாலும் ஸாத்யமாகாதபடி புண்யபாபரூபங்களான பலவகைப் பாசங்களையிட்டுக் கட்டிவைத்திருக்கின்றாயே! என்கிறாய்.

புண்ணைமறையவரிந்து என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"தோலை மேவிக் கைப்பாணியிட்டு மெழுக்குவாசியிலே ப்ரமிக்கும்படி பண்ணின வித்தனையொழிய, அகவாய் புறவாயாயிற்றாகில் காக்கை நோக்கப் பணிபோரு மத்தனையிறே" என்பதாம். "நீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகு முடல்" என்று ஐயங்கார் பணித்தபடி மிகவும் ஆபாஸமான இந்த வுடல், மேலுக்கு ஏதோ சிறிது மயக்கத்தை விளைப்பதாயினும் உள்ளேகிடக்கிற கச்மலங்கள் வெளியே தெரியுமாயின் காக்கை குத்தவும் அதையோட்டவுமன்றோ வேலைபோந்திருக்குமென்றபடி. *யதி நாமாஸ்ய காயஸ்ய யத³ந்தஸ் தத்³ ப³ஹிர் ப⁴வேத் । த³ண்ட³மாதா³ய லோகோऽயம் ஶுந: காகாம்ஶ்ச வாரயேத்—யதி நாமஸ்ய காயஸ்ய யதந்தஸ் தத் பஹிர் பவேத்; தண்டமாதாய லோகோயம் சுந: காகாம்ஸ்ச வாரயேத்." என்ற சுலோகம் இங்கு நினைக்கத்தக்கது. .... .... .... .... (௫)

புறமறக்கட்டிக்கொண்டு இருவல்வினையார்குமைக்கும் *
முறைமுறையாக்கைப்புகலொழியக் கண்டுகொண்டொழிந்தேன் *
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண் *
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே. (௬)

| | | | |
|---|---|---|---|
| இரு | புண்யபாபங்களென்று இருவகைப்பட்ட | கட்டிக்கொண்டு | ஒன்றோடொன்று பிசிறிக்கொண்டு |
| வல் வினையார் | பிரபல கருமங்கள் | குமைக்கும் | நலிவதற்கு இடமான |
| புறம் அற | புச்சம் தோன்றாதபடி | ஆக்கை | சரீரத்திலே |

| | |
|---|---|
| முறை முறை | தோள் மாறுங் கணக்கிலே |
| புகல் ஒழிய | புகுவது தவிரும்படியாக |
| நிறம் உடை நால் தட தோள் | அழகுபொருந்திய விசாலமான நான்கு திருத்தோள்களையும் |
| செய்ய வாய் | சிவந்த திருப்பவளத்தையும் |
| செய்ய தாமரை கண் | செந்தாமரைக் கண்களையும் |
| அறம் முயல் ஆழி அம் கை | ரக்ஷணமாகிற தருமத்திலே ஊக்கமுடைய திருவாழியினாலே அழகுபெற்ற திருக்கைகளையும் உடைய |
| கரு மேனி | கரிய திருமேனியையுடையவனான |
| அம்மான் தன்னை | எம்பெருமானை |
| கண்டு கொண்டு ஒழிந்தேன் | ஸேவித்து அநுபவித்து விட்டேன். |

* * * [புறமறக்கட்டிக்கொண்டு.] கீழ்ப்பாட்டில் ப்ராக்ருதஸம்பந்தத்தை நினைத்து வருந்தமுற்ற ஆழ்வாருடைய இழவு ஒருவாறு தீரும்படி எம்பெருமான் தன்வடிவழகைக் காட்டியருள, அதை ஸேவித்தவாறே தம் உடம்பை மறந்து மகிழ்ந்து பேசுகிறார். இவரை மெய்மறக்கப் பண்ணிற்று அவன் வடிவு. * நிறமுடை நால்தடந்தோள் செய்யவாய் செய்யதாமரைக்கண் அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான் தன்னையே கண்டுகொண்டொழிந்தேன் * என்று பெருங்களிச்சியாகக் கூறுகின்றார்.

முடிபோட்ட விடத்தைப்பிரிந்து அவிழ்த்துக்கொள்ளமுடியாதபடி புச்சந் தோற்றுமே உள்முடியாக முடிந்து வைக்கப்பட்ட இரண்டு மஹாநுபாவர்கள் உண்டே; புண்யம் பாபம் எனப்படுமவர்கள்; அந்த முதலியார்கள் பிடிப்பதற்கிடமான சரீரங்களிலே, திறந்து கிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும் ஐந்துபோலே புகுதல் தவிரும்படியாகக் கருமேனியம்மான்தன்னைக் கண்டு கொண்டேனென்கை.

முந்துறமுன்னம் எம்பெருமான் ஆழ்வாரைத் தோள்களாலே அணைக்க வந்ததுபற்றி 'நிறமுடை நால்தடந்தோள்' என்றார். உடனே சில அமுதமொழிகளைப் பேசத் தொடங்கினனாதலால் செய்யவாய் என்றார். உடனே குளிரக் கடாக்ஷிக்கையாலே செய்யதாமரைக்கண் என்றார். * இன்னாரென்றறியேன் அன்னேயாழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை இன்னாரென்றறியேன் * என்று மதிமயக்கவல்ல திருவாழி திருச்சங்குகளைக் காட்டியருளித் திருமேனியையும் முற்றூட்டாகக் காட்டினமை பற்றி 'அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே' என்றார்.

* அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார்வினை கெடச்செங்கோல் நடாவுதிர்' என்கிறபடியே திருவாழியைக்கொண்டே எம்பெருமான் லோகரக்ஷணமாகிற தருமத்தை நடத்து கையாலே அறமுயலாழி என்றார். .... .... ... .... .... .... (௬)

அம்மானாழிப்பிரான் அவனெவ்விடத்தான்யானார் *
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர் *
கைம்மா துன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே *
மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே. (எ)

ஆழி பிரான் அம்மான் அவன் } திருவாழியாழ்வானையுடைய பிரபுவாகிய அவ்வெம்பெருமான்

எவ்விடத்தான் எவ்வளவு பெரியவன்!,

யான் ஆர் } நான் எவ்வளவு சிறியவன்;

(இப்படியிருக்க)

கைம்மா துன்பு ஒழித்தாய் என்று } கஜேந்திராழ்வானது துன்பத்தைத் தீர்த்தவனே! என்று

கை தலை பூசல் இட்டே } சிரஸ்ஸிலே அஞ்ஜலி வைப்பண்ணி

மெய் மால் ஆய் ஒழிந்தேன் } ருஜுவான ப்ரேமமுடையவனாக ஆய்விட்டேன்;

எம் பிரானும் ஸர்வேசவரனும்

என் மேலான் } என்மீது அன்பு பூண்டவனாயினான்;

(ஆதலால்)

எம்மா பாவியர்க்கும் } எவ்வளவோ மஹாபாபிகளானவர்களுக்கும்

விதி வாய்க்கின்று } தப்பவொண்ணாத அருளாகிற விதி பலிப்பதாமளவில்

வாய்க்கும் கண்டீர் } பலித்தேவிடும்.

* * * [அம்மானாழிப்பிரான்] தம்முடைய சிறுமையையும் அவனுடைய ஒப்புயர்வற்ற பெருமையையும் நோக்குமிடத்து அவனுக்கும் நமக்கும் என்ன சேர்த்தியுண்டு! என்று பிற்காலிக்கவேண்டியிருக்கச் செய்தேயும் அவனுடைய க்ருபாரஸம் கரையழியப் பெருகினபடியாலே ஒரு நீராய்க் கலக்க நேரிட்டது என்கிறார்.

ஆழிப்பிரான் என்பதற்கு—திருவாழியாழ்வானைக் கையிலேந்திய பெருமான் என்றும், திருப்பாற்கடலிலே பள்ளிகொண்ட பரமபுருஷன் என்றும் பொருள் கொள்ளலாம். எவ்விடத்தான் என்றது—அவனுடைய பெருமை எப்படிப்பட்டது!, வாசாமகோசரமன்றோ என்றபடி. யானார் என்றது—என்னுடைய தாழ்வு பேச்சுக்கு நிலமோ என்றபடி. ஆக முதலடியினால்—எம்பெருமான் முன்னே நிற்பதற்கும் தாம் யோக்யரல்லர் என்பதை நிலையிட்டாராயிற்று.

ஆனாலும் ஒரு குறையில்லையென்கிறார் இரண்டாமடியினால். எல்லாவழியாலும் மஹாபாபங்களைப் பண்ணினவர்கள் திறத்திலும் எம்பெருமானுடைய பரமக்ருபை பெருகப்புக்கால் தடையுண்டோ என்கிறார்.

பெரும்பாலும் இப்பாசுரத்தைத் திருவுள்ளத்திற்கொண்டே வேதாந்த தேசிகன் தயாசதகத்தில் * நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி ஶபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி| அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரஸூதைஸ் ஸ்ரோதோபி: ப்ரணயஜலதே: ஶம்ஸதி பவாந்| ஸமேவி=நிஷேர்தாகாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி; அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரஸூதைஸ் ஸ்ரோதோபி: ப்ரணய ஜலதே: ஸமபவி. * என்கிற ச்லோகத்தை

அருளிச்செய்தார். குஹப்பெருமாள், ஸுக்ரீவமஹாராஜர், சபரீ, குசேலர், கூனி, இடைச்சிகள், மாலாகாரர் என்று இப்படிப்பட்டவர்களின் தாழ்வும் எம்பெருமானுடைய மேன்மையும் நிரவி ஒரு ஸமமாகக் கலந்து பரிமாறினபடி புராணங்களிலுள்ளது; மேடும் பள்ளமுமான நிலத்திலே பெருவெள்ளம் பெருகினால் மேடுபள்ளங்கள் நீங்கி ஸமநிலமாக ஆகும்படியைக் காணுகின்றோம்; அவ்வண்ணமாகவே அருள் வெள்ளம் பெருகியதனாலே எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள மேடுபள்ளமும் நிரவப்பட்டதாகிறதென்றவாறு.

கைம்மாதுன்பொழித்தாயென்று = தன் பெருமேன்மை பாராதே நீசர் திறத்திலும் வந்து தன்னைத் தாழவிட்டுக்கொடுக்கும் சீலம் எம்பெருமானுக்கு உண்டென்பது கஜேந்திராழ்வானை ரக்ஷித்த சரிதையிலே நன்கு விளங்காநின்றது. ஒரு களிறு ஒரு மடுவிலே ஒரு நீர்ப்புழுவாலே வாதிப்புண்டால், இதைப் பரிஹரிக்க அரைகுலையத் தலைகுலையத் திருநாட்டில் நின்று ஓடிவந்து, "பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனுமுன்னைக் காண்பான், எண்ணிலா வூழியூழித் தவஞ்செய்தார் வெள்கி நிற்ப, விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த" என்றும், ஸ்ரூஷ்வோஷாம்வராபேயாயம் ஷயாநஃ யிஷாதிக்ருந்மஜமஜமஜூோஜ மரூஸ்ரக் பூஷாம்பரமயதாயதம் ததாநஃ திவ் மாமித்பதகஜகர்ஜமாஜகந்த. * என்றும் பெரியார் ஈடுபடும்படியாக அருள்செய்தபடியை நோக்குங்கால் அஸம்பாவிதமான தொன்றுண்டோ? என்று காட்டுகிறார்.

கைம்மாதுன்பொழித்தாய்! என்று மெய்யன்புடையார் நெஞ்சுகனிந்து சொல்லும் சொல்லை நான் கபடபக்தியோடே சொன்னேன்; அதுமெய்யான பக்தியாகவே பரிணமித்து எம்பெருமானுடைய விஷயீகாரம் பெற்றுவிட்டேனென்றாராயிற்று. .... ... ... .... ... ... (எ)

மேலாத்தேவர்களும் நிலத்தேவரும்மேவித்தொழும் *
மாலார்வந்தினநாள் அடியேன்மனத்தேமன்னினார் *
ஈ சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும்நன்மக்களும் *
மேலாத்தாய்தந்தையும் அவரேயினியாவாரே. (அ)

| | |
|---|---|
| மேல் ஆம் தேவர்களும் | மிகச்சிறந்தவர்களான நித்யஸூரிகளும் |
| நிலம் தேவர்களும் | இவ்வுலகத்திலுள்ள பக்தர்களும் |
| மேவி தொழும் | விரும்பி வணங்குகின்ற |
| மாலார் | எம்பெருமான் |
| இன நாள் | இப்போது |
| வந்து | என்பக்கலிலே ஆபிமுக்யம்பண்ணிவந்து |
| அடியேன் மனத்தே | எனது நெஞ்சினுள்ளே |
| மன்னினார் | பொருந்தினார்; |
| இனி | இதுமுதலாக, |
| சேல் எய் கண்ணியரும் | மீனையொக்குடைய மாதர்களும் |
| பெரு செல்வமும் | மஹத்தான ஐச்வரியமும் |
| நல் மக்களும் | குணம்மிக்க பிள்ளைகளும் |
| மேல் ஆம் தாய் தந்தையும் | மேம்பட்ட மாதாபிதாக்களும் |
| அவரே ஆவார் | (எனக்கு) அப்பெருமானேயாவர். |

* * * [மேலாத் தேவர்களும்] எம்பெருமான் தன்னை ஆதரிப்பாரில்லாமே என்னை விஷயீகரித்தானல்லன்; பரம விலக்ஷணரானவர்கள் தன்னை அநுபவியாநிற்கச்செய்தேயும் அவர்களிடத்திற் காட்டில் அதிகமான விருப்பத்தை என் பக்கலிலே பண்ணி வந்து என்னுள்ளே புகுந்தானாகையால் அவனையே நான் ஸகலவித போக்யவஸ்துவாகவும் கொண்டேனென்கிறார்.

மேலாத் தேவர்களென்றது-ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்களினும் மேம்பட்டவர்களான நித்யஸூரிகளென்றபடி. நிலத்தேவர்—பிராமணர்கள். ஹூஸுரர்கள் என்பது வடமொழி வழக்கு. ஸ்ரீ வைஷ்ணவர்களை விவக்ஷிப்பதாகக் கொள்க. "மேலாத் தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்" என்ற சொற்சேர்க்கையை நோக்கி நம்பிள்ளையருளிச் செய்யும்படி;—"இளையபெருமாளும் இடக்கை வலக்கையறியாத குரங்குகளும் ஒக்கவடிமை செய்தாப்போலே இரண்டு விபூதியிலுள்ளாரும் ஒருமிடறாகச் சேர்ந்து அடிமைசெய்யும் ஸர்வாதிகனானவன்." என்று இப்படிப்பட்ட எம்பெருமான் "மாகடல் நீருள்ளான் மலராள் தனத்துள்ளான்" என்கிறபடியே திருப்பாற்கடலையும் பெரிய பிராட்டியார் திருமுலைத்தடத்தையும் விட்டு இங்கேவந்து நித்யஸம்ஸாரியான என்னெஞ்சிலே ஸ்தாவரப்ரதிஷ்டையாக இருந்தனன்.

[சேலேய் கண்ணியரும் இத்யாதி.] பெருமானைப் பின்தொடர்ந்த இளைய பெருமாள் "ஹ்ராதா ஸகூாவ வஐூவு ஷிதாவ 88 ராவவ:—ப்ராதா பர்த்தா ச பந்துச் ச பிதா ச மம ராகவ:" என்று பெருமானையே எல்லாவுறவுமுறையுமாகக் கொண்டிருந்ததுபோல, நானும் அப்பெருமானையே ஸகலவித பந்துவர்க்கமுமாகக் கொள்ளாநின்றேனென்கிறார். சேல்ஏய் கண்ணியர்—சேல் என்று மீனுக்குப் பெயர்; மீன்போன்ற கண்களையுடையவர்களென்று ஸ்த்ரீகளைச் சொல்லுகிறது. உலகத்தார் ஒவ்வொரு வஸ்துவைப் பற்றி நின்று ஒவ்வொரு இன்பம் அடைவர்கள்; நான் எம்பெருமானொருவனையே பற்றிநின்று எல்லாவகையான இன்பங்களையும் பெற்றேனாகிறேன் என்றதாயிற்று. (அ)

ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல்* பிறவிக்கடலுள் நின்றுநான் துளங்க *
தேவார்கோலத்தோடும் திருச்சக்கரம்சங்கினோடும் *
ஆவாவென்றருள்செய்து அடியேனொடுமானானே. (கூ)

துணை ஆவார் ஆர் என்று } காப்பாரொருவருமில்லையேயென்று கதறிக்கொண்டு

அலை நீர் கடலுள் அழுந்தும் } அலையெறிகின்ற கடலினுள்ளே அமிழ்ந்துகிற

நாவாய் போல் — படகுபோலே
நான் — அடியேன்
பிறவி கடலுள் — ஸம்ஸாரக்கடலினுள்ளே
நின்று துளங்க } நின்று சிரமப்படாநிற்கையில்,
(எம்பெருமான்)

| | | | |
|---|---|---|---|
| தேவு ஆர் கோ லத்தோடும் | திவ்யமான வடிவோடும் | ஆ ஆ என்று | ஐயோ ஐயோ வென்று |
| திரு சக்கரம் சங்கினொடும் | திருவாழி திருச்சங்குக ளோடேகூடி | அருள் செய்து | க்ருபைபண்ணி |
| | | அடியேனொடும் ஆனான் | என்னோடே கூடினான்- |

* * * [ஆவாரார்துணை.] இந்த ஸம்ஸார மண்டலத்திலே இதுகாறும் நான் பட்ட க்லேசங்களெல்லாம் தீர எம்பெருமான் தன்னுடைய பேரருளாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து என்னோடே கலந்தானென்கிறார்.

நாவாய் என்று கப்பலுக்குப் பெயர்; இங்குக் கப்பலையே பொருளாகக் கொள்ளலாம்; இலக்கணையால் கப்பலிலுள்ளவர்களையும் பொருளாகக்கொள்ள லாம். கப்பலையே பொருளாகக்கொள்ளும்போது, கரையிலுள்ளவர்கள் ஆவா ரார்துணையென்று கதறும்படியாக ஒரு கப்பல் கடலுள்ளே அழுந்துமாபோலே என்றதாகக்கொள்க. இப்பொருளில், துணையென்று என்றது 'துணையென்ன' என்றபடி. ஒரு கப்பலானது கடலுக்குள்ளே அழுந்திப்போரும் காலத்தில் அதைக்காணும் தடஸ்தர்கள் 'ஐயோ! இப்படி நீரினுள்ளே அழுந்துகின்ற இக் கப்பலுக்குக் கைகொடுப்பார் யாருமில்லையே!' என்று கதறுவர்கள்; அவ்வண் ணமாக அழுந்துகின்ற கப்பல்போலே என்றபடி. கோவு படுகிறோமென்கிற உணர்த்திகூட இல்லாமைக்காக இந்த த்ருஷ்டாந்தம்.

இனி, நாவாயிலுள்ளாரைக் கொள்ளும்பக்ஷத்தில் ஆவாரார்துணை யென் கிற வாக்கியம் அவர்களுடையதே யாகக்கடவது. இப்படி நான் பிறவிக்கடலுள் துளங்காநிற்கையில், எம்பெருமான் அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானத்தோடும் அவ்வடிவுக்குச் சேர்ந்த திவ்யாயுதங்களோடுங்கூடவந்து ஐயோ! ஐயோ!! என்று என் பக்கலிலே கருணை புரிந்து என்னோடேவந்து கலந்தான் என்றதாயிற்று.

"தேவார்கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும் அடியேனொடுமா னானே" என்பதற்கு—திருவாழி திருச்சங்குகளோடே பொருந்துமாபோலே அடியேனோடு பொருந்தினான் என்பதாகப் பொருள் நிர்வஹிப்பாரும். எம்பெரு மானார், "கூராராழி வெண்சங்கேந்திவாராய்" என்கிற ஆழ்வாருடைய விருப்பத் தின்படியே, கையுந்திருவாழியுமான கோலத்தோடே வந்து கலந்தானென்று நிர் வஹிப்பராம் ... ... .... .... .... (க)

ஆனானுடையானென்று அஃதேகொண்டுகந்துவந்து *
தானேஇன்னருள்செய்து என்னைமுற்றவும்தானானான் *
மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய் *
கானாரேனமுமாய் கற்கியாமின்னங்கார்வண்ணனே. (௰)

| பதம் | பொருள் |
|---|---|
| மீன் ஆய் ஆமையும் ஆய் நரசிங்கமும் ஆய் குறள் ஆய் | மீனாகவும் ஆமையாகவும் நரசிங்கமாகவும் வாமனமூர்த்தியாகவும் அவதரித்தும் |
| கான் ஆர் ஏனமும் ஆய் | வனவராஹமாய் அவதரித்தும் |
| இன்னம் | இவ்வளவுமன்றி |
| கற்கி ஆம் | கல்கியாக அவதரிக்கப் போகிறவனும் |
| கார் வண்ணன் | காளமேகவண்ணனுமிருக்கிற எம்பெருமான் |
| ஆள் உடையான் ஆனேன் என்ற அஃதே கொண்டு | என்னை யடிமைகொண்டவனுளன் என்று நான் சொன்ன நன்றிமொழியையே பற்றிக்கொண்டு |
| உகந்து வந்து | உகப்போடே வந்து |
| தானே இன் அருள் செய்து | தானாகவே இனிய கிருபையைப்பண்ணி |
| என்னை முற்றவும் தான் ஆனான் | எனக்கு ஸகல போக்ய வஸ்துக்களும் தானேயானான். |

* * * [ஆளுளுடையான்.] இப்படி நான் எம்பெருமான் திறத்திலே சிறிது க்ருதஜ்ஞாநுஸந்தானம் பண்ண, இதற்காகவும் அவன் போரத்திருவுள்ளமுவந்து முன்னிலும் அதிகமான ஸம்ச்லேஷத்தை என்னளவிலே பண்ணினனென்கிறார்.

'என்றஃதே' என்றவிடத்து, 'என்ற அஃதே' என்று பிரிக்கவேணும்; தொகுத்தல் விகாரம்; 'என்றவஃதே' என்றாகவேண்டுமிடத்துத் தொக்கது. 'எம்பெருமான் என்னை ஆட்கொண்டான்' என்று நான் நன்றிபாராட்டிச் சொன்னதுண்டு; அவன் தானே நெடுநாள் பண்ணின க்ருஷிபலித்து என்னை அடிமைகொண்ட வித்தனையொழிய நான் ஒரு க்ருஷி பண்ணிற்றிலேன்; உபகார ஸ்ம்ருதியாக நான் 'ஆளுடையனானேன்' என்று ஒரு வார்த்தை சொல்லினேனே, இவ்வளவையே எம்பெருமான் பற்றிக்கொண்டு, நான் அபேக்ஷியாதிருக்கத் தானே தன்பேறாக க்ருபையைப் பண்ணிவந்து கலந்தான்.

என்னை முற்றவும் தானானான்' என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் பணிப்பர்; (1) உள்ளோடு புறம்போடு வாசிபறக்கலந்தான்; (2) எனக்கு ஸகலவித போக்யமுமானான்.

இக்குணம் அவனிடத்து ஆச்சரியமன்று என்பதைப் பின்னடிகளாலே நிரூபிக்கிறார்போலும். மத்ஸ்ய கூர்ம வராஹாதிகளான அவதாரங்களைச்செய்து ஆட்படுத்திக்கொள்ளும் வழி தேடுவதையே இயல்வாகவுடையவனன்றோ என்கை.

இன்னங்கார்வண்ணனே—நீர்கொண்டெழுந்த காளமேகமானது மேன்மேலும் வர்ஷிக்க எழுச்சிகொண்டிருக்குமாபோலே எம்பெருமானும் பண்ணின அவதாரங்களில் த்ருப்திபெறாதே இன்னமும் அவதரிக்கவே திருவுள்ளம்பற்றியிருக்கிறபடியைச் சொன்னபடி ... .. .... (௧௦)

கார்வண்ணன்கண்ணபிரான் கமலத்தடங்கண்ணன்தன்னை *
ஏர்வளவொண்கழனிக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
சீர்வண்ணவொண்தமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும் *
ஆர்வண்ணத்தாலுரைப்பார் அடிக்கீழ்புகுவர்போலிந்தே. (௧௧)

| | |
|---|---|
| கார் வண்ணன் | மேகவண்ணனும் |
| கண்ணபிரான் | ஸர்வஸுலபனும் |
| கமலம் தட கண்ணன் தன்னை | தாமரைபோன்று விசாலமான திருக்கண்களையுடையனுமான எம்பெருமானைக்குறித்து, |
| ஏர் வளம் ஒண் கழனி | ஏர்களின் மிகுதியையுடைத்தாய் அழகியவான கழனிகளையுடைய |
| குருகூர் | திருநகரிக்குத்தலைவரான |
| சடகோபன் | ஆழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்த |
| சீர் வண்ணம் ஒண் தமிழ்கள் | சீரும் வண்ணமும் குறையாத தமிழினுலான |
| இவை ஆயிரத்துள் இபத்தும்—; | |
| ஆர் வண்ணத்தால் | அமிருதபானம் பண்ணுமாபோலே |
| உரைப்பார் | ஓதுமவர்கள் |
| பொலிந்து | ஸம்ருத்தியோடேயிருந்து |
| அடி கீழ் | அவ்வெம்பெருமான் திருவடிகளின் கீழே |
| புகுவார் | புகப்பெறுவர்கள். |

* * * [கார்வண்ணன்.] இப்பத்தும் வல்லவர் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ மிக்கவர்களாய்க்கொண்டு எம்பெருமான் திருவடிக்கீழே புகுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். காளமேக ச்யாமளனும் செந்தாமரைக் கண்ணனும் ஆச்ரித ஸுலபனுமான எம்பெருமானைக் குறித்துச்சொன்ன இத்திருவாய்மொழியை அம்ருத பானம் பண்ணுவாரைப்போலே சொல்லவல்லவர்கள் "எம்பெருமானுரைப் போலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடேயிருந்து" பின்பு தாய்நிழலிலே யொதுங்குவாரைப்போலே அவன் திருவடிகளிலே புகப்பெறுவர் என்றதாயிற்று.

ஆர்வண்ணத்தால்=ஆர்தலாவது பானம் பண்ணுதல்; பட்டர் ஸ்ரீகுண ரத்ந கோசத்திலே "ஸூக்திம் ஸமக்ரயது..........யாம் கண்டே கர்ண குஹரா: கவயோ தயந்தி" என்றார்; சொற்களைச் சொல்லும்போது ஏனோதானோவென்று சொல்லுகையன்றிக்கே நெஞ்சுகனிந்து சொல்லவேணும்; அம்ருதபானம் பண்ணுவதாகவே நினைக்கவேணும். ... ... .... ... ..(கக)

முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

சக்ரஸ்பாயத்கரத்வாத் ஸ்வஜநவசதயா ரக்ஷணோத்யுக்தபாவாத்
பவ்யத்வாத் ஸ்வாத்மதாநாதமலதநுதயா ஸ்ரீகஜேந்த்ராவநாச்ச ।
நாநாபந்துத்வயோகாதகிலவிபதபவ்யாஜ ஆர்த்திஜுஷாம்
காருண்யாதீநவ்ருத்திம் கமலநயநமவைத் ஆர்த்திஹம் க்ருஷ்ணதாம ॥

* கையார் சக்கரத்தென்கிற திருவாய்மொழியிலே கமலக்கண்ணனை எம்பெருமானுடைய திருவருளைப் பெற்றதனாலே க்ருதார்த்தரான நம்மாழ்வார் அப்பெருமானை [காருண்யாதீநவ்ருத்திம் அவைத்] க்ருபைக்குப் பரவசனாக அநுஸந்தித்தாரென்கிறது.

1. சக்ரஸ்பாயத்கரத்வாத். * கையார்சக்கரத்து * திருவாழியாழ்வானாலே விளங்குகின்ற திருக்கைகளை யுடையவனானபடியாலும்.

2. ஸ்வஜநவசதயா. * தானே லெம்பெருமானவனென்னாகி யொழிந்தான் * அடியார் இட்ட வழக்காய் நிற்கையாலும்.

3. ரக்ஷணோத்யுக்தபாவாத். * வெள்ளத்தணைக்கிடந்தாய் * ஆர்த்தர்களின் கூக்குரலைக் கேட்டு அவர்களுக்கு உதவுகைக்காகத் திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டிருப்பவனானதலாலும்.

4. பவ்யத்வாத். * கூவியருளாய் கண்ணனே ! * ஸ்ரீ க்ருஷ்ணனாகத் திருவவதரித்து விதேயனாயிருந்தமையாலும்.

5. ஸ்வாத்மதாநாத். * கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை யமுதை.* அடியவர்கட்குத் தன்னை முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுத்தருளுந்தன்மையாலும்.

6. அமலதநுதயா. * கருமேனியம்மான் தன்னையே * அழகிய திருமேனியையுடைமையாலும்.

7. ஸ்ரீகஜேந்த்ராவநாச்ச. * கைம்மா துன்பொழித்தாயென்று. * கஜேந்திராழ்வானைக் காத்தருளினபடியாலும்.

8. நாநாபந்துத்வயோகாத். * சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையுமவரே யினியாவாரே. * ஸகலவித பந்துவுமாயிருக்கையாலும்.

9. விபதி ஸகீயா: * ஆபத்துக்குத் தோழன்போல் உதவுமவனுகையாலும்.
செய்த. * ஆபத்துக்குத் தோழன்போல் உதவுமவனுகையாலும்.

10. வ்யாஜமாத்ராபிலாஷீ. * அருளுடையானென்றஃதே கொண்டுகந்துவந்து தானே யின்னருள்செய்து * விஷயீகரிப்பதற்கு ஏதேனுமொரு வியாஜமாத்திரத்தையே நோக்கியிருப்பவனுதலாலும். ஆக இத்தகைய காரணங்களைக்கொண்டு ஆழ்வார் எம்பெருமானைப் பரமகாருணிகனுக அறுதியிட்டாரென்றதாயிற்று.

நாப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத்ஸங்கதி.

ஷஷ்ட்யா ஹிதஸ்ய கதநஸ்ய ததா ப்ரஸக்தம்
ஶ்ரேய: ஸ்வகீயஹிதவாய நரீக்ஷமாண: ।
ஸாத்விரோதிவஸநேபி ஸ்வ த்ருப்தசேதா:
ஸௌரே: க்ருபைவ மஹதீதி ஶமம்ஸ முநி: ॥ (சக)

(கருத்து.) ஐந்தாம்பத்தினுடைய முதல் திருவாய்மொழியிலே, மேழ் தம்முடையவர்களுக்குத் தாம் ஹிதமுரைத்ததை நன்மையாகவே முடியக்கண்ட ஆழ்வார், விரோதிகள் மிக்க இக்கிலத்திலிருக்கும் தமக்கு எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான திருவருள் வாய்த்தபடியை வியந்து கூறினாராயிற்று. * ஒன்றுந்தேவு மென்கிற திருவாய்மொழிக்கு அடுத்தபடியாகவே பொலிக பொலிகவென்கிற திருவாய்மொழி இருக்கத்தக்கது; ஏனென்றால், ஒன்றுந்தேவில் பண்ணின பரோபதேசம் பலிக்கக்கண்டு அதற்கு மங்களாசாஸநம் பண்ணுகிறபடியாகவே பொலிக பொலிக வென்பது அவதரித்திருக்கையாலே. ஆகிலும், இப்படி உபதேசித்துத் திருத்தவேண்டிய ஸம்ஸாரிகளினிடையே தாம் ஒருவர் மாத்திரம் உபதேசிக்க வல்லவராக இருந்த படியை ஆராய்ப்புகுந்து எம்பெருமானுடைய ஆச்சரியமான கருணைத் திறத்தைப்பற்றி அதிசயித்து அருளிச்செய்தாராயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



# திருவாய்மொழி நூற்றந்தாதி.

கையாருஞ் சக்கரத்தோன் காதலின்றிக்கே யிருக்க *
பொய்யாகப் பேசும் புறனுரைக்கு *—மெய்யான
பேற்றை யுபகரித்த பேரருளின் தன்மைதனை *
போற்றினனே மாறன் பொலிந்து.

| | |
|---|---|
| காதல் இன்றிக்கே இருக்க | (பகவத்விஷயத்தில்) அன்பு இல்லாமலிருக்க |
| பொய் ஆக பேசும் | கபடமாகப் பேசுகின்ற |
| புறன் உரைக்கு | வஞ்சக வார்த்தைகளையே பற்றாசாகக் கொண்டு, |
| கை ஆரும் சக்கரத்தோன் | திருக்கையிலமர்ந்த திருவாழியையுடையனான எம்பெருமான் |
| மெய் ஆன பேற்றை | உண்மையான புருஷார்த்தத்தை |
| உபகரித்த | உதவிசெய்த |
| பேர் அருளின் தன்மை தனை | மஹா கருணையின் நிலைமையை |
| மாறன் | ஆழ்வார் |
| பொலிந்து | திருவுள்ளவுகப்புடன் |
| போற்றினன் | சிறப்பித்துக்கூறினர். |

* * * எம்பெருமான் தன்பக்கலில் உள்ளுருகி பக்திசெய்பவர் திறத்தில் கருணை புரிவதுபோலவே, உள்ளூறின பக்தியின்றிக்கே கபடமான பக்தியைச் செய்பவர் திறத்திலும் கருணைபுரிவதுண்டு; இதை ஆழ்வார் தம் பக்கலிலே அநுபவஸித்தமாகக் கண்டாராதலால், தாம் கண்டவதனை இத்திருவாய்மொழியில் எடுத்துரைத்தாராயிற்று.

"கையாருஞ் சக்கரத்தோன்" என்பது 'உபகரித்த' என்பதிலே அந்வயிக்கும்.

புறனுரை = வேற்றுரை என்றபடி. உள்ளேயில்லாமல் வெளியிலே மாத்திரஞ் சொல்லுகிற வார்த்தை. முதல் திருவந்தாதியில் (41.) "புறனுரையேயாயினும்" என்றதுங் காண்க. 'புறனுரை' என்பதற்குப் பழிச்சொல் என்கிற பொருளும் உண்டு; பெரிய திருமொழியில் (6—4—7.) "இவன் பொல்லான் திரைந்தானென்னும் புறனுரை கேட்பதன்முன்" என்றது காண்க. .... .... .... .... .... (சக)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—இரண்டாந் திருவாய்மொழி,

## பொலிக பொலிக பொலிக.

உரையவதாரிகை :—இவ்விபூதியிலுண்டான ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறது இத்திருவாய்மொழி. இப்போது இந்த மங்களாசாஸனத்திற்கு ப்ரஸக்தி ஏதென்னில்; கீழே நாலாம்பத்தில் * நண்ணாதார் முறுவலிப்ப வென்னும் பதிகத்திலே ஆழ்வார் ஸம்ஸாரிகளின் கிலேசங்களை அநுஸந்தித்து, அதற்குப் பரிஹாரமாக * ஒன்றுந்தேவு மென்கிற பதிகத்திலே எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பரக்கப்பேசித் திருத்த, அத்தாலே திருந்தி, ஸம்ஸாரம் பரமபதம் என்கிற வேற்றுமையற்று அங்குள்ளாரும் இங்கே வரலாம்படி யிருக்குமிருப்பைக்கண்டு மங்களாசாஸனம் பண்ணுகிறாராயிற்று.

ஆழ்வாருடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயைக் காண்பதற்காக நித்யஸூரிகள் நித்ய விபூதியில் நின்றும் இந்நிலத்திலே யெழுந்தருள, அவர்களுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார் என்றும் சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்களாம். ஆழ்வாருடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயாவது, ஆழ்வாருடைய உபதேசம் கேட்டுத் திருந்தின ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஸம்ருத்தியாகிற ஸ்ரீயாம். இந்த ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே ஸாக்ஷாத்தாக இத்திருவாய்மொழியால் மங்களாசாஸநம் செய்வதாக ஒரு நிர்வாஹம். இந்த ஸ்ரீ வைஷ்ணவர்களைக் காண்கைக்காக லோகாந்தரத்தில் நின்றும் வந்தவர்கட்கு மங்களாசாஸநம் செய்வதாக மற்றொரு நிர்வாஹம். ஆசார்ய ஹ்ருதயத்தில் — ' அடிமைபுக்காரையும் ஆட்செய்வாரையுங் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும்போந்த தேவர்குழாங்களைக் கண்டு காப்பிட்டு '' என்றருளிச் செய்ததும் இங்கு அநுஸந்தேயம். .... .... (*)

பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம் *
நலியும்நரகமும்நைந்த நமக்கிங்குயாதொன்றுமில்லை * ஈ
கலியும்கெடும்கண்டுகொண்மின் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
மலியப்புகுந்திசைபாடி ஆடியுழிதரக்கண்டோம். (க)

| | | | |
|---|---|---|---|
| பொலிக பொலிக பொலிக | வாழ்க! வாழ்க! வாழ்க! | சாபம் | பாவமானது |
| உயிர் | ஜீவராசிகளுக்குண்டான | போயிற்று | தொலைந்தது; |
| வல் | வலிதான | நலியும் | வருத்தத்தை விளைவிக்கக்கூடிய |
| | | நரகமும் | நரகலோகங்களும் |

| | | | |
|---|---|---|---|
| நைந்த | அழிந்துபோயின; | கடல் வண்ணன் | கடல்போன்ற நிறத்தையுடையவனான பகவானுடைய |
| இங்கு | இவ்விபூதியில் | பூதங்கள் | பக்தர்கள் |
| நமனுக்கு | யமனுக்கு | மண் மேல் | இந்நிலத்தில் |
| யாது ஒன்றும் இல்லை | ஒரு காரியமுமில்லை; | மலிய புகுந்து | நிரம்பி |
| கலியும் | கலிபுருஷனும் | இசை பாடி | இனிய பாட்டுக்களைப் பாடிக்கொண்டு |
| கெடும் | (விரைவில்) தொலையக் கடவது; | ஆடி உழிதர கண்டோம் | இங்குமங்கும் நடமாடக் காண்கிறோம். |
| கண்டு கொண்மின் | (அதை) ப்ரத்யக்ஷமாகக் காண்பீர்கள்; | | |

* * * [பொலிக பொலிக.] இந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்திக்கு எப்போதும் ஒரு குறையில்லாமலிருக்கவேணுமென்று காப்பிடுகிறார். "ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:" என்று வேதம் முப்முறை ஓதுமாபோலே இங்கும் "பொலிக பொலிக பொலிக" என்று மும்முறை ஓதுகிறபடி.

போயிற்று வல்லுயிர்ச்சாபம் = சாபம் என்கிறது பாபத்தை; அவசியம் அநுபவித்தே தீரவேண்டுகையாலே. ஆத்மாவைப்பற்றிக் கிடக்கிற அவித்யை முதலானவை தொலைந்துபோயினவென்றபடி.

நலியும் நரகமும் நைந்த = இனி நரகங்களை யநுபவிக்க ஆளில்லாமையாலே அவை புல்லெழுந்தொழிந்தனவென்கை. 'நைந்த' என்றது நைந்தன என்றபடி; அன்சாரியை பெறாத பலவின்பால் இறந்தகாலவினைமுற்று.

நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை = யமன் ஆராய்ச்சி செய்வதற்கு இங்கு விஷயமொன்றுமில்லை. யமலோகம் புகுவார் இருந்தாலன்றோ அவன் கணக்குப்பார்க்கவேண்டுவது. "சித்திரகுத்த னெழுத்தால் தென்புலக்கோன் பொறிபொற்றி. வைத்தவிலச்சினை மாற்றித் தூதுவரோடி யொளித்தார்" என்னும்படியாயிற்றென்கை.

கலியுங்கெடும் = கலிபுருஷனும் விரைவில் தொலைந்திடுவானென்கிறார். ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில் "தமிழ்மாமுனிதிக்கு சரண்யமென்றவர்களாலே" என்கிற சூர்ணிகையில் "கலியுங்கெடும்போலே ஸூசிதம்" என்றவிடத்திற்கு வியாக்கியான மருளிச்செய்யாநின்ற மணவாளமாமுனிகள் "இவர்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே 'கலியுங்கெடும்' என்று—திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல்வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

கண்டுகொண்மின் என்பதனால் இதில் ஸந்தேஹமில்லாமை காட்டப்பட்டதாகும். அநுபவத்தாலே அறியுமதுக்கு உபதேசம் வேணுமோவென்கை.

இப்படிச் சொல்லுவதற்குக் காரணம் இன்னதென்கிறது மேல்—கடல் வண்ணனென்று தொடங்கி. இதுவன்ரையில் பாகவத ஸஞ்சாரமில்லாமையாலே வல்லுயிர்ச்சாபம் நிலைபெற்று, நலியும் நரகமும் மலிந்து, நமனுக்கும் விசேஷ விருந்து கிடைத்துக்கொண்டிருந்தது; இப்போது பாகவத ஸஞ்சாரம் மிக மிக வுண்டானபடியாலே "போயிற்று வல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும் நைந்த, நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை, கலியுங்கெடும்" என்று உறுதிகூறத் தடையில்லை யென்றபடி.

பூதங்கள் = வடமொழியில் "𑌭𑍂 - 𑌸𑌤𑍍𑌤𑌾𑌯𑌾𑌂" [பூ - ஸத்தாயாம்] என்கிற தாதுவடியாகப் பிறந்தது பூதம் என்னுஞ்சொல், ஸத்தை பெற்றது என்று பொருள். எம்பெருமானது திருக்குணங்களை யநுபவித்தே ஸத்தை பெற்றவர்கள் என்றவாறு. .... .... .... .... (க)

**கண்டோம்கண்டோம்கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம் ***
**தொண்டீர்! எல்லீரும்வாரீர் தொழுதுதொழுதுநின்றார்த்தும் ***
**வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள்மண்மேல் ***
**பண்டான்பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்றனவே.** (உ)

| | |
|---|---|
| வண்டு ஆர் | (மதுபானத்திற்காக) வண்டுகள் பொருந்திய |
| தண் அம் துழாயான் | குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையை யணிந்தவனுன |
| மாதவன் | திருமாலினது |
| பூதங்கள் | பக்தர்கள் |
| மண் மேல் | இவ்வுலகத்திலே |
| பண் | இராகங்களை |
| பாடி நின்று ஆடி | பாடிக்கொண்டு ஆடிக்கொண்டு |
| பரந்து | எங்கும் பரவி |
| திரிகின்றன | உலாவுகின்றனர்; |
| கண்ணுக்கு இனியன | (இப்படி) கண்ணுக்குப் பரமபோக்யமான நிலைமைகளை |
| கண்டோம் கண்டோம் கண்டோம் கண்டோம்—; | |
| தொண்டீர் எல்லீரும் | பாகவதர்களான ஸகல பேர்களும் |
| வாரீர் | வாருங்கள்; |
| தொழுது தொழுது நின்று | நன்றாகவணங்கி |
| ஆர்த்தும் | ஆரவாரிப்போம். |

* * * [கண்டோங்கண்டோம்.] ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்தியைக்கண்ட ஆழ்வார் இந்த ஸம்ருத்தியை யநுபவிப்பதற்கு மற்றும் பல அநுகூலர்களையும் ஆதரத்தோடு அழைக்கிறார். தம்மால் அழைக்கப்படுகின்றவர்கள் விரைந்து ஓடிவர ஆசைப்படுதற்குறுப்பாக "கண்டோங் கண்டோங் கண்டோம்" என்று பெருமிடறு செய்கிறார்போலும். கீழே * நண்ணாதார் முறுவலிப்பவிலே "கொடுவுலகங் காட்டேலே" என்று சொல்லும்படியாக அபாகவதர்களைக்கண்ட கசப்புத்தீர ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியைக் கண்ணாரக் காணப்பெற்றோமென்கிறார் கண்ணுக்கினியன கண்டோம் என்று.

தொண்டீர்! எல்லீரும்வாரீர் = "மெய்யடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக் கூடுமேல் அதுகாணும் கண்பயனாவதே" என்றும் "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே" என்றும் பாகவத கோஷ்டியின் சுவட்டிலிருக்குமவர்களே! நீங்கள் ஒருவர் தப்பாமல் கடுக வாருங்கள். எதற்காகவென்ன;

தொழுது தொழுது நின்று ஆர்த்தும் = இத்திரளைத் தொழுகைதானே பரம ப்ரயோஜனமன்றோ? ப்ரயோஜனத்துக்கொரு ப்ரயோஜனம் வேணுமோவென்கிறார். ஆர்த்தும்—தன்மைப் பன்மை வினைமுற்று. கோலாஹலம் பண்ணுவோம் என்றபடி.

யாரைத்தொழுவது? என்ன; பின்னடிகளினால் விவரிக்கின்றார். எம்பெருமான் * தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் தண்ணந்துழாய் புனைந்திருக்குமழகையும் அதிலே வண்டுகள் மதுப்பருக ஆர்த்திருக்கும்படியையும், அப்பெருமான் தான் திருவின்மணாளனாயிருந்து அடியாரை நோக்குகிறபடியையும் நல்ல இசைகளிலே இட்டுப்பாடித் தொண்டர்கள் ஸம்ப்ரமம் பண்ணுகின்றார்கள்; இக்காட்சியைக் காண வாருங்கள் என்றாராயிற்று. .... .... .... .... (உ)

திரியுங்கலியுகம்நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து *
பெரியகிருதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம்பெருக *
கரியமுகில்வண்ணனெம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
இரியப்புகுந்திசைபாடி எங்குமிடம்கொண்டனவே. (௩)

| | | | |
|---|---|---|---|
| திரியும் | தருமங்கள் தலைகீழாக ஆகும்படியான | கடல் வண்ணன் | கடல்வண்ணனுமுள்ள. |
| கலியுகம் | கலியுகமானது | எம்மான் | எம்பெருமானுடைய |
| நீங்கி | தொலையப்பெற்று | பூதங்கள் | பக்தர்கள் |
| பெரிய | தருமம் சிறந்த | மண் மேல் | இவ்விபூதியிலே |
| கிருதயுகம் | கிருதயுகமானது | இரிய புகுந்து | மிக்க கோலாஹலங்களுடன் வந்து |
| பற்றி | வந்துபுகுந்து | இசை பாடி | கீதங்களைப் பாடிக்கொண்டு |
| தேவர்கள் தாமும் புகுந்து | தேவப் பிரகிருதிகளும் தாமாகவே நெருங்கி | எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| பேர் இன்பம் வெள்ளம் பெருக | மஹத்தான ஆனந்த வெள்ளம் பெருகும்படியாக | இடம் கொண்டன | வியாபித்துவிட்டார்கள் |
| கரிய முகில் வண்ணன் | காளமேகவண்ணனும் | | |

* * * [திரியுங் கலியுகம்.] நித்யஸூரிகளும் இந்நிலத்திலே அடியிட்டு வந்து சேர்ந்து ஒன்றுகூடிப் பரிமாறலாம்படி ஸம்ஸாரமண்டலம் முழுவதும் ஸ்ரீவைஷ்ணவமயமாயிற்றென்கிறார்.

திரியுங் கலியுகம் நீங்கி = கலிபிறந்த நாற்பத்துமூன்றாநாளிலே ஆழ்வார் அவதரித்தாரென்று பெரியார் கூறுவர்; இன்னமும் நெடுங்காலம் தான் செங்கோல் செலுத்துவதாக வந்துபுகுந்த கலிபுருஷன் சிதையும்படியாயிற்று ஆழ்வாருடைய பெருமை. திரியுங் கலியுக மென்றது தருமமார்க்கம் ருஜுவாக இருக்கையன்றிக்கே தலைகீழாக இருக்கும்படியான கலியுகமென்றபடி. மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில்—"நஶ்ருண்வந்தி பிதுஃ புத்ரா ந ஸ்நுஷா ந ஸஹோதராஃ | நப்ருத்யா நகலத்ராணி பவிஷ்யத்யதமோத்தரம் = ந ச்ருண் வந்தி பிதுः புத்ரா ந ஸ்நுஷா ந ஸஹோதராः, ந ப்ருத்யா ந கலத்ராணி பவிஷ்யத்யதமோத்தரம்." என்று சொல்லிற்று; கலியுகத்தில் தகப்பன் பேச்சை மகன் கேளான்; மாமியார் பேச்சை மணாட்டுப்பெண் கேளாள்; தமையன் பேச்சைத் தம்பி கேளான்; ஸ்வாமியின் பேச்சை வேலைக்காரன் கேளான்; கணவன் பேச்சை மனைவி கேளாள்; எல்லாம் தலைகீழாகவே ஆகப்போகிறது என்பது அந்த சுலோகத்தின் பொருள். ஆழ்வார் அதைத் திருவுள்ளம்பற்றித் திரியுங் கலியுக மென்கிறார்.

தேவர்கள் தாமும் புகுந்து—இங்குத் தேவர்கள் என்பது இந்திரன் முதலிய தேவர்களையன்று; அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. இந்தக் கொடுவுலகத்திலே அவர்கள் அடியிடுதற்கே ப்ரஸக்தியில்லை; அப்படியிருந்தும், அவர்கள் இங்கே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியைக் கண்டு இத்திரளிலே நாமுங்கலந்து பரிமாறி ஸத்தை பெறவேணுமென நினைத்து இங்கே புகுந்தார்களாயிற்று.

பெரியகிதயுகம்பற்றி = பெரிய க்ருதயுகமென்றால் சிறிய க்ருதயுகமும் ஒன்றுண்டோவென்று சங்கிக்கவேண்டா; த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்றிப்படி வேறு யுகங்களாலே விச்சேதமின்றிக்கே ஒரு போகியாக வளர்ந்த கிருதயுக மென்றபடி. ஆதி ஸ்ருஷ்டியில் கிருதயுகத்தைச் சொல்லுகிறது என்பாருமுண்டு.

பேரின்பவெள்ளம் பெருக = 'பரமபதத்தில் ஆனந்தமும் சிற்றின்பம்' என்று சொல்லும்படியாக, பகவதநுபவ ஆனந்தம் இங்கிலத்திலே அதிசயித்ததாயிற்று. எதனாலே யென்ன;

[கரியமுகில்வண்ணனித்யாதி.] இராமபிரான் சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கும்போது அவனைக் காணப் புறப்பட்ட அயோத்யாவாஸிகள் "மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்வம் த்ருடவ்ரதம் | கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகதஃ ஶோகநாஶநம் = மேகச்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்வம் த்ருடவ்ரதம், கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகதச் சோகநாசநம்" என்று எழில் மேகவண்ணனை இராமபிரானை என்று காண்போம்! என்று காண்போம்!! என்று வாய் வெருவிக்கொண்டே வந்தாற்போல எம்பெருமானுடைய வடிவழகு தன்னிலேயே சபலர்களான பாகவதர்கள் இந்நிலத்திலே நிரம்பிவிட்டார்கள்.

இரிய — ப்ரீதிகோலாஹலம் பிறக்கும்படியென்கை. இரிதலாவது — இருந்தவிடத்திலில்லாமை. ... ... .... .... (கூ)

இடங்கொள்சமயத்தையெல்லாம் எடுத்துக்களைவனபோலே *
தடங்கடல்பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதங்களேயாய் *
கிடந்துமிருந்துமெழுந்தும் கீதம்பலபலபாடி *
நடந்தும்பறந்தும்குனித்தும் நாடகம்செய்கின்றனவே. (௪)

| | | | |
|---|---|---|---|
| இடம் கொள் சமயத்தை எல்லாம் | எங்கும் நிறைந்த துஷ்டமதங்களையெல்லாம் | கிடந்தும் | படுத்துக்கொண்டும் |
| எடுத்து களைவன போலே | வேர்பறியாகப் பறித்துத் தொலைப்பாரைப் போலே | இருந்தும் | உட்கார்ந்துகொண்டும் |
| தட கடல் பள்ளி பெருமான் தன்னுடை பூதங்களே ஆய் | ஸமுத்ரசாயியான பகவானுடைய பக்தர்களே மலிந்து | எழுந்தும் | நின்று கொண்டும் |
| | | பல பல கீதம் பாடி நடந்தும் | பலபல பாட்டுக்களைப் பாடிக்கொண்டே நடந்துகொண்டும் |
| | | பறந்தும் | தரையில் கால் பாவாதபடி |
| | | குனித்தும் | கூத்தாடிக்கொண்டு |
| | | நாடகம் செய்கின்றன | களித்துத் திரியாநின்றார்கள். |

* * * [இடங்கொள்.] உலகத்திலே மிகச்சிறந்த வஸ்துக்கள் ஸ்வல்பமாகவும் உபயோகமற்ற வஸ்துக்கள் அபரிமிதமாகவும் விளைவது இயல்பு. ஸங்கல்பஸூர்யோதயத்தில் தேசிகன் “ [illegible] — ஸர்வத: கரவீராதீந் ஸூதே ஸாகரமேகலா, ம்ருதஸஞ்ஜீவிநீ யத்ர ம்ருக்யமாணதசாம் கதா.” என்றொரு ச்லோக மருளிச்செய்கிறார்; இந்நிலத்தில் நச்சுப்பூண்டுகளான அலரி முதலியவை மிகைமிகையாக விளைகின்றன; உயிரைமீட்கும் ஒஷதிகள் மாருதிபோல்வார் பாடுபட்டுத் தேடிப் பிடித்துக் கொணரவேண்டும்படி மிகவும் அருமைப்பட்டிருக்கின்றனவென்பது அந்த ச்லோகத்தின் கருத்து. இதுபோலவே இவ்வுலகில் பாஹ்யமதங்கள் குத்ருஷ்டிமதங்கள் என்று சொல்லப்படுகிற தீயமதங்கள் மலிந்தும், ஆஸ்திகமதம், வைதிகமதம் என்று உண்மையில் சிறப்பித்துக் கூறப்படுகிற மதம் மிக விரளமாயுமிருக்கும். அங்ஙனம் மலிந்து கிடக்கிற துஷ்ட மதங்களையெல்லாம் பறித்துப் பொகடுவாரைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்கள் மலிந்துவிட்டார்களென்கிறார். இதன் கருத்து என்னென்னில்; * [illegible] = யே கண்டலக்நதுலஸீநலிநாக்ஷமாலா: யே பாஹுமூலபரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி. * இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஸ்ரீவைஷ்ணவசிகாமணிகள்

காணவினிய அழகிய லக்ஷணங்களில் குறைவின்றியே பளபளவென்று விளங்கும் படியைக் கண்டால், கண்டகாட்சியிலேயே அவைதிகமதங்கள் அவிந்துபோமத்தனை. விளக்கு வரக் கண்டவாறே இருள் தன்னடையே சிதைந்தொழியுமா போலே ஸ்ரீவைஷ்ணவர்களின் லக்ஷண அமைதியைக் கண்டவாறே அவைதிக மதங்கள் அவிந்துபோகத் தட்டுண்டோ ?

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின் ;—" போலே யென்பானென்னென்னில் ; ஸாத்விகர்க்குப் பிறரை நலியவேணுமென்றொரு அபிஸந்தியில்லையிறே ; நெற்செய்யப் புல் தேயுமாப்போலே இவர்கள் நின்ற நின்ற அவை தன்னடையே தேயுமத்தனை " என்பதாம். பரம ஸாத்விகர்களான பெரியார்கள் பிறர்களது அர்த்தங்களையும் ஆசாரங்களையும் அழகுபடக்காட்டும் முகத்தாலேயே பிறர்களுடையவற்றைக் கண்டித்தார்களாவர்.

இப்படிப்பட்ட மஹா ஸ்ரீவைஷ்ணவர்கள் இக்கிலத்திலே மலிந்து பகவதநுபவத்தாலுண்டான மகிழ்ச்சியாலே பல பாட்டுக்களைப் பாடியும் மநோஹரமாக உலாவியும் துள்ளிக்குனித்தும் பண்ணுகிற ஸம்ப்ரமங்கள் என்னே ! என்று ஈடுபடுகிறாராயிற்று.

" எம்பெருமானுடைய ஸ்திதி கமநஸயநாதிகளை நாம் கொண்டாடுமாப்போலேயும், ஆளவந்தார் நடையை ராஜா கொண்டாடினாப்போலேயும் இவர் கொண்டாடுகிறபடி " என்பது ஈடு. இப்பாசுரத்தின் பின்னடிகளின் அமைப்பை நோக்கி இது அருளிச்செய்தபடி. .... ... (ச)

செய்கின்றதென் கண்ணுக்கொன்றே ஒக்கின்றதிவ்வுலகத்து *
வைகுந்தன்பூதங்களேயாய் மாயத்தினாலெங்கும்மன்னி *
ஐயமொன்றில்லை அரக்கரசுரர்பிறந்தீருள்ளீரேல் *
உய்யும்வகையில்லைதொண்டர் ! ஊழிபெயர்த்திடும்கொன்றே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| செய்கின்றது | இவர்கள் செய்கிற காரியம் | பிறந்தீர் உள்ளீர் எல் | பிறந்தவர்களாயிருப்பீர்களாகில் |
| என் கண்ணுக்கு | நான் பார்க்குமிடத்து | தொண்டீர் | இதரவிஷயங்களிலே சபலர்களாயிருப்பவர்களே! |
| ஒன்றே ஒக்கின்றது | ஒன்றுபோலே யிராநின்றது; | கொன்று | உங்களைக் கொலைசெய்து |
| இ உலகத்து | இவ்விபூதியிலே | ஊழி பெயர்த்திடும் | யுகத்தையே மாற்றிவிடுவர்கள்; [கலியுகத்தைக் கிருதயுகமாகவே ஆக்கிவிடுவர்கள்.] |
| வைகுந்தன் பூதங்களே | பகவத்பக்தர்களே | | (ஆதலால் உங்களுக்கு) |
| மாயத்தினால் | யதேஷ்டமாக | உய்யும் வகை இல்லை | பிழைக்கும் வழி இல்லை; |
| எங்கும் மன்னி | எல்லாவிடங்களிலும் நிறைந்து | ஐயம் ஒன்று இல்லை | (இதில்) சிறிதும் ஸந்தேஹமில்லை. |
| ஆய் | இருக்கின்றார்கள்; | | |
| அரக்கர் | ராக்ஷசர்களாகவும் | | |
| அசுரர் | அசுரர்களாகவும் | | |

* * * [செய்கின்றது]. இவ்வுலகத்தில் பலபல கார்யங்கள் நடைபெற்றுவந்தா லும் அவையொன்றும் ஆழ்வாருடைய திருக்கண்ணில் படாமே நேரே ஒரு விஷயந்தான் தமது திருக்கண்களுக்குப் புலப்படுகின்றதாக இதில் அருளிச் செய்கிறார். எங்குப்பார்த்தாலும் பாகவத கோஷ்டியொன்றே ஸேவை ஸாதிக் கின்றதாம் தமக்கு.

மாயத்தினாலெங்கும் மன்னி=ஸ்ரீவைகுண்டநாதனுடைய பக்தர்களான நித்யரும் முக்தரும் ஆச்சரியமாக எங்கும் புகுந்திருக்கிறார்கள் என்கை. மாயம் என்று ஆச்சரியத்தைச் சொல்லுவதன்றிக்கே "ஸம்பவாம்யாத்மமாயயா—ஸம்ப வாமி ஆத்மமாயயா" இத்யாதிஸ்தலங்களிற்போல இச்சையென்கிற பொருளையும் சொல்லுமாதலால் 'இச்சையாலே' என்று நம்பிள்ளையருளிச்செய்யும்படி. * ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே * என்கிற உபநிஷத்தின்படி திருநாட்டிலுள்ளவர்கள் இந்நிலத்திற்குத் திரும்புதல் இல்லையாயிருக்க, அவர்கள் இங்கு எப்படி வரக்கூடும்? என்று சங்கிக்கவேண்டா; கருமமடியாகத் திரும் புதல் இல்லையென்றதே தவிர, இச்சையாலே திரும்புதலும் இல்லையென்று சொல்லிற்றில்லை; * ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி * என்று உபநிஷத்துதானே ஓதிற்றன்றே. இது தோன்றவே மாயத்தினால் என்பதற்கு "இச்சையாலே" என்று பொருள் பணித்தது.

ஐயமொன்றில்லை=இது நடுநிலைத் தீபகமாக இருந்து முன்னடிகளிலும் அந்வயிக்கும், பின்னடிகளிலும் அந்வயிக்கும். வைகுந்தன் பூதங்களே எங்கும் மன்னியிருக்கிறார்களென்பதில் ஐயமொன்றில்லை; ராக்ஷஸப்ரக்ருதிகளாயும் ஆஸுரப்ரக்ருதிகளாயும் இங்கேயிருப்பவர்கள் இனித் தொலையவே போகிறார்க ளென்பதில் ஐயமொன்றில்லை.—"ஸ்ரீவாநரஸேனையின் நடுவே சுகஸாரணர்கள் புகுந்தாப்போலே புகுரப்பார்த்தாருண்டாகில் உங்களுக்கு உஜ்ஜீவிக்கவிரகில்லை" என்பது ஈடு.

கொன்று ஊழி பெயர்த்திடும்=வைகுந்தன் பூதங்கள் உங்களையுங்கொன்று ஊழியையும் பெயர்த்திடுவர்கள் என்கை. ஊழியைப் பெயர்த்திடுகையாவது காலத்தையே மாற்றிவிடுகை. .... .... .... .... .... (ங)

கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசிதீயனவெல்லாம் *
நின்றிவ்வுலகில்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார் *
நன்றிசைபாடியும்துள்ளியாடியும் ஞாலம்பரந்தார் *
சென்றுதொழுதுய்ம்மின்தொண்டீர்! சிந்தையைச்செந்நிறுத்தியே. (ச)

| | |
|---|---|
| கொன்று | கொலைசெய்து |
| உயிர் உண்ணும் | பிராணனைமுடிக்குமதான |
| விசாதி | வியாதியும் |
| பகை | த்வேஷமும் |
| பசி | பசியும் (முதலான) |
| தீயன எல்லாம் | மற்றுமுள்ள கொடியவை எல்லாவற்றையும் |
| இ உலகில் நின்று கடிவான் | இவ்விபூதியிலே தொலைப்பதற்காக |
| நேமி பிரான் தமர் | சக்ரபாணியான எம்பெருமானது பக்தர்கள் |
| போந்தார் | வந்துள்ளார்கள்; |
| இசை | இசைகளை |
| நன்று பாடியும் | நன்றாகப்பாடியும் |
| துள்ளி ஆடியும் | துள்ளிக்குதித்தும் |
| ஞாலம் | இந்நிலத்திலே |
| பரந்தார் | பரவியுள்ளார்கள்; |
| தொண்டர் | இதரவிஷயங்களில் சபலராயிருக்கின்றவர்களே! |
| சிந்தையை | உங்களது நெஞ்சை |
| செம் நிறுத்தி | செவ்வையாக (நல் விஷயத்திலே) ஸ்தாபித்து |
| சென்று | அப்படிப்பட்ட பக்தர்களிடத்தே போய் |
| தொழுது | வணங்கி |
| உய்ம்மின் | உஜ்ஜீவியுங்கோள். |

* * * [கொன்றுயிருண்ணும்.] இந்த ஸம்ஸாரிலத்திற்குரிய ஸகலக்லேசங்களும் தீரும்படி பாகவதர்கள் ஜகத்தெங்கும் பரந்தார்கள், அவர்களை ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள்! என்று, கீழ்ச் சொன்னவர்களை நோக்கியருளிச்செய்கிறார். விசாதியென்று வியாதியைச் சொல்லுகிறது. வியாதியென்றும் பகையென்றும் பசியென்றும் சில கெடுதல்களைத் தனித்தனியே பிரியச்சொல்லிவைத்து, தீயனவெல்லாம் என்று ஸமுதாயமாக அருளிச்செய்கிறார். இவ்வுலகில் கெடுதல்களாக எவ்வெவையுண்டோ அவையெல்லாவற்றையும் என்றபடி. * யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே । ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கரா: = யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே, ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷதஸ்கரா: * [திருவஷ்டாக்ஷரஸித்தியுடைய மஹாபாகவதர் ஒருவர் வாழுமிடத்தில் வியாதியோ பஞ்சமோ கள்வரோ தலைகாட்ட நேராது] என்கிற ப்ரமாணத்தின்படியே இப்பாட்டின் முன்னடிகள் அமைந்திருக்கின்றன.

நேமிப்பிரான் தமர் என்கையாலே—திருவாழியாழ்வான் பகைவர்களைப் படுத்துகிறபாடு இவர்களும் படுத்தவல்லார்களென்பது விளங்கும்.

அங்ஙனம் போந்த நேமிப்பிரான் தமருடைய சேஷ்டிதங்களைச் சொல்லுகிறது மூன்றாமடி. அவர்களைச்சென்று ஆச்ரயித்து உஜ்ஜீவித்துப் போங்கள்; அல்லது, அவர்களிடம் சென்று அவர்களைத் துணைகொண்டு எம்பெருமானை ஆச்ரயித்து உஜ்ஜீவித்துப் போங்கள்—என்கிறது ஈற்றடி. சிந்தையைச் செவ்வையாக நிலைநிறுத்தித் தொழவேணுமென்றது—ப்ரயோஜநாந்தரத்திற்கு மடியேற்காதே அநந்யப்ரயோஜநமாகத் தொழவேணுமென்றபடி. .... (க)

நிறுத்தி நும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்களும்மையுய்யக்கொள்
மறுத்துமவனோடேகண்டீர் மார்க்கண்டேயனும்கரியே *
கறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லால்தெய்வமில்லை *
இறுப்பதெல்லாம் அவன்மூர்த்தியாயவர்க்கேஇறுமினே. (எ)

| | |
|---|---|
| நும் உள்ளத்து | உங்கள் நெஞ்சுக்குள்ளே |
| நிறுத்தி | வலியப்பிடித்து உட்கார வைத்து |
| கொள்ளும் | சிந்திக்கப்படுகின்ற |
| தெய்வங்கள் | தேவதைகள் |
| உம்மை | உங்களை |
| உய்யக்கொள் | உஜ்ஜீவிப்பித்துக்கொள்வதும் |
| அவனோடே | அந்த எம்பெருமான் தன்னோடே |
| மறுத்தும் கண்டீர் | மீண்டு சென்று கிட்டிக் கிடீர்; |
| (இவ்விஷயத்தில்) | |
| மார்க்கண்டேயனும் | மார்க்கண்டேயனும் |
| கரி | ஸாக்ஷியாவன்; |
| கறுத்த மனம் ஒன்றும் வேண்டா | (உங்களுக்கு) மலினமான நெஞ்சு சிறிதும் வேண்டியதில்லை; |
| கண்ணன் அல்லால் | ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்த ஸ்ரீமந் நாராயணனல்லது |
| தெய்வம் இல்லை | பரதெய்வம் வேறு கிடையாது; |
| (ஆனபின்பு) | |
| இறுப்பது எல்லாம் | நீங்கள் செலுத்தும் கடமைகளையெல்லாம் |
| அவன் மூர்த்தியாயவர்க்கே இறுமின் | அப்பெருமானுடைய சரீரபூதர்களுக்குச் செலுத்துகிறோமென்கிற ப்ரதிபத்தியுடனே செலுத்துங்கள். |

* * * [நிறுத்திநும் முள்ளத்து.] எங்கும் பரமபாகவதர்களே மலிந்துவிட்டார்களென்று பரமஸந்தோஷம் பூரித்து நின்ற ஆழ்வார் காலதோஷத்தாலே சில அவைஷ்ணவர்களையும் கண்டார்; அவர்கள் பகவத்பாகவத ப்ரவணர்களாயன்றிக்கே தேவதாந்தர ஸமாராதன பரர்களாய் இருக்கிறபடியையுங் கண்டார்; அன்னவர்களையும் உபதேசத்தாலே திருத்தப் பார்த்து இப்பாசுரமருளிச் செய்கிறார்.

உங்கள் நெஞ்சுக்குள்ளே நீங்கள் கஷ்டப்பட்டு நிறுத்திக்கொள்ளுகிற தெய்வங்களானவை உங்களை அடியோடு ரக்ஷிக்கமாட்டா என்று நாம் சொல்லுகின்றிலோம்; அவை செய்யும் ரக்ஷணம் நாராயணன் வழியாகவேயன்றித் தாமாகவேயல்ல என்கிறோமித்தனை; இவ்விஷயத்திற்கு மார்க்கண்டேயனே ஸாக்ஷியாயிரா நின்றான் என்கிறார் முன்னடிகளில்.

கீழ் * ஒன்றுந்தேவில் "புக்கடிமையினால் தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை, நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே" என்றவிடத்து யாம் உரைத்தவை இங்கு அறியத்தக்கன.

"மார்க்கண்டேயனும் கரியே" என்றவிடத்து ஈடு;— "இவ்வர்த்தத்துக்கு ஸாக்ஷி ஸ்ரீமார்க்கண்டேயன்; அவன் நெடுநாள் தேவனை ஆச்ரயிக்க அவனைப்பார்த்து 'நெடுநாள் நீ நம்மை ஆச்ரயித்தாய்; இவ்வாச்ரயணம் பரமே

போகவொண்ணாது; உன்னோடு என்னோடு வாசியில்லை. உனக்கொரு புகல் காட்டித்தரப்போரு' என்று ஸர்வேச்வரன் பக்கலிலே கொண்டு சென்று அவனபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிக் கொடுத்தான்; ஆனபின்பு இதில் ஸாக்ஷி அவனே." என்பதாம்.

"உய்யக்கோன்" என்றே பலரும் ஓதிவருகிறார்கள்; 'உய்யக்கோன்' என்பதே பொருத்தமான பாடம் என்பர் பெரியோர்.

ஆழ்வார் இப்படிச்சொல்லக் கேட்டவாறே, தேவதாந்தரபஜனம் பண்ணித் திரிவாருடைய முகம் கறுத்து விட்டது; நம் தெய்வத்திற்கு இங்ஙனே குறை சொல்லுகிறாரேயென்று அவர்களுக்கு மனமும் கறுத்து முகமும் கறுத்த படியைக் கண்ட ஆழ்வார் "கறுத்த மனமொன்றும் வேண்டா" என்று அவர்களுடைய கண்ணைத் துடைக்கிறார். "க்ஷுத்ரதேவதைகள் பக்கலிலே பரத்வப்ரதிபத்தி பண்ணியிருக்கும் தண்ணிய நெஞ்சு உங்களுக்கு வேண்டா!' என்று பொருள் கூறப்பட்டது.

விஸ்தரத்தைக் கையோலைசெய்து கொடுக்கிறார்—கண்ணனல்லால் தெய்வமில்லை என்று. [இறுப்பதெல்லாம் இத்யாதி] இறுப்பதாவது செலுத்துவது நீங்கள் இடுகிற பூஜைகளையெல்லாம் என்றபடி. நித்யகருமம் நைமித்திக கருமம் காம்ய கருமம் ஆகிய இவற்றை யனுட்டிப்பதும் 'இறுப்பதெல்லாம்' என்பதனால் விவக்ஷிதம். அக்கருமங்களை யனுட்டிக்கும்போது 'அக்நயே ஸ்வாஹா' என்றும், இந்த்ராயஸ்வாஹா' என்றும் 'வருணாயஸ்வாஹா' என்றுமிப்படி பலபல தேவதாந்தரங்களின் பெயர்களை உச்சரித்து அவர்களுக்கு ஆராதனை செய்வதாகத் தோற்றும்படியிருந்தாலும் "ஸகுதா, ஸமாநவூ ஜேஷ்டா" என்கிற உபநிஷத்விஸ்தரத்தின்படி எம்பெருமானை உயிராகவும் அந்த அக்நீந்த்ராதி தேவதைகளை உடலாகவும் ப்ரதிபத்திபண்ணிக்கொண்டு அநுஷ்டியுங்கோள் என்றதாயிற்று. உலகத்தில் உடலுக்குச் செய்யும் காரியங்களாலே உயிரே த்ருப்தியடையக் காண்கிறோம்; அதுபோல சரீரபூதர்களான தேவதைகளுக்குச் செய்யுங் காரியங்களாலும் ஸர்வாந்தர்யாமியான எம்பெருமானே த்ருப்தியடையக் குறையில்லை என்று நிரூபித்ததாயிற்று. "நீங்கள் தேவதாந்தரங்களை உத்தேசித்துச் செய்கிற ஸமாராதனங்களை வேண்டாவென்று மறுக்கவில்லை; தாராளமாகச் செய்யுங்கள்; ஆனால் அந்த தேவதாந்தரங்கள் எம்பெருமானுடைய மூர்த்தியாக [சரீரமாக] உள்ளவர்கள் என்கிற ப்ரதிபத்தியோடே செய்யுங்கள் என்றதாகிறது: .... .... .... (எ)

இறுக்குமிறையிறுத்துண்ண எவ்வுலகுக்குந்தன்மூர்த்தி *
நிறுத்தினான்தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே *
மறுத்திருமார்வனவன்தன் பூதங்கள்கீதங்கள்பாடி *
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார் மேவித்தொழுதுய்ம்மினீரே. (அ)

| | |
|---|---|
| இறுக்கும் இறை | அவரவர்கள் செலுத்த வேண்டிய கடன்களை |
| இறுத்து | செலுத்தி |
| உண்ண | அவரவர்கள் வாழும்படி |
| எவ்வுலகுக்கும் | வேறுவேறு வகைப்பட்டருசியையுடைய ஸமஸ்தலோகத்துக்கும் |
| தன் மூர்த்தி | தன்னுடைய சரீரங்களை |
| தெய்வங்கள் ஆக | அந்தந்த கருமங்களினால் ஆராதிக்கைக்கு உரிய தேவதைகளாக |
| நிறுத்தினான் | ஏற்பாடு பண்ணினவன் |
| அத்தெய்வநாயகன் தானே | ஸர்வதேவநாயகனான அப்பெருமானே யாவன்; |
| | (ஆகையால்) |
| மறு திரு மார்வன் அவன் தன் பூதங்கள் | ஸ்ரீவத்ஸமென்னும் மறுவைத்திருமார்விலே உடையனான அப்பெருமானுடைய அடியவர்களான பாகவதர்கள் |
| கீதங்கள் பாடி | பலவகைப்பாட்டுக்களைப் பாடி |
| வெறுப்பு இன்றி | (இருள்தருமா ஞாலத்தில் இருக்கவேண்டிய தாகிறதே! என்கிற) வெறுப்பு இல்லாமல் |
| ஞாலத்து | இவ்வுலகத்தில் |
| மிக்கார் | சிறப்புற வாழ்கின்றார்கள்; |
| நீர் | நீங்கள் |
| மேவி | அவர்களைக்கிட்டி |
| தொழுது | வணங்கி |
| உய்ம்மின் | உஜ்ஜீவித்துப் போங்கள். |

* * * [இறுக்குமிறை.] தேவதாந்தரங்களை ஆச்ரயித்து அபேக்ஷிதங்களைப் பெற்றவர்கள் இல்லையோவென்ன, அந்த தேவதைகள் ஆச்ரிதர்களின் அபேக்ஷிதங்களைக்கொடுக்க-சக்தர்களாம்படி பண்ணிவைத்தவன் எம்பெருமானே, ஆதலால் அவனை ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

உலகத்தில் சக்கரவர்த்திக்கு நாம் செலுத்தவேண்டிய கப்பங்களை நேராகவே சக்ரவர்த்திக்குச் செலுத்துகிறோமோ? இல்லை; ஆங்காங்குப் பல அதிகாரி புருஷர்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றார்களாதலால் அவர்களிடம் நாம் செலுத்துகிறோம்; ஆனாலும் அவை அவர்களுக்குச்சேருவனவல்ல; அவரவர்கள் செலுத்தும் கப்பங்களை வாங்கிக்கொள்வதற்காக அரசர்பெருமானால் அதிகாரி புருஷர்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளார்கள் என்கிற தத்துவத்தை உலகில் நாம் எளிதாகத்தெரிந்து கொண்டிருக்கிறோம். இவ்வண்ணமாகவே ஸகலதேவதா நாயகனான எம்பெருமான்தானும், நாம் செலுத்தவேண்டிய ஆராதனைகளைச் செலுத்துவதற்காக இதர தேவதைகளை லோகமடங்கலும் பரப்பிவைத்துள்ளான். அந்தத் தேவதைகளுக்கு ஸ்வதந்திரமாக ஒரு சக்தியுண்டென்று நினையாதீர்கள். சரீரபூதர்களான அந்தத் தேவதைகளின் வழியாக எம்பெருமானை ஆச்ரயிப்பதிற்காட்டிலும் ஸாக்ஷாத்தாகவே அவனை ஆச்ரயித்தல் அழகியது. அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் இப்போது இவ்வுலகில் நிரம்பியுள்ளார்கள். நீங்களும் எம்பெருமானையே அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள் என்றாராயிற்று.

ஞாலத்து வெறுப்பு இன்றி—"இருள்தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்" என்றும் "ஆதலால் பிறவிவேண்டேன்" என்றும் கொடுவுலகம் காட்டேலே" என்றும் இவ்வுலகில் வெறுப்புத்தோன்றப் பேசுமவர்கள் தாமே

"எம்மாவீட்டுத்திறமும் செப்பம்" என்றும் "இச்சுவைதவிர யான்போய் இந்திர லோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்" என்றும் சொல்லுகிறபடியிருக்கையாலே ஞாலத்தில் வெறுப்பு இல்லாமையுமுண்டு. .... (ரு)

மேவித்தொழுதுய்ம்மினீர்கள் வேதப்புனிதவிருக்கை *
நாவில்கொண்டச்சுதன்றன்னை ஞானவிதிபிழையாமே *
பூவில்புகையும்விளக்கும் சாந்தமும்நீரும்மலிந்து *
மேவித்தொழுமடியாரும் பகவரும்மிக்கதுலகே. (௬)

| | |
|---|---|
| வேதம் புனிதம் இருக்கை | வேதத்தினுள் பரமபவித்திரமான புருஷஸூக்தம் முதலியவற்றை |
| நாவில் கொண்டு | நாவினால் உச்சரித்துக் கொண்டு |
| ஞானம் விதி பிழையாமே | பக்திமார்க்கம் தவறாதபடி |
| பூவில் | மலரோடு கூடின |
| புகையும் | தூபமும் |
| விளக்கும் | தீபமும் |
| சாந்தமும் | சந்தனமும் |
| நீரும் | திருமஞ்சனமும் |
| மலிந்து | பூர்ணமாகக்கொண்டு |
| அச்சுதன் தன்னை | எம்பெருமானை |
| மேவி | அடைந்து |
| தொழும் | கைங்கரியம் செய்கிற |
| அடியாரும் | அடியார்களையும் |
| பகவரும் | குணாநுபவ நிஷ்டர்களையும் |
| உலகு மிக்கது | இவ்வுலகமானது அதிகமாகக்கொண்டது; |
| | (ஆனபின்பு) |
| நீர்கள் | நீங்கள் |
| மேவி தொழுது | (அவர்களை) விரும்பி வணங்கி |
| உய்ம்மின் | உஜ்ஜீவியுங்கள். |

* * * [மேவித்தொழுது.] பகவத் பக்தர்கள் இருவகைப்படுவார்கள். பலவகைக் கைங்கரியங்களைச்செய்து போதுபோக்குவாரும், குணாநுபவத்திலே ஊன்றிப் போருவாரும். அப்படிப்பட்ட பக்தர்கள் பூமியெங்கும் பரந்தார்கள்; நீங்களும் அவர்களோடொக்க ஆச்ரயியுங்கோளென்கிறார்.

* வேதப்புனிதவிருக்கையென்று தொடங்கி * மேவித் தொழுமடியாரும் என்னுமளவும் கைங்கரிய நிஷ்டர்களைச் சொல்லுகிறது. பகவரும் என்று குணாநுபவ நிஷ்டர்களைச் சொல்லுகிறது. [வேதப்புனித விருக்கை] வேதங்களுள் புனிதமான ருக்குக்களென்று புருஷஸூக்தம் நாராயணாநுவாகம் முதலியவற்றைச் சொல்லுகிறது.

ஞானவிதியென்று பகவத்கீதையைச் சொல்லுகிறதாக ஸம்பிரதாயம். ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றாம் பிரகரணத்தில் " பகவன் ஞானவிதி பணிவகையென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம் " என்ற சூர்ணிகை காண்க.

" தொடர்ந்து அடிமைசெய்யும் இளையபெருமாளையும், கிடந்தவிடத்தே கிடந்து குணாநுபவம் பண்ணும் ஸ்ரீ பரதாழ்வானையும்போலே யிருப்பாரேயாயிற்று லோகமடைய " என்ற நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்க. .... (௬)

மிக்கவுலகுகள்தோறும் மேவிக்கண்ணன்திருமூர்த்தி *
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாக *
தொக்கவமரர்குழாங்கள் எங்கும்பரந்தனதொண்டீர்! *
ஒக்கத்தொழுகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே. (கo)

| | | | |
|---|---|---|---|
| நக்கன் பிரானோடு | சிவபிரானும் | எங்கும் | எவ்விடத்தும் |
| அயனும் | பிரமனும் | பரந்தன | எல்லாப்பதவிகளைப்பெற்று வாழ்ந்தன; |
| இந்திரனும் | தேவேந்திரனும் | தொண்டீர் | தொண்டர்களே! |
| முதல் ஆக | முதலாக | ஒக்க | (நீங்களும்) அவர்களோடொக்க |
| தொக்க | திரண்ட | தொழகிற்றீர் ஆகில் | (எம்பெருமானைத்) தொழவல்லீர்களாகில் |
| அமரர் குழாங்கள் | தேவவர்க்கங்கள் | கலியுகம் | கலியுகதோஷம் |
| கண்ணன் திருமூர்த்தி | எம்பெருமானது திருவடிவத்தை | ஒன்றும் | சிறிதும் |
| மேவி | ஆசிரயித்து | இல்லை | உங்களுக்கு இல்லாதபடியாகும். |
| மிக்க உலகுகள் தோறும் | பரம்பின லோகங்கள் தோறும் | | |

* * * [மிக்கவுலகுகள்.] நீங்கள் ஆராதிக்கிற தேவதைகளும் எம்பெருமானை ஆச்ரயித்தே தம் தம் பதவிகளைப் பெற்றார்கள்; நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானை ஆச்ரயித்துப் பிழையுங்கோளென்கிறார்.

नग्नः [நக்நஃ] என்னும் வடசொல் நக்கனெனத் திரிந்து, அரையில் ஆடையில்லாதவனென்று பொருள்படும்; இது சிவபிரானுக்கு வழங்கும் நாமங்களுள் ஒன்றாம். சிவனும் பிரமனும் இந்திரனும் முதலாகத் திரண்ட தேவஸமூஹங்களானவை கண்ணபிரானென் ஸ்ரீமந்நாராயணனுடைய அஸாதாரண விக்ரஹத்தை ஆச்ரயித்து, அதன்பலனாக லோகங்கள்தோறும் பரந்த செல்வமுடையரா யிருக்கின்றார்கள். அதாவது, ஒவ்வொருவர் ஒவ்வொரு பதவியிலே யிருக்கின்றார்களென்றவாறு.

தொண்டீர்! ஒக்கத் தொழுகிற்றிராகில் = தேவதாந்தர சேஷபூதரான நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானையே தொழவல்லீர்களாகில், கலியுகமொன்றுமில்லையாகும்; அதாவது — உங்களுக்கு தேவதாந்தர ப்ராவண்யமாகிற நீசத்தனத்திற்கு ஹேதுவான கலியுகதோஷம் தொலையுமென்கை. .... (கo)

கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள்செய்யும் *
மலியும்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்தன்னை *
கலிவயல்தென்னன்குருகூர்க் காரிமாறன்சடகோபன் *
ஒலிபுகழாயிரத்திப்பத்து உள்ளத்தைமாசறுக்குமே. (கக)

| | |
|---|---|
| தன் அடியார்க்கு | தன் அடியவர்களுக்கு |
| கலியுகம் ஒன்றும் இன்றிக்கே | [illegible] தட்டாதபடி |
| அருள் செய்யும் | க்ருபை பண்ணுகின்ற, |
| மலியும் சுடர் ஒளி மூர்த்தி | மிகுந்த பிரகாசம் பொருந்திய தேஜோமயமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனும் |
| மாயம் பிரான் | ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடைய ப்ரபுவுமான |
| கண்ணன் தன்னை | எம்பெருமானைக் குறித்து, |
| கலி வயல் | நிறைந்த வயல்களையுடைய |
| தென் | தென்திசையிலுள்ள |
| நன் | அழகிய |
| குருகூர் | திருநகரிக்குத் தலைவரான |
| காரி மாறன் சடகோபன் | ஆழ்வார், |
| ஒலி | அருளிச்செய்த |
| புகழ் | கீர்த்திமிக்க |
| ஆயிரத்து இப்பத்து | ஆயிரத்தினுள் இத்திருவாய்மொழி |
| உள்ளத்தை | (கற்பாருடைய) நெஞ்சை |
| மாசு அறுக்கும் | கல்மஷமற்றதாகச் செய்யும். |

ஈடு — [கலியுகமொன்று மின்றிக்கே.] இத்திருவாய்மொழியினைத் தன்னைக் கற்பவர்களது நெஞ்சிலுள்ள ஸகலவிதமான அழுக்கையுமறுக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். தேவதாந்தரங்களிலுண்டான பரத்வஜ்ஞானமும், எம்பெருமானைப் பணிந்தும் அற்பப்ரயோஜனங்களில் விருப்புற்றிருக்கையும் முதலியன மனமாசு ஆகும்; இத்திருவாய்மொழியை ஓதவே அவை தீருமென்கிறது.

கலியுகமொன்றுமின்றிக்கே — * [illegible] [illegible] — கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ் தஸ்ய க்ருதே யுகே, யஸ்ய சேதஸி கோவிந்தோ ஹ்ருதயே யஸ்ய நாச்யுத: * என்கிற பிரமாணம் இங்கு அறியத்தக்கது. எம்பெருமானை இடைவிடாது நெஞ்சிலே கொண்டிருக்கை க்ருதயுகம்; அப்படிக் கொண்டிருக்கமாட்டாமை கலியுகம் என்றபடி. கலியுகமொன்று மின்றிக்கே தன்னடியார்க்கு அருள்செய்கையாவது — தன்னை இடைவிடாது சிந்திக்கவல்லராம்படி அநுக்ரஹித்தல். .... .... .... .... (கக)

இரண்டாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

[illegible]

ஸ்ரீவைஷ்ணவர்களாலே எம்பெருமான் லோகத்தில் தேசங்களை வெல்லும் சமிப்பிக்கிறானென்று * பொலிக பொலிக வென்கிற திருவாய்மொழியிலே ஆழ்வாரருளிச் செய்தாரென்றார். அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் எப்படிப்பட்டவர்களென்றால், எம்பெருமானுடைய அனேக விஷயங்களில் ஈடுபட்டவர்கள். அந்த விஷயங்களிவையென்னில், ஸப்தமயர் தங்களாலே அந்த விஷயங்களை அருளிச் செய்கிறார்.

1. பாதோதிப்ரௌடகாந்தேள. * கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல் * கடல் போல்கம்பீரமான திருமேனி யொளியிலும்.

2. ஸரஸதுலஸிகாலங்க்ருதேள. * வண்டார் தண்ணந்துழாயான் மாதவன் பூதங்கள். * மதுமிக்க திருத்துழாய்மாலே பொப்பனையிலும்.

3. தாத்ருபாவே. * கரியமுகில் வண்ணனெம்மான் * காளமேகம் போலே எல்லார்க்கும் உபகரிக்கும் வள்ளல்தனத்திலும்.

4-5. வைகுண்டத்வே ச. * வைகுந்தன் பூதங்களேயாய் * திருநாட்டி லெழுந்தருளியிருக்கிற இருப்பிலும். இங்குள்ள சகாரத்தை அநுக்த ஸமுச்சய மாகக்கொண்டு "தடங்கடற்பள்ளிப் பெருமான்" என்பதனுல் சொல்லப்படுகிற ஆதிராப்திசாயித்வத்தையும் கொள்ளவேணும்; ஆகவே இரண்டு பாசுரங்களின் ப்ரமேயம் ஸங்க்ருஹீதமாயிற்று.

6-7-8. சக்ர ப்ரஹரணவசிதாதேவதாஸ்தாபநாதேள; ஆறவது பாசுரத்தில் * கேமிப்பிரான் தமர் போந்தார் * என்றதனுலே கையுந்திருவாழியுமான அழகில் ஈடுபட்டமை சொல்லுகிறது. ஏழாவது பாசுரத்தில் * மறுத்துமவனே டே கண்டீர் மார்க்கண்டேயனும் கரியே * என்றதனுல் ஸர்வேச்வரத்வத்தில் ஈடுபட்டமைசொல்லுகிறது. எட்டாவது பாசுரத்தில் * நிறுத்தினுன் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே * என்றதனுல் ஸகல தேவதைகளையும் ஸ்தாபித்தவதிலே ஈடுபட்டமை சொல்லுகிறது. ஆதிசப்தத்தாலே * திருமார்வனவன்தன் * என்பதனுல் சொல்லப்பட்ட ச்ரிய:பதித்வம் கொள்ளத்தகும்.

9. ஸ்வார்தம் அச்யாவதே. * சாவிற்கொண்டு அச்சுதன்றன்னை * ஆச்ரிதரை ஒருகாலும் நழுவவிடாமையிலும்.

10. ஸகல நியமநே, ஸர்வகர்மேஜ்யபாவே. * மேவிக்கண்ணன் திருமூர்த்தி சக்கபிரானுடையனுமித்யாதி. * எல்லாரையும் நியமிப்பதிலும், எல்லாருடைய கருமங்களாலும் ஆராதிக்கப்படுமதிலும்.

நித்யாஸக்தை:—எப்போதும் ஈடுபட்டிருக்கின்ற,

ஸ்வபக்தை:—ஸ்ரீவைஷ்ணவர்களாலே,

ஜகதகசமநம்—உலகங்களின் துரிதங்களையெல்லாம் தீர்ப்பவனாக,

க்ருஷ்ணம் — எம்பெருமானை, சடாரி: ப்ராஹ — ஆழ்வார் அருளிச்செய்தார்.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

(கருத்து.) ஐந்தாம்பத்தில் இரண்டாந் திருவாய்மொழியான * பொலிக பொலிகவில் ஆழ்வார் இவ்வுலகம் முழுவதையும் தமது உபதேசப்பெருமையினால் பாவங்கள் தொலையப்பெற்றதாகவும் ஸ்ரீவைஷ்ணவத்திரள் நெருங்கப் பெற்றதாகவும் கலிகோலாஹலம் தணியப்பெற்றதாகவும் கண்டு அந்த நிலைமைக்கு மங்களாசாஸநம் செய்தருளினாரென்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

பொலிக பொலிகவென்று பூமகள்கோன் றொண்டர்
மலிவுதனைக் கண்டுகந்து வாழ்த்தி—உலகில்
திருந்தாதார் தம்மைத் திருத்தியமாறன்சொல்
மருந்தாகப் போகுமன மாசு. (௪௨)

| | |
|---|---|
| உலகில் | இவ்வுலகத்தில் |
| பூமகள் கோன் தொண்டர் | திருமாலுக்குத் தொண்டர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| மலிவு தனை கண்டு | ஸம்ருத்தியைக்கண்டு |
| உகந்து | உள்ளம் பூரித்து |
| பொலிக பொலிக என்று வாழ்த்தி | வாழ்க வாழ்க வென்று மங்களா சாஸனம் பண்ணி, |
| | (அவ்வளவோடும் நில்லாமல்) |
| திருந்தாதார் தம்மை | திருந்தாமலிருப்பவர்களை |
| திருத்திய | (உபதேச முகத்தாலே) திருத்தியருளின |
| மாறன் | ஆழ்வாருடைய |
| சொல் | ஸ்ரீஸூக்திகளே |
| மருந்து ஆக | மருந்தாக |
| மனம் மாசு போகும் | மனக்களங்கம் தொலைந்திடும். |

கீழே *நண்ணாதார் முறுவலிப்பவிலே *கொடுவுலகம் காட்டேலே என்ற ஆழ்வார்க்கு இந்நிலத்தில் இருப்பு திருவுள்ளத்துக்கு போக்யமாகைக்காக எம்பெருமான் ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்தி இருக்கும்படியை இந்நிலத்திலே காட்டிக் கொடுக்க, அதுகண்டு மங்களாசாஸனம் பண்ணியும், இன்னமும் திருந்தாத ஸம்ஸாரிகளை உபதேசங்களாலே திருத்தியும் போந்த ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளே நம்முடைய மனமலங்கள் கழிய அருமருந்து என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஐந்தாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி

## மாசறுசோதி:

---

உரையவதாரிகை:—இத்திருவாய்மொழி மடலூரவொருப்படுவதாயிருக்கும். கீழ் நாலாம்பத்திலே * ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்து எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்க விரும்பி, அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையினாலே மடலூர்வேனென்று அச்சுறுத்திக் காரியங்கொள்ளப் பார்க்கிறார்.

சக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ரராஜனைச் சரணம் புகுந்து வழிவிடவேண்டினவிடத்தும் அக்கடலரையன் இறுமாப்பையே பாராட்டி முகங்காட்டாமல் அலக்ஷியஞ்செய்துகிடக்க, பெருமாள் சீறிச் சிவந்த கண்ணினராய் * ஸாமரம் சோஷயிஷ்யாமி—வாவரோநய ஸௌமித்ரே!—வஜ்ரம் யாம்ஜு ஷ்வம்ஜ ஊஷ் ஸாகரம் சோஷயிஷ்யாமி, சாபமாநய ஸௌமித்ரே!, பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா: * 'இதோ இக்கடலை வற்றச் செய்துவிடப்போகிறேன்; லக்ஷ்மணா! சார்ங்கவில்லைக் கொண்டுவா; வானர முதலிகள் காலாலே நடந்து செல்லட்டும்; ஒரு க்ஷணத்திலே இக்கடல் படுகிறபாடு பாராய்' என்றருளிச்செய்து ஸமுத்ரராஜனை அழிக்க முயன்றாப்போலே இவ்வாழ்வாரும் 'நமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் எதுக்கு?' என்று பகவத் தத்வத்தை இல்லை செய்துவிடப்பார்க்கிறார்.

மடலெடுக்கையென்று தமிழிலே ஒரு முறைமையுண்டு. நாயகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய், நாயகியும் தோழியும் பூக்கொய்து விளையாடவென்று புறப்பட்டவள்ளிலே ஒரு வியாஜத்தாலே தோழியும் பிரிந்த ஸமயத்திலே நாயகனும் தெய்வவசமாக அங்கே வந்துசேர, அங்கே அவனோடு கண்கலவியே கூட்டக்கூடி ஸம்ச்லேஷித்து பிரிந்தலால் உடனே பிரிவும் நேர்ந்திட, அந்தப் பிரிவைப் பொறுக்கமாட்டாத நாயகி அவனோடு கூடுதற்காகச்செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்திதான் மடலூர்தல் எனப்படுவது.

நாயகனை ஒரு படத்திலேயெழுதி, வைத்தகண்வாங்காமல் அதனைப் பார்த்துக்கொண்டு, புஷ்பம் சந்தனம் முதலிய போக்ய வஸ்துக்களையும் விஷமாக உதறித்தள்ளி ஊணும் உறக்கமும் உட்புகுவிப்பதுமின்றியே, பனைமடலைக் கையிலே ஏந்திக்கொண்டு அதனால் உடம்பை மோதிக்கொண்டு தலைமயிரை

விரித்துக்கொண்டு 'இன்ன படுபாவி என்னைக் காக்கமாட்டாதே கைவிட்டான்; அவன் கண்ணற்றவன்; அவனிலும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று தெருவேறக் கதறிக்கொண்டே கேட்டாரெல்லாரும் நடுங்கும்படியும் இரங்கும்படியும் திரிந்துழல்வதுதான் மடலூருகையாவது.

இங்ஙனம் கதறிக்கொண்டு தெருவிலே புறப்படுவதற்கு ப்ரயோஜனம் யாதெனில்; இந்த ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக்கண்டு ராஜாக்களாயுள்ளவர்கள் இவ்வார்த்தையைப் பொறுக்கமாட்டாத கருணையினாலே இருவரையும் கூட்டி வைப்பர்கள்; உறவுமுறையாராவது கூட்டிவைப்பர்கள்; தோழிமாராவது கூட்டிவைப்பர்கள்; பழிக்கு அஞ்சி நாயகனேயாவது வந்து கூடுவன்; இவை யொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப்போவள்; இவையாயிற்று மடலூர்தற்குப் ப்ரயோஜனங்கள்.

ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக்கொண்டு ஸாஹஸம் தோற்றத் தெருவிலே கிளம்பினரோ? எனில்; இல்லை; மடலூர்வன் என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முடிய நடத்தினபாடில்லை. "தோழீ! உலகுதோறலர்தூற்றி ஆம் கோணைகள்செய்து குதிரியாய் மடலூர்துமே" என்றும், "யாமடமின்றித் தெருவுதோறயல் தையலார் நாமடங்காப் பழிதூற்றி நாடுமிரைக்கவே யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றுமுள்ள பாசுரங்கள் காண்க. திருமங்கையாழ்வாரும் "பெருந்தெருவே ஊராரிகழினும் ஊராதொழியேன் நான், வாரார்பூம் பெண்ணைமடல்" என்றும் "உலகறியவூர்வன் நான் மன்னிய பூம் பெண்ணைமடல்" என்றும் மடலூர்வதாகச் சொல்லி அச்சமுறுத்தினவத்தனையேயுள்ளது.

இத்திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று பேசுகிறதன்று; நாயகி ஸமாதியிலே நின்று பேசுவதாகும். தம்முடைய ஆர்த்தியின் மிகுதியைக் காட்டுவதே இத்திருவாய்மொழியின் உள்ளுறையாகும்.

"எம்பெருமான் தனக்குத் திருவுள்ளமானபோது நம்மை நோக்கியருள்வான், நாம் பதறவொண்ணாது" என்று அநுஸந்தித்து ஆறியிருக்கவேண்டியதன்றோ ஸ்வரூபம்; அங்ஙனமிராமல் நாம் பதறி ஒரு அதிப்ரவ்ருத்திசெய்ய நினைக்கைதானும் அவத்யமன்றோ? அதிலும், ப்ரபந்ந ஜநகூடஸ்தரான ஆழ்வார் இப்படி மடலூர்வேனென்றல் பொல்லாங்கன்றோ? என்னில்; அன்று; ப்ராப்ய வஸ்துவில் ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியேயன்றி எம்பெருமானுக்குக் கெடுதலை விளைக்கவேணுமென்கிற கெட்ட எண்ணத்தினாலுண்டாகிற ப்ரவ்ருத்தியல்ல. ப்ரேமபரவசர்க்கு இது அவத்யத்தை விளைக்கக்கூடியதன்று. 'ஞானங்கனிந்தநலம்' என்றபடி ஜ்ஞாநபரிபாகரூபமான பக்தியின் காரியமாக [illegible] ப்ராப்தாப்ராப்த விவேக விரஹத்தால் வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்களெல்லாம் மிகவும் ஆதரிக்கத் தக்கனவேயாம். கருமமடியான அஜ்ஞானத்தினால் வருமவையே ஹேயம் என்று கொள்ளக்கடவது.

ஆனாலும், சேதநனிடத்து ஒரு வக்யான ப்ரவ்ருத்தியையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்திற்கு இந்த அதிப்ரவ்ருத்தியானது இடையூறாகமாட்டாதோவென்னில்; இந்த அதிப்ரவ்ருத்திதானும் ஸித்தோபாயமான எம்பெருமான் பண்ணின க்ருஷியின் பயனெனக் கருதத்தக்கதாம். "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நங்கண்ணன்" என்று இப்படிப்பட்ட அதிப்ரவ்ருத்திக்கு ஹேதுவான பக்தியைப் பிறப்பிக்குமவனும் வளரச்செய்பவனும் அவ்வெம்பெருமான் ஒருவனேயன்றோ சொல்லப்பட்டுளது. ஆகையாலே பக்திபாரவச்ய ப்ரயுக்தமான இந்த அதிப்ரவ்ருத்தி உபாயபலமென்று பூர்வாசார்ய ஸித்தாந்தம்.

அன்றியும், பலனைச் சடக்கப்பெறவேணுமென்ற விரைவின் மிகுதியினால் கண்ணுஞ்சுழலையிட்டு இத்தலைபடுகிற அலமாப்பெல்லாம் 'நம்மை யாசைப்பட்டு இங்ஙனம் துடிக்கப்பெறுவதே!' என்று அவன் முகம் மலருகைக்கு உறுப்பாகையாலே இத்தகைய அதிப்ரவ்ருத்திகளெல்லாம் அவனுடைய முகமலர்த்திக்காகப் பண்ணும் கைங்கரியத்தோடொத்து உபேயத்தில் அந்தர்ப்பூதமாய்விடுமென்றே அறுதியிடத்தக்கதாம். ... .... .... (*)

மாசறுசோதி என்செய்யவாய்மணிக்குன்றத்தை*
ஆசறுசீலனை ஆதிமூர்த்தியைநாடியே*
பாசறவெய்தி அறிவிழந்தேனைநாளையம்? *
ஏசறுமூரவர்கவ்வை தோழி!என்செய்யுமே ? (க)

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| மாசு அறு சோதி | அழுக்கற்ற தேஜஸ்ஸையுடைய | பாசு அறவு எய்தி | உடம்பில் பசுமை நிறம் அழிவடைந்து |
| செய்ய வாய் | சிவந்த திருப்பவளத்தையுடைய | அறிவு இழந்து | அறிவும் இழக்கப்பெற்று |
| என் மணி குன்றத்தை | மாணிக்கமலைபோல் எனக்கு போக்யனானவனும், | எனை நாளையம் | எத்தனை காலமிருப்போம்? |
| ஆசு அறு சீலனை | குற்றமற்ற சீலகுணத்தையுடையவனும் | தோழி | தோழியே!, |
| ஆதி மூர்த்தியை | முழுமுதற்கடவுளுமான எம்பெருமானை | ஏசு அறும் | ஏசுவதற்கென்றே அற்றுத்தீர்ந்த |
| நாடி | தேடி | ஊரவர் | ஊராருடைய |
| | | கவ்வை | பழிமொழி |
| | | என் செய்யும் | யாது செய்யும் ? |

* * * [மாசறுசோதி.] பராங்குச நாயகி மடலூர்வதாக எண்ணினபடியை அறிந்ததோழி அதனை விலக்கப்புகுந்து 'ஊரார் பழிசொல்வர்காண்' என்ன; அவனுடைய அழகு முதலியவற்றிலே அகப்பட்டுக் கலங்கின நான் ஊரார் பழியை லக்ஷியம் பண்ணும் நிலைமையிலே இலேன் என்கிறாள் தலைவி.

முதலடியினால் எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற வடிவழகு பேசப்படுகிறது. "மடலெடுக்கை மாசு என்றிருக்கிறாள் தோழி; மடலெடாதொழிகை

மாசு என்றிருக்கிறாளிவள். வ்யதிரேகத்தில் இப்படி ஆற்றாமை விளையாதாகில் நாம் காண்கிற விஷயஸௌபாதியாமே;—வடிவிலே பணைத்தவளாகையாலே முற்பட வடிவிலே மண்டுகிறாள்" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்க.

வெறும் வடிவழகு மாத்திரத்தைக்கண்டு துடிக்கிறேனல்லேன்; அகவாயில் சில குணத்தையும் கண்டு துடிக்கிறேன் காண் என்கிறாள்—ஆசறுசீலனை என்பதனால். ஆசு என்றாலும் மாசு என்றாலும் குற்றம் என்பதே பொருள்; குற்றமற்ற சீலமாவது, கலக்கும்போது தன்பேறாகவே கலந்தபடி.

பாசறவெய்தி=இதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். (1) பாசறவு என்று துக்கத்திற்குப் பெயர்; அதை எய்தி. (2) பாசு அறவு—என்று பிரித்து, பாசு—பசுமைநிறமானது, அறவு—அழிந்துபோவது; வைவர்ண்யமடைந்து என்றபடி. (3) பாசு என்று பாசமாய், [அதாவது பற்று] பந்துக்கள் பக்கல் பாசம் நீங்கி. (4) அற என்பதற்கு 'முழுவதும்' என்றும் 'மிகவும்' என்றும் பொருளுண்டாகையாலே ஸ்நேஹம் முழுவதையும் அவன் பக்கலிலேயடைந்து என்னவுமாம்.

எம்பெருமான் நம்மை நாடிக்கொண்டு வரவேணுமேயன்றி நாமாக அவனை நாடுவது ஸ்வரூபஜ்ஞானத்திற்குப் போராதேயென்று சிலர் சொல்ல, அறிவிழந்து எனைநாளையம் என்கிறாள். அறிவு [ஸ்வரூபஜ்ஞானம்] அடியோடே தொலைந்து எத்தனையோ நாள் ஆயிற்றே என்றபடி.

இங்கே நம்பிள்ளை யீடு;--"*மயர்வறமதிநலமருளப்பெற்றவன்றே போயிற்றில்லையோ நம்முடைய அறிவு. திர்யக்கின் காலிலே விழுந்து தூதுவிட்டவன்று அது ஜ்ஞாநகார்யம் என்றிருந்தாயோ இன்றிருந்து கற்பிக்கைக்கு. அன்றே *மதியெல்லாமுள்கலங்கிற்றில்லையோ? தன்பக்கலிலே கைவைத்தால் மற்றொன்றறியாதபடி பண்ணும் விஷயமிறே. 'பேரின்பமெல்லாந் துறந்தார் தொழுதாரத்தோள்' என்னக்கடவதிறே. *ஜராவஜநாவஸரே * என்று ப்ராப்தி ஸமயத்தில் இவ்வருகுள்ளவற்றை நினையாதபடி பண்ணுகையேயன்றிக்கே ஜ்ஞானம் பிறந்த ஸமயமே பிடித்தும் இவ்வருகுள்ளவற்றை நினையாமே பண்ணவல்ல விஷயமன்றோ. தன்னையுமநுஸந்தித்து லோகயாத்ரையையுமநுஸந்திக்கும்படியோ அவன்படி." என்பதாம்.

ஆனாலும் ஊரார் சொல்லும்பழிக்கு அஞ்சவேண்டாவோ வென்ன, ஏசறுமூரவர்கவ்வை தோழீ யென்செய்யுமே என்கிறாள். ஏசு அறும் ஊரவர்=ஏசுகையிலே அற்றுத் தீர்ந்திருக்கிற ஊரார் என்றபடி. ஏசுவதற்கென்றே பிறந்திருக்கிற ஊராருடைய பழிமொழிகள் நமக்கு அவத்யமோ? அதுவே நமக்குத் தாரகமன்றோ வென்கை.

மடலெடுக்கிற ப்ரஸ்தாவம் இங்கு இல்லாமற் போனாலும் மேலே "மடலூர்துமே" என்றும் "யாமடலூர்ந்தும்" என்றும் ஸ்பஷ்டமாகச்

சொல்லுகையாலே மடலூரும் நோக்கத்தையுட்கொண்டே இவையருளிச் செய்வ தாகக் கொள்க. (௪)

என்செய்யுமூரவர்கவ்வை? தோழீ!இனிநம்மை *
என்செய்யதாமரைக்கண்ணன் என்னைநிறைகொண்டான் *
முன்செய்யமாமையிழந்து மேனிமெலிவெய்தி *
என்செய்யவாயும்கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே. (௫)

| | |
|---|---|
| என் செய்ய தாமரை கண்ணன் | சிவந்ததாமரை போன்ற திருக்கண்களை யுடையனான என்னுதன் |
| என்னை | என்னுடைய |
| நிறை | அடக்கத்தை |
| கொண்டான் | கொள்ளை கொண்டான்; (அதனாலே) |
| முன் | முதன்முதலாக |
| செய்ய மாமை இழந்து | விலக்ஷணமான மேனி நிறம் அழியப்பெற்று |
| மேனி மெலிவு எய்தி | சரீரமும் மெலிந்து |
| என் செய்ய வாயும் | எனது சிவந்தவாயும் |
| கரு கண்ணும் | கறுத்தகண்ணும் |
| பயப்பு ஊர்ந்த | பசலை நிறம் படரப் பெற்றன; |
| தோழீ | தோழியே!, |
| இனி | இந்நிலைமை யானபின்பு |
| நம்மை | நம் விஷயத்திலே |
| ஊரவர் கவ்வை | ஊராருடைய பழிமொழி |
| என் செய்யும் | என்ன பண்ணும்? |

* * * [என்செய்யும்.] இப்பாட்டில், ஊரார் சொல்லும்பழி நமக்கென்ன செய்யப்போகிற தென்றாள்; 'இப்படியும் ஒரு வார்த்தையுண்டோ? பழிக்கு அஞ்சாதே யிருக்கவொண்ணுமோ? பழி பரிஹரிக்கவேண்டியது அவசியமாயிற்றே' என்ன, நான் பழி பரிஹரிக்க வேண்டா வென்று சொல்லுகின்றேனல்லேன்; பழி பரிஹரிக்கும்படியான நிலைமையில் இல்லையே! என்கிறாளிப்பாட்டில்.

என்செய்யுமூரவர்கவ்வை தோழீ! இனிநம்மை என்று தன் வடிவைக் காட்டுகிறாள்போலும். இனி என்கிறாயே, இதற்கு என்ன அர்த்தம்? என்று கேட்க, மேல்மூன்றடிகளும் அவ்வர்த்தம் கூறுவன. தோழீ! நான் இப்படி அவகாஹிப்பதற்கு முன்னே என்னை நீ இதில் நின்றும் மீட்டிருக்கலாமாயிற்று; எல்லைகடந்து விட்டதே யென்கிறாள்.

"இனி என்னை" என்னாதே "இனி நம்மை" என்கிறது தோழியையும் தன்னோடு கூட்டிக்கொண்டு. நிறவேறுபாடு தனக்குப்போலவே அவளுக்கு முள்ளதென்று இத்தால் காட்டப்பட்டதாகும். "யாமுடைத்துணையென்னுந் தோழிமாரும் எம்மில்முன் அவனுக்கு மாய்வராலோ" என்றது இங்கே அநுஸந்தேயம். தோழியானவள் 'மடலெடுக்கவேண்டா' என்று வாயாலே நிஷேதிக்கிறாளே யல்லது மடலெடுக்கவேண்டும்படியான நிலைமை அவளுக்கும் உள்ளதே யென்று காட்டுதற்கே 'நம்மை' என்றது.

என்செய்யதாமரைக்கண்ணன் என்னை நிறைகொண்டான் — எம்பெருமான் தனது திருக்கண்களாலே குளிரநோக்கி என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினானென்கிறாள். அவனது திருக்கண்ணழகிலே தோற்று நிறையிழந்த நான். ஊரவர் சொல்லும் பழியைப் பரிஹரிக்கு மெல்லையிலே நிற்கிறேனோ ?

நிறைகொள்ளுகையாவது—நாண் மடம் அச்சம் முதலிய ஸ்த்ரீத்வகுணங்களை இழக்கச்செய்கை. 'அருமையாம் புருஷோத்தமர்கள் கூடினாலும் தோற்றுப் போக வேண்டியது தவிர வேறில்லை' என்றிருந்த என்னுடைய ஸ்த்ரீத்வத்தை „கவோபுண்டரீகநயந: புருஷோத்தம: ” என்னலாம்படியான ஒரு புருஷோத்தமன் புண்டரீகநயனத்தைக் காட்டிக் கொள்ளை கொண்டு போய்விட்டானென்கிறாள்.

நிறை கொண்டான் என்று ஸமுதாயமாகச் சொன்னதை மற்றையிரண்டடிகளால் விவரிக்கின்றான். முந்துறமுன்னம் மாமை யிழந்தேன். [மாமை—மேனிநிறம்.] இழந்தநிறம் திரும்பிவந்தாலும் தங்குகைக்கு ஆச்ரயமில்லாதபடி மேனி சருகாகப்பெற்றேன்; கலக்கிறபோது 'இதொரு செய்யவாய் இருந்தபடி என்!' இது ஒரு கருங்கண் இருந்தபடி என்!' என்று அவன் வாய்வெருவும்படியிருந்த வாயும் கண்ணும் விவர்ணமாகப் பெற்றேன்! இத்தகைய நிலைமையான பின்பு ஊரார்பழி பரிஹரிக்கை யென்றொரு பொருளுண்டோ? .... ... (உ)

ஊர்ந்தசகடம் உதைத்தபாதத்தன் * பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாயன் என்னைநிறைகொண்டான் *
பேர்த்தும்பெயர்த்தும் அவனோடன்றியோர்சொல்லிலேன் *
தீர்ந்தவென்தோழீ! என்செய்யுமூரவர்கவ்வையே ? (௩)

| | | | |
|---|---|---|---|
| ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன் | (கலிவதற்காக) ஊர்ந்து வந்த சகடத்தைப் பொடியபடுத்தின திருவடிகளையுடையவனும் | தீர்ந்த என் தோழீ | (எனக்கு நன்மை தவிரவில்லை) அந்தந்தீர்ந்திருக்கின்ற என் தோழியே! |
| பேய் முலை சார்ந்து சுவைத்த | பூதனையின் முலையை முகம் பொருந்தி பசையறவுண்ட | பேர்த்தும் பெயர்த்தும் | எத்தவிதத்திலும் |
| செம் வாயன் | செவ்விய வாயையுடையவனுமான எம்பிரான் (அந்தச் செயல்களாலே) | அவனோடு அன்றி ஓர் சொல் இலேன் | அவ்வெம் பெருமான் விஷயமான பேச்சன்றி வேறொரு பேச்சுடையேனல்லேன்; |
| என்னை நிறை கொண்டான் | என்னுடைய ஸ்த்ரீத்வ பூர்த்தியை அபஹரித்தான்; | ஊரவர் கவ்வை என் செய்யும் | ஊரார் அலர் தூற்றுதல் என்னை என்ன பண்ணும்?. |

* * * [ஊர்ந்த சகடம்.] எம்பெருமானுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களிலே நெஞ்சைப் பறிகொடுத்தவென்னை ஊராருடைய பழிமொழி என்ன செய்யுமென்கிறாள். கண்ணபிரான் சகடாஸுரநிரஸனம் பண்ணினதும் பூதநாஸ்தந்யபானம்

பண்ணி அவனை மாய்த்ததும் கம்ஸன் வரவிட்ட விரோதிவர்க்கங்களை மாய்த்த படி என்று தோழி நினைத்திருந்தாள். இப்போது பராங்குசநாயகி சொல்லுகிறாள்—சகடாஸுரபஞ்ஜநாதிகள் என்னைத் தன் பக்கலிலே ஈடுபடுத்திக்கொள்ளுகைக்காகச் செய்தனவேயன்றி வேறில்லையென்கிறாள்.

பருவம் நிரம்பினபின்பு செய்திருந்தானாகில் இங்ஙனே சொன்னாலும் சொல்லலாம்; மிக்க இளம்பிராயத்திலே செய்த இவை இவளை யீடுபடுத்துகைக்கு உடலாவது எங்ஙனேயென்று நம்பிள்ளை சங்கித்துக்கொண்டு ஸமாதானமருளிச் செய்யுமழகு பாரீர்—"இவளுக்குத் தன் பக்கல் ப்ராவண்யத்தை விளைக்கை அவனுக்கு ஜந்மப்ரயுக்தமென்கை" என்று.

நந்தகோப கிருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண் வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள்; கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீகிருஷ்ணசிசுவின் மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிறபாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்தருள, அவ்வுதை பட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழே விழுந்து அசுரனுட்பட அழிந்தது என்பது ஊர்ந்த சகடமுதைத்த வரலாறு.

க்ருஷ்ண சிசுவை நாடி புணர்ந்துகொல்லும்பொருட்டுக் கஞ்சன் ஏவின அசுரர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக்கொடுத்துக் கொல்ல முயல, பகவானாகிய குழந்தை அவ்வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் இறக்கும்படி செய்தருளினனென்பது பேய்முலைசுவைத்தவரலாறு.

"பேய்முலை சார்ந்து சுவைத்த செவ்வாயன்" என்றவிடத்து செவ்வாயன் என்ற பதஸ்வாரஸ்யத்தை நோக்கி நம்பிள்ளை யருளிச் செய்கிறார்—"பிள்ளைகள் முலையுண்ணப்புக்கால் தாய்மார்முலைக்கீழே முழுசினவாறே பால்சுரக்கும்; பின்னைப் பாலையுண்டு உபகார ஸ்ம்ருதியாலே முகத்தைப் பார்த்து ஸ்மிதம் பண்ணுமாயிற்று. அப்படியே அவளும் (பூதனையும்) தாயாய் வந்து முலை கொடுக்கையாலே இவனும் பிள்ளையாயே முலைக்கீழேமுழுசிமுலையுண்டு உபகாரஸ்ம்ருதியாலே முகத்தைப் பார்த்து அதரத்தில் பழுப்புத்தோற்ற ஸ்மிதம் பண்ணிவாயிற்று முலையுண்டது."

என்னை நிறை கொண்டான்—"ஒரு வ்யாபாரத்தாலே இரண்டு ஸ்த்ரீவதம் பண்ணினான். தன்னையாசைப்பட்டாரில் உகவாதார்க்கே நன்றாயிற்று. அவளை நற்கொலையாகக் கொன்றான்; என்னை உயிர்க்கொலையாகக் கொல்லாநின்றான்." என்பது மிக ஆச்சரியமான நம்பிள்ளையீடு.

இப்படி உயிர்க்கொலையாகக் கொல்லும் விஷயத்திலே மேன்மேலும் வாஸனை பண்ணிப்போருவானேன்? அவ்விஷயத்தைவிட்டு வேறு விஷயங்களிலே போதுபோக்கிக் களிக்கலாகாதோ வென்ன, பேர்ந்தும் பெயர்ந்தும் அவனுடன்றி ஓர் சொல்லிலேன் என்கிறாள். போயும் வந்தும் அவன் திறமான சொற்களாலல்லது போது போக்குகைக்கு வேறு சொல்லுடையேனல்லேன்.

இவள் இப்படிச் சொன்னவாறே நிஷேதிக்கிற தோழிதானும் மிக உகந்தாள். 'நாம் இவளை அவனோடே சேர்ப்பதற்குப் பட்டபரிஶ்ரமம் ஸாமான்யமன்றே; அப்படிச் சேர்ப்பித்த நாமே இவளை மறப்பிக்க முயன்றாலும் மறவாதபடி இவள் ஆழ அவகாஹிப்பதே!' என்று உகந்தாள். அவ்வுகப்பைக் கண்ட பராங்குச நாயகி தீர்ந்த என் தோழி! என்று கொண்டாடி அணைக்கிறாள். தாய்மார் சொல்லும் ஹிதவசனத்தையே நீயும் சொல்லுகையாலே நீயும் அவர்களைப்போலே நிஷேதிப்பவள் என்று வெறுத்திருந்தேன்; உன் நினைவு இதுவாயிருந்ததே! இப்படி வா—என்று உகந்து கூறுகின்றாள் போலும். பிராட்டி, திருவடியை இராவணன் வரவிட்ட ஆள் என்று சங்கித்திருந்தது தவிர்ந்து 'பெருமாள் பக்கலில் நின்றும் வந்தவன்' என்றறிந்த பின்பு அவனைக் கொண்டாடினாற் போலே இவளும் கொண்டாடுகிறபடி ... .... .... .... (௩)

ஊரவர்கவ்வையெருவிட்டு அன்னைசொல்நீர்படுத்து *
ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெருஞ்செயுள் *
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த *
காரமர்மேனி நம்கண்ணன்தோழி! கடியனே. (௪)

| | |
|---|---|
| தோழீ | தோழியே!, |
| ஊரவர் | ஊராருடைய |
| கவ்வை | பழிமொழிகளை |
| எரு இட்டு | எருவாக இட்டு |
| அன்னை சொல் நீர் படுத்து | தாயின் ஹிதவசனமாகிற நீரைப்பாய்ச்சி |
| ஈரம் நெல் வித்தி | ஆசையாகிற நெல்லை விதைத்து |
| முளைத்த | முளைப்பித்த |
| நெஞ்சம் பெரு செயுள் | நெஞ்சாகிற பெரிய வயலிலே |
| பேர் அமர் காதல் | பெரிய ஸம்ப்ரமமான விளைவிப்பதான காதலாகிற பயிரை |
| கடல் புரைய | கடல்போலே அபரிச்சின்னமாக |
| விளைவித்த | பலிக்கும்படி பண்ணின |
| கார் அமர் மேனி | கார்கால மேகத்தின் நிறம் பொருந்திய திருமேனியையுடைய |
| நம் கண்ணன் | எம்பெருமான் |
| கடியனே | கடியனோ? (கடியனல்லன்.) |

* * * [ஊரவர்கவ்வை.] தோழியானவள் தலைவியை நோக்கி, 'அம்மா! ஊரவர் சொல்லும் பழிமொழிகளை நாம் பொருள் படுத்தாமலிருப்பதும் நன்றுதான்; ஆனால் எம்பெருமானால் உனக்கு ஏதேனும் லாபமுண்டாயிருந்தால் 'ஊரவர் கவ்வை கிடக்கட்டும்' என்றிருக்கலாம்; எம்பெருமானோ உன்னை ஒரு சரக்காகவும் மதிக்கவில்லை; ஊரார் பழி சொல்வதொன்றுதானே மிகுகிறது; ஈரநெஞ்சு

இளநெஞ்சு இல்லாதவனான அவனை விட்டிடுதலே நலம்' என்று சொன்னாள். அது கேட்டதலைவி, "தோழீ: நீ சொல்லும் வார்த்தையா இது? நன்று சொன்னாய்; எம்பெருமான் எனக்கு என்ன குறைசெய்தான், சொல்லிக்காண்" என்றாள். அதற்குத் தோழியானவள் "அம்மா! ஊரவர் எவ்வளவு பழிமொழிகள் சொல்லினும் அவற்றை லக்ஷியம் பண்ணாதபடியான ப்ராவண்யம் உனக்கு இருக்கச் செய்தேயும் இந்நிலைமையிலும் அவன் வந்து உனக்கு முகங்காட்டவில்லையே! இதை விட வேறு என்ன குறைவேணும்" என்றாள். அதற்குத் தலைவி "அவன் இப்போது வந்து முகங்காட்டாவிட்டாலும், தன்னையொழிய நமக்கு மற்றொன்றால் பொருந்தாதபடி பண்ணினானே! அவனைப் பொல்லாதவனென்று சொல்லுகிறது? என்கிறாள்.

எம்பெருமான் இப்பராங்குச நாயகிக்கு ப்ரேமத்தை விளைவித்தவாறு இப்பாட்டில் விசதமாகச் சொல்லப்படுகிறது. [ஊரவர் கவ்வை எருவிட்டு] ஒரு வயலிலே பயிர் செழிப்புற்றோங்கி விளங்கவேணுமானால் முன்னம் நல்ல எரு விடவேணும்; தண்ணீர்பாய்ச்சவேணும்; நெல்விதைக்கவேணும்; இத்தனை செய்தால் அது முளைத்துச் செழிப்பான பயிராய் வளர்ந்து விளங்கும். அதுபோல இங்கு ஆழ்வாருடைய நெஞ்சாகிற பெரிய வயலுள் காதலாகிற பயிர் நன்கு வளர்வதற்கு * பத்தியுழவனென்று ப்ரஸித்தனான எம்பெருமான் செய்த காரியங்கள் இதில் ரூபகமரியாதையிலே கூறப்படுகின்றன.

பகவத்விஷயத்தில் அத்வேஷமுண்டான காலமே தொடங்கி ஊரார் பழிசொல்லத் தொடங்கினார்கள். அந்தப் பழியையே ப்ரேமத்திற்கு எருவாக இட்டான் எம்பெருமான். ஊரார் பழிக்கப் பழிக்க, அதுவே காரணமாக ப்ரேமம் வளரத்தொடங்கிற்றென்றபடி. ஊரார் பழிசொல்லாதிருந்தார்களாகில் இத்தலைவி பகவத் விஷயத்தை உபேக்ஷித்திருப்பள் போலும். "எனக்குற்றசெல்வ மிராமாநுசனென்றிசையகில்லா மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்" என்ற இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

அன்னை சொல் நீர்படுத்து = ஊரவர் பழிசொல்வதுகொண்டே இவளுடைய பகவத் விஷய ப்ராவண்யத்தைத் தாயாரும் அறிந்து ஹிதவசனங்கள் சொல்ல ஆரம்பித்தாள்; அந்த ஹிதவசனமே தண்ணீர் பாய்ச்சினபடியாயிற்று. எருவாவது அடியிலே ஒருகாலே யிட்டுவிடுவது; நீர் மாறாமல் பாய்ச்சப்படுவது: இத்தால், ஊரார் ஒருகால் பழிசொல்லி விடுமித்தனை; தாயார் உடனிருந்து எப்போதும் பொடிந்துகொண்டே யிருப்பள் என்பது பெறப்படும்.

ஈர நெல் வித்தி= ஈரமென்று அன்புக்குப் பெயர்; அன்பாகிற நெல்லை விதைத்து என்றபடி. விதைத்தவன் எம்பெருமானென்க.

முளைத்த நெஞ்சப் பெருஞ்செயுள்= இங்கு 'முளைத்த' என்றதை 'முளைப்பித்த' என்றதாகக் கொள்ளவேணுமென்று நம்பிள்ளை திருவுள்ளம். எருவும் இட்டு நீரும் பாய்ச்சினாலும் முளைக்குமிடத்தான் அவனருள் இன்றியமையாத

தாகையாலே இங்ஙனே கொள்ளத் தகுதியுண்டு. [நெஞ்சப் பெருஞ்செயுள்] செய் என்று பயிர் விளையும் நிலத்திற்குப் பெயர்; 'பெருஞ் செயுள்' என்று பெருமையையிட்டு விசேஷித்ததற்கு நம்பிள்ளையருளிச்செய்தது காணீர்—"ஸம்ச்லேஷவிச்லேஷங்களாலே புடைபடுத்தி நித்யவிபூதிபோபூரதி பரப்புடைத்தாம்படி பெருக்கினானாயிற்று" என்று.

ஆக, ஊராராலராகிற எருவையிட்டு, தாயாருடைய நிர்த்தாஷிதவசனமாகிற நீரை நிறுத்தி ஆசையாகிற நெல்லை வித்தி முளைப்பித்த நெஞ்சமாகிற பெரிய விளை நிலத்துக்குள்ளே,பேரமர்காதலைக் கடல்போல்விளைவித்தானாயிற்று. பேர்—பெரியதாய், அமர்—அமர்ந்ததான, காதல் என்று பொருள். அமர் என்று பூசலுக்குப் பெயராகக் கொண்டால் பெரிதான பூசலை விளைத்த காதல் என்று கொள்ளலாம். இப்பொருளில் "பேரமர்க்காதல்" என்று ககரவொற்று மிக்குப் பாடமிருக்கவேணும். அமர்ந்த காதல் என்னும் பொருளில் வினைத்தொகையாகையாலே இயல்பாம்.

விளைவித்த காரமர்மேனி= அடியிலே எருவுமிட்டு நீரும் பாய்ச்சினாலும் மேலே மழை பெய்தல் இல்லையாகில் அப்பயிர் தலை குளிர்ந்திராதே; காளமேகத் திருவுருவைக் காட்டிக்காட்டி இக்காதலை வளர்த்திக்கொண்டு போனானென்பது தோன்ற "விளைவித்த காரமர்மேனி" என்றது.

தோழீ! நம் கண்ணன் கடியனே?= இவ்வளவு மஹோபகாரம் செய்தருளினவனையோ கடியனென்பது. நீதான் தோழியாயிருந்துவைத்து இங்ஙனே சொல்லத்தகுமோ? நீர்மையையுடையவன் என்று சொல்லி முதலிலே பொருந்தவிட்ட நீயே இப்போது நிர்த்தயன் என்னத் தகுமோ? என்கிறாள்.

திருவள்ளுவர் குறளில் "ஊரவர் கவ்வை யெருவாக அன்னை சொல் நீராக நீளுமிந்நோய்" என்றொரு குறள் உள்ளது காண்க. கௌவை என்னினும் கவ்வை எனினும் ஒக்கும்.

ஆசார்யஹ்ருதயத்தில் "பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய்" என்கிற ஆச்சரியமான சூர்ணிகை இப்பாசுரத்தையே முக்கிய லக்ஷியமாகக் கொண்டு அவதரித்தமை யுணர்க. (ச)

கடியன்கொடியன்நெடியமால் உலகம்கொண்ட<br>
அடியன் *அறிவருமேனிமாயத்தன் *ஆகிலும்<br>
கொடியவென்னெஞ்சம் அவனென்றேகிடக்குமெல்லே! *<br>
துடிகொளிடைமடத்தோழீ!அன்னையென்செய்யுமே? (ரு)

| | | | |
|---|---|---|---|
| கடியன் | தன்காரியத்தில் விரைகின்ற கனைமையை யுடையவன்; | கொடியன் | அக்காரியம் தலைக்கட்டினால் திரும்பிப்பாராமல் போகிறகொடியவன்; |

| | |
|---|---|
| நெடிய மால் | போகத் தொடங்கினால் விலக்க அரிதாம்படி பெரிய மேன்மையை புடையவன்; |
| உலகம் கொண்ட அடியன் | உலகம் முழுவதையும் தன்னதேயாம்படி யளந்து கொண்ட திருவடியை யுடையவன்; |
| அறிவு அரு மேனி மாயத்தன் | நல்லவனோ தீயவனோ என்று விவேகிக்க அரிதாம்படி அழகாலே மயக்கும் மாயத்தையுடையவன்; |
| ஆகிலும் | இங்ஙனே யாகிலும் |
| கொடிய என் நெஞ்சம் | கொடிதான என்னுடைய மனமானது |
| அவனே என்று கிடக்கும் | அப்பெருமானே தஞ்சமென்று கிடக்கின்றது; |
| எல்லே | என்னே!; |
| துடி கொள் இடை | உடுக்கை போன்ற இடையையும் |
| மடம் | மடப்பத்தையுமுடைய |
| தோழீ | தோழியே!; |
| அன்னை | என் தாய் |
| என் செய்யும் | என்ன செய்யக்கூடும்? |

* * * [கடியன் கொடியன்] தோழீ! நான் சொல்லுகிறபடியே எம்பெருமான் குணசாலியாகவன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என்னெஞ்சம் அவனையல்லது அறியாது; இவ்விஷயத்தில் நின்றும் என்னை மீட்கைக்காகவன்றோ நீ அவனை குண ஹீநனென்பது; குணஹாநியையிட்டே நான் அவனை விரும்பி மேல்விழுகிறேனாகக் கொள்ளாய்; ஆகவே உன்னுடைய சொல்லுக்கு ஒரு ப்ரயோஜன மில்லைகாண் என்கிறாள்.

கடியன் = எம்பெருமானுக்கு குணஹாநி சொல்லும்போதும் நான் சொல்லவேணுமே யல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டினவத்தனையே யன்றோ உன்பணி; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானேயல்லது நீயல்லையே. அவனிடத்திலுள்ளது நன்மையோ தீமையோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே; ஆகையாலே குணஹாநியையும் என்வாயால் நான் சொல்ல நீ கேளாய் என்று பிடிகை போட்டுக்கொண்டு இரண்டடிகளாலே அவனது குணஹாநியைச் சொல்லுகிறாள்.

கடியன் = ஸ்வகார்யத்திலே கனவேக முடையவன் என்கை. தனக்கொரு கார்யமுண்டானால் தானே வந்து மேல்விழுந்து சடக்கெனக் கலக்குமவன் என்றபடி. கொடியன் = இத்தலையில் நோவுபாராதே பிரியுமவன் என்கை. நெடியமால்—மிகவும் பெரியவன்; அதாவது—கைபுகுந்திருக்கச் செய்தேயும் அளவிடவொண்ணாதபடி யிருக்குமவன் என்கை. இதனுடைய கருத்தாவது—மேல்விழுந்து கலவா நிற்கச்செய்தே பிரியவேணுமென்று நினைப்பன்; அப்படி அவன் நினைத்ததையறிந்து, பிரியலாகாதென்று மடிபிடித்துக் கால்கட்டி விலக்கப்பார்க்கலாமே; அப்படி விலக்குவதற்குக் கூசிநடுங்கி அஞ்சியிருக்கவேண்டும்படி திமிரென்று பாவம் பாராட்டியிருப்பவனென்றவாறு.

உலகங் கொண்டவடியன் = பிறருடைமையைத் தனக்காக்க நினைத்தால் பின்னையும் அவர்களுக்கு ஓர் அடியும் சேஷியாதபடி பண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன்.

அறிவருமேனி மாயத்தன் = வடிவைக்கண்டால் 'ஸர்வஸ்வதானம் பண்ண விருக்கிறனே? ஸர்வஸ்வாபஹாரம் பண்ண விருக்கிறனே? என்று தெரியாதபடி ஆச்சரியமான தன்மையை யுடையவன். மாயத்தன் என்பதற்கு நம்பிள்ளையீடு;—"நானும் என்னுடைமையும் நீ யிட்டவழக்கு என்ற இவ்வுக்தியை அநுஸந்தித்து அதிலே நெஞ்சு அபஹ்ருதமா யிருக்க, அவ்வளவிலே கண்ணிலே மணலைத்தூவி அகலவல்லவன்" என்பதாம்.

இப்படிப்பட்ட குணஹாநிகளைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றே சொல்லவல்லேன்; தோழீ! இவை உன்னாலும் சொல்லப்போகாது; இதற்கென்றே இட்டுப்பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்லப்போகாது; இவ்வளவு குணஹாநிகளையும் நான் அறிந்துவைத்தேயன்றே இவ்விஷயத்தில் ஈடுபட்டுக்கிடக்கிறது. ஆகிலும் என்றதனால் ஏற்படுகிற கருத்து இது.

கொடிய என்னெஞ்சம்=லோகவிலக்ஷணமாயன்றே என்னுடைய நெஞ்சு இருப்பது. குணம்கண்டு பற்றுவதும், குணஹாநிகண்டு கைவிடுவதும் நாட்டார்படியாயிருக்க, குணஹாநிதானே பற்றுகைக்கு உடலாயன்றே எனக்கிருக்கிறது என்கிறாள்.

அவனென்றே கிடக்கும் என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் நிர்வஹிப்பர்கள். இவை தோஷங்களே யானாலும் அவனுடைய தோஷங்களாகையாலே தத்ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களே யென்று நெஞ்சு கொள்ளுவதாக ஒரு நிர்வாஹம். கீழ்ச்சொன்ன குணஹாநிகளில் நோக்கு இன்றிக்கே தர்மியான எம்பெருமானை மாத்திரமே என்னெஞ்சு பற்றி யிருக்கின்றது—என்பதாக மற்றொரு நிர்வாஹம். "நிர்விசேஷ சிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்று மாயாவாதிகள் விசேஷணமற்ற விசேஷ்யமாத்ரத்தை மாத்திரமே அங்கீகரிக்குமாப்போலே, குணமோ குணஹாநியோ அந்த விசேஷணங்களில் தாத்பர்யமின்றிக்கே விசேஷ்யபூதனான எம்பெருமானளவிலே ஊன்றியிருக்கின்றதாகச் சொன்னபடி.

ஸ்ரீவசநபூஷணத்தில்—"பகவத் விஷயத்தில் இழிகிறதும் குணங்கண்டன்று; ஸ்வரூபப்ராப்தமென்று. இப்படி கொள்ளாதபோது குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத் விஷயப்ரவ்ருத்தியும் தோஷாநுஸந்தாநதசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியும் கூடாது. * கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கும் * அடியேன் நான் பின்னுமுன்சேவடியன்றி நயவேன் * என்று நின்றார்களிறே. குணக்ருததாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம். அநஸூயைக்குப் பிராட்டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது." என்றுள்ள திவ்ய ஸூக்திகள் இங்கே அநுஸந்தேயங்கள்.

தலைவி சொன்ன வார்த்தையைக்கேட்ட தோழியானவள் "அம்மா! நீ சொல்லுமதை நான் அறியேனே? நான் விலக்குகிறேனல்லேன்; தாயார் வெறுக்

கும் என்று சொல்லுகிறேன்'' என்ன; அன்னை என்செய்யுமே என்கிறாள்;— உன்வார்த்தை கேளாதநானோ தாயார் வார்த்தை கேட்பேன்? அந்நிலை கழிந்த தில்லையோ வென்கிறாள். (அ)

அன்னையென்செய்யிலென்?ஊரென்சொல்லிலென்?தோழிமீர்!*
என்னையினியுமக்காசையில்லை அகப்பட்டேன் *
முன்னையமரர்முதல்வன் வண்துவராபதி
மன்னன் *மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| தோழிமீர் | தோழிமார்களே! | அகப்பட்டேன் | சிக்கிக் கொண்டேன்; |
| முன்னை அமரர் முதல்வன் | நித்ய ஸூரிநாதனும் | இனி | ஆனபின்பு |
| வண் துவரா பதி மன்னன் | அழகிய த்வாரகாபுரிக்கு அரசனும் | என்னை | என்திறத்திலே |
| மணிவண்ணன் | நீலமணிவண்ணனுமான | உமக்கு ஆசை இல்லை | நீங்கள் ஆசைவைக்க நியாயமில்லை; |
| வாசுதேவன் | கண்ணபிரானுடைய | அன்னை என் செய்யில் என் | தாய் எது செய்தால்தான் என்ன? |
| வலையுள் | வலையினுள்ளே | ஊர் என் சொல்லில் என் | ஊரார் எதுசொன்னாலும் தான் என்ன?. |

* * * [அன்னை யென்செய்யிலென்? ] நீ இங்ஙனே துணிவு கொண்டால் தாயார் ஜீவிக்கமாட்டாள்; அத்தாலே ஊராருடைய பழிப்பும் மிகும் என்று தோழி சொல்ல, கண்ணபிரானுடைய குணசேஷ்டிதாதிகளிலே நான் அகப்பட்டேன், இனி யார் என்செய்தாலென்ன என்கிறாள்.

அன்னை என்செய்யில் என் ? = 'தாயார் பொறுள், தாயார் பொறுள்' என்று தோழி அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தாள்; தலைவி அவளை நோக்கி 'தாயார் பொறுமல் என்ன செய்துவிடுவள்' என்று கேட்டாள்; 'உயிர் மாய்ந்து போவள்' என்று தோழி விடைகூறினாள். அதற்குத் தலைவி சொல்லும் விடை இது; 'தாயார் ஜீவித்தாலென்ன? முடிந்தாலென்ன?' என்றவாறு.

'தாயார் முடிவதையும் கணிசியாமல் இவள் நாயகனுடைய வடிவழகிலே யீடுபட்டாள்' என்று ஊரார் பழி சொல்லுவர்களே! என்ன; ஊரென் சொல்லி லென் ? என்கிறாள்.

இப்படி உதறிச்சொல்லுகைக்குக் காரணம் என்ன? என்று கேட்க; முன்னையமரர் முதல்வன் வண்துவராபதி மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் வலையுள் அகப்பட்டேன், (ஆகையாலே) என்னை(ப் பற்றி) இனி உமக்கு ஆசை யில்லை யென்கிறாள்.

" வாசுதேவன்வலையுளே அகப்பட்டேன் " என்றது — வாசுதேவனாகிற வலையிலேயகப்பட்டேன் என்றும், வாசுதேவனுடைய வலையிலே யகப்பட்டேன் என்றும் பொருள் பெறும். வலையாவது தன் பக்கலில் அகப்பட்டாரை வேறு

இடத்திற்குப் போகவொட்டாமல் செய்வதாதலால் எம்பெருமானை வலையாகக் கூறுதல் பொருந்தும். "பாலாலிலையில் துயில்கொண்டபரமன் வலைப்பட்டிருந் தேனை" என்றாள் ஆண்டாளும். எம்பெருமானுடைய வலை என்று பொருள் கொள்ளும்போது திருக்கண்களை வலையாகக் கொள்ளலாம். "உகவையால் நெஞ்சமுள்ளுருகி உன் தாமரைத்தடங்கண் விழிகளின் அகவலைப்படுப்பான்" என்பர் மேலே.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்; "ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் வலைபாக அபிநயித்துப் பாடாநிற்க, திருக்கண்களைக் காட்டியருளின எம்பெருமானார். 'கார்த்தண் கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு' என்னக் கடவதிறே. அநுகூலம் போலேயிருந்து தப்பாதபடி அகப்படுத்திக் கொள்ளும் நோக்கிலே அகப்பட்டேன்." (சு)

வலையுளகப்படுத்து என்னைநல்நெஞ்சம்கூவிக்கொண்டு *
அலைகடற்பள்ளியம்மானை ஆழிப்பிரான்தன்னை *
கலைகொளகலல்குல்தோழி! நம்கண்களால்கண்டு *
தலையில்வணங்கவுமாங்கொலோ? தையலார்முன்பே (எ)

| | |
|---|---|
| கலை கொள் | சேலை யணிந்ததும் |
| அகல் | அகன்றதுமான |
| அல்குல் | நிதம்பத்தையுடைய |
| தோழீ | தோழியே! |
| என்னை | என்னை |
| வலையுள் | (தன்னுடைய குண சேஷ்டிதங்களாகிற) வலையிலே |
| அகப்படுத்து | சிக்கிக் கொள்ளும்படி செய்து |
| நல் நெஞ்சம் | (என்து) நல்லநெஞ்சை யும் |
| கூவிக்கொண்டு | அடியறுத்து அழைத்துக் கொண்டு |
| அலை கடல் பள்ளி அம்மானை | அலை யெறிகின்றகடலிலே (ஏகாந்தமாகப்) பள்ளி கொள்ளும் ஸ்வாமியாய் |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியாழ்வானை ஏந்தியுள்ள மஹோபகாரகனான எம்பெருமானை |
| நம் கண்களால் கண்டு | நமது கண்களாலே பார்த்து |
| தையலார் முன்பே | (பழிசொல்லுகிற) மாதர்களின் கண்வட்டத்தில் |
| தலையில் | தலையாலே |
| வணங்கவும் ஆம் கொலோ | வணங்கவும் கூடுமோ? |

* * * [வலையுளகப்படுத்து.] எம்பெருமான் பக்கலில் குணஹாநி சொன்னவர்களுடைய வாய் அடங்கும்படி நாம் அவனைக் காணப்பெற்றுத் தலையாலே வணங்கலாம்படியான காலம் வாய்க்குமோ தோழீ யென்கிறாள். என்னைத் தன்னுடைய குணசேஷ்டிதங்களாகிற வலையில் அகப்படுத்திக்கொண்டு * காற்றிற் கடியனாயோடித் திருப்பாற்கடலிலே புக்கொளித்த பெருமானைத் தோழீ! அவனுக்கு குணஹாநி சொல்லுகிற இந்தப் பெண்டுகள் கண்ணெதிரே நம் கண்களால் கண்டு தலையாலே வணங்கப் பெறுவோமே என்றாளாயிற்று.

"தலையில் வணங்கவுமாங்கொலோ" என்றவிடத்து ஈட்டில் சுவைமிக்க ஓர் ஐதிஹ்யமுள்ளது. நஞ்ஜீயர் ஸ்ரீபாதத்தில் [illegible] ஈத்தாழ்வான்

இப்பாசுரத்தை உபந்யஸித்தருளாநிற்கையில் ஆமருவிநிரை மேய்த்தான் நம்பியா ரென்று நூறு பிராயம் போந்திருப்பாரொரு பெரியவர் நடுங்க நடுங்க எழுந்தி ருந்து நின்று "ஸ்வாமிந்! தலைமகள் தலையாலே வணங்கப் பெறுமோ?" என்று கேட்க, அதற்கு ஆழ்வான் 'இதில் என்ன ஸந்தேஹம்? சிஷ்டாசாரமுண்டு காணும்; ஸ்ரீஜநகராஜன் திருமகள் அநுஷ்டித்தாள்காணும்' என்றுசொல்லி * கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ । தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய = கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ, தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச சிரஸா சாபிவாதய * என்கிற [ஸீதையின் வாக்யமாகிய] ஸ்ரீராமாயணச்லோகத்தை யெடுத்து விரியவுபந்யஸித் தருளினாராம்.



பிராட்டி பெருமாளைத் தான் தலையாலே வணங்கினதாகச் சொல்லும்படி திருவடியிடத்துக் கூறியிருக்கின்றாள். இங்கே ஒரு ரஹஸ்யார்த்தம் பெரியார் அருளிச்செய்வதுண்டு. பெருமாள் காட்டுக்குப் புறப்படும்போது பாதுகையும் கூடவந்தது, பிராட்டியும் கூடவந்தாள். பாதுகை பெருமாளைப் பிரிந்து வடக்கே சென்றது; பிராட்டி அதற்குப் பிறகு பெருமாளைப் பிரிந்து தெற்கே செல்ல நேர்ந் தது. பெருமாளை விட்டுப்பிரிந்ததென்னுமிடம் பாதுகைக்கும் பிராட்டிக்கும் ஒத்திருக்கச் செய்தேயும், பாதுகை ராஜ்யாபிஷேகம் பெற்று மிகுந்த செல்வச் சிறப்பை அநுபவியாநின்றது; பிராட்டி எழுநூறுராக்ஷஸிகளினிடையே கிடந்து பலவகை வருத்தங்களும் பட நேர்ந்தது. இதைப் பிராட்டி ஆலோசித்துப் பார்த் தாள். 'பாதுகை பரமானந்தத்திலிருக்கவும் நாம் பெரிய ஆபத்தில் விழுந்து கிடக்கவும் என்ன காரணம்?' என்று ஆராய்ந்து பார்த்தாள். பெருமாளுடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற பாக்கியம் பாதுகைக்கு இருந்ததனாலே அது சிறப்புப் பெற்றது; நாம் பத்தினியான முறைமையாலே * பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா * என்கிற தந்தை கட்டளையின்படி கையைப் பிடிக்க நேர்ந்ததனாலே பாதுகைக்குண்டான சிறப்பு நமக்கு வாய்க்கவில்லை; இது வரையில் பெருமாளுடைய திருவடி ஸம்பந்தம் பெறாத குறைதீர இன்று ஆசார்ய முகேந அதனைப் பெற்றிடுவோம் என்று கருதியே * சிரஸா சாபிவாதய * என்று சொல்லியனுப்பினாளென்று.

இவ்வர்த்தம் ஈட்டிலும் "இதுதான் ப்ரணய ரோஷம் தலையெடுத்துச் சொல்லுகிற வார்த்தையோ? அபேக்ஷை தோற்றச்சொல்லுகிற வார்த்தையோ?" என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்திகளிலும் உறைந்திருக்கும். ... .... (எ)

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்து மருதிடை
போய்முதல்சாய்த்து * புள்வாய்பிளந்து களிறட்ட *
தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானை எந்நாள்கொலோ? *
யாமுறுகின்றதுதோழீ! அன்னையர்நாணவே. (அ)

| சொல் | பொருள் |
|---|---|
| தோழீ | தோழியே!, |
| பேய் முலை உண்டு | பூதனையின் முலையைப் புசித்து |
| சகடம் பாய்ந்து | சகடத்தை முறித்துத் தள்ளி |
| மருது இடை போய் | இரட்டை மருதமரங்களி னிடையே தவழ்ந்து சென்று |
| முதல் சாய்த்து | (அற்றை) வேரோடே தள்ளி |
| புள் வாய் பிளந்து | பகாசுரனுடைய வாயைக் கிழித்து |
| களிறு அட்ட | குவலயாபீட யானையைக் கொன்று முடித்த |
| தூ முறுவல் தொண்டை வாய் பிரானை | பரிசுத்தமான மந்தஹாஸத்தையும் கொவ்வைக் கனி போன்றதிருப் பவளத்தையுமுடைய பெருமானை |
| அன்னையர் நாண | தாய்மார் தலைதொங்கும்படியாக |
| யாம் உறுகின்றது | நாம் கிட்டுவது |
| எ நாள் கொலோ | என்றைக்கோ? |

* * * [பேய்முலையுண்டு.] மஹோபகார சீலனான எம்பெருமானை குணஹீநன் என்று குறைகூறின தாய்மார் "அந்தோ! இப்பெருமானையோ நாம் குணஹீநனென்று சொன்னது!" என்று வெட்கப்பட்டுக் கவிழ்தலையிடும்படி நாம் அப்பெருமானைக் காண்பது என்றைக்கோ? என்கிறாள்.

எம்பெருமானுக்குப் பரோபகார சீலத்வம் நேற்று இன்றைக்கு வந்ததன்றே, ஜன்மஸித்தமாயிற்றே யென்று நிரூபிக்கிறாள் பேய்முலையுண்டு இத்யாதியால். பூதனையால் வந்த ஆபத்தைப்போக்கி, சகடத்தினால் வந்த அனர்த்தத்தைத் தவிர்த்து, இரட்டை மருதமரங்களால் வந்த தீமையைத் தொலைத்து, பகாஸுரனால் வந்த வாதையை நீக்கி, குவலயாபீட யானையினால் நேர்ந்த விபத்தையும் தொலைத்து இப்படி ஆச்ரித விரோதி நிரஸநம் பண்ணி உபகரிக்கப் பெற்றோமே! என்று தூமுறுவல் செய்திருக்கும் பெருமானை நம் தாய்மார் கண்டால் 'இவனிடத்திலோ நாம் குணஹாநி சொன்னது' என்று நாணிக்கவிழ்ந்திருப்பார்களே; அன்னவனை நாம்கிட்டுவது எந்நாள்கொலோ! என்றதாயிற்று.

ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"இப்போது அவனை ஸ்பர்சித்து நம் ப்ரயோஜநம் பெற ஆசைப்படுகிறோமல்லோம்; [அன்னையர் நாணவே] 'பிரிந்த வனந்தரம் அவன் தானே வருமளவும் ஆறியிருந்திலள், அவன் தானும் வரவு தாழ்த்தான்' என்று இரண்டு தலைக்கும் பழி சொல்லுகிற தாய்மார் முன்பே, 'நாம் இத்தலை மடலெடுக்குமளவாம்படி பிற்பாடரானோமாகாதே' என்று * ஹ்ரீரேஷாஹி மமாதுலா * என்கிறபடியே அவன் லஜ்ஜித்து வந்து நிற்கிறபடியைக்கண்டு 'இவனையோ நாம் இவ்வார்த்தை சொல்லிற்று!' என்று அவர்கள் லஜ்ஜித்துக் கவிழ்தலையிடும்படியாக." . .... .... ... .... (அ)

நாணும்நிறையும்கவர்ந்து என்னைநல்நெஞ்சம்கூவிக்கொண்டு *
சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்தன்னை *
ஆணையென்? தோழீ! உலகுதோறலர்தூற்றி * ஆம்
கோணைகள்செய்து குதிரியாய்மடலூர்துமே. (கூ)

| | |
|---|---|
| என் தோழி | எனது தோழியே, |
| என்னை | என்பக்கலில் நின்றும் |
| நாணும் | நாணத்தையும் |
| நிறையும் | அடக்கத்தையும் |
| கவர்ந்து | கொள்ளை கொண்டு |
| நல் நெஞ்சம் கூய்க் கொண்டு | (எனது) நல்ல நெஞ்சையும் ஆகர்ஷித்துக் கொண்டு |
| சேண் உயர் வானத்து இருக்கும் | மிகவும் உயர்ந்த பரமபதத்திலெழுந்தருளியிருக்கிற |
| தேவபிரான் தன்னை | நித்ய ஸூரிநாதனை |
| உலகு தோறு | ஒவ்வோருலகத்திலும் |
| அலர் தூற்றி | பழிதூற்றி |
| ஆம் கோணைகள் செய்து | செய்யக்கூடிய பிறக்குக்களைச்செய்து |
| குதிரி ஆய் | அடங்காத பெண்ணாய் |
| மடல் ஊர்தும் | மடலூரக் கடவோம்; |
| ஆணை | இது திண்ணம். |

* * * [நாணு நிறையும்] என்பக்கல் ஸர்வஸ்வமும் கொள்ளைகொண்டு எட்டா நிலத்திலிருக்கிறவனை ஸகலலோகமும் பழிக்கும்படி மடலூரக்கடவேனென்று தோழிக்குத் தனது நெஞ்சை வெளியிடுகிறாள்.

வாசல்விட்டுப் புறப்படமாட்டாதிருக்குமிருப்பு நாண்; நெஞ்சிலுள்ளே போடுவது தாய்மார்க்கும் சொல்லவொண்ணாதபடியிருக்குமடக்கம் நிறை; இவ்விரண்டையும் கொள்ளைகொண்டானென்றது அதிமாத்ர ப்ராவண்யத்தை விளைத்தானென்றபடி. நெஞ்சாவது ஸ்வாதீநமாக இருந்தால் குறையில்லையே, அதனையும் தன்பக்கலிலே கொடித்துக் கொண்டமை சொல்லிற்று நன்னெஞ்சம் கூவிக்கொண்டு என்றதனால். "முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சு" என்கிறபடியே தன்னிற்காட்டிலும் அவன் விஷயத்திலே ஊற்றம் முற்பட்டிருக்கையாகிற நன்மையை நோக்கி நன்னெஞ்சம் என்றது.

சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான் தன்னை= கீழே "என்னை நன்னெஞ்சம் கூவிக்கொண்டு அலைகடற்பள்ளியம்மானை" என்று திருப்பாற்கடலிலே சென்று ஒளித்துக் கிடந்ததாகச் சொல்லிற்று. இப்போதிங்கு ஸ்ரீவைகுண்டத்திலே போய் இருப்பதாகச் சொல்லுகிறது; கடலிலே கிடந்தால் பதற்றத்தினால் திரைமேலே அடியிட்டுக் கையும்மடலுமாய் க்ஷீரஸாகரத்திலே இவள் வந்து நிற்கவுங்கூடும் என்று நினைத்து எட்டாநிலத்திலே போய் இருந்தான் போலும். அவன் எங்குச்சென்றாலுந்தானென்ன? 'ஊராதொழியேனுலகறியவொண்ணுதலீர்' என்று சபதஞ் செய்து கிடக்கிற எனக்குத் தப்பிப்பிழைக்கவொண்ணுமோ அவனால்? தோழீ! நான் ஆணையிட்டுச் சொல்லுகிறேன் கேள்; அவ்வோலக்கமும் அவனும் அவ்விருப்பும் என் கையிலே படப்புகுகிறபாடு பாராய்; இருந்தவிடத்தே இருக்கவொட்டுவேனென்றிருக்கிறாயோ? உலகமெங்கும் புக்குப் பழிதூற்றி அழிக்கக்கடவேன். என்னை ஊரார் பழி சொல்லும்படி பண்ணின அவனை லோகமாகப் பழி சொல்லும்படி நான் பண்ணக்கடவேன் என்கிறாள்.

கோணை—பிறக்கு; ஆம் கோணை= எவ்வெவ்விதமாக பிறக்குகள் செய்யமுடியுமோ அவ்வவ்விதமெல்லாம் செய்வேனென்கிறாள். குதிரி—நாணற்றபெண், அடங்காப்பெண். குஸ்த்ரீ (குஸ்த்ரீ) என்னும் வடசொல் குதிரியெனத் திரிந்ததென்னலாம். ... .... ... ... (௯)

யாமடலூர்ந்தும் எம்மாழியங்கைப்பிரானுடை *
தூமடல்தண்ணந்துழாய் மலர்கொண்டுசூடுவோம் *
யாமடமின்றித் தெருவுதோறயல்தையலார் *
நாமடங்காப்பழிதூற்றி நாடுமிரைக்கவே. (கo)

| பதம் | பொருள் |
|---|---|
| யா மடம் இன்றி | ஏதேனும் ஒருபடியாலும் பெண்மைக்குரிய ஒடுக்க மில்லாமல் |
| தெருவு தோறு | வீதிகள் தோறும்புகுந்து |
| அயல் தைய லார் | அயல் பெண்களும் |
| நாடும் | ஸகல லோகமும் |
| நா மடங்கா பழி தூற்றி | நாக்கு இடைவிடாதே சொல்லுகிற பழிமொழி களைத் தூற்றி |
| இரைக்க | இரைச்சல் போடும்படி |
| யாம் | நாம் |

| பதம் | பொருள் |
|---|---|
| மடல் ஊர்ந்தும் | மடலூர்ந்தாகிலும் |
| ஆழி அம் கை எம்பிரானுடை | திருவாழியைத் தரித்த அழகிய திருக்கையை பு[illegible]டைய எம்பெருமானுடைய |
| தூ மடல் | பரிசுத்தமான இதழ்களை யுடைய |
| தண் அம் துழாய் மலர் | குளிர்ந்தழகிய திருத் துழாய்மலர் மாலையை |
| கொண்டு | அவன்தரப் பெற்று |
| சூடுவோம் | தலையில் அணிவோம். |

* * * [யாமடலூர்ந்தும்.] மடலூர்வதில் தனக்குள்ள உறுதியை நன்கு வெளியிடுகிறாள். பாட்டினடியில் யாம் என்றது ஸ்வஸ்வரூபத்தை உறுத்திக்காட்டுகிற படி. திருவடி அசோகவனத்தில் பிராட்டியை நோக்கி 'தேவரீர் இவ்வளவு அல்லல் படுவானேன்? ஒரு நொடிப்பொழுதில் அடியேன் தேவரீரைப் பெருமாள் திருவடிவாரத்திலே கொண்டு சேர்க்குமாறு இசைந்தருளலாகாதோ?' என்று சொல்ல, அது கேட்ட பிராட்டி * [illegible] சரைஸ் து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந:, மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம்பவேத். * என்றாள். எம்பெருமானுடைய திருவுள்ளப்படியே என்ன ஆகிறதோ அதைப்பார்த்துக் கொண்டிருப்பது நமக்கு ஸ்வரூபமேயன்றி நாமாக ஒரு அதிப்ரவ்ருத்தி செய்யத்தகாது என்பது இப் பிராட்டிவசனத்தினால் சிக்ஷிக்கப்பட்டதாகிறது. இப்படியிருக்கவேண்டிய ஸ்வரூபத்தையுடையேன்யான் என்று காட்டுகிறபடி. ஆனாலும் பதறாதிருக்க முடியவில்லையென்கிறாள் மடலூர்ந்தும் என்பதனால். மடலூர்தல் என்பதற்குத் தமிழர்கள் சொல்லுகிறபடி பனைமட்டையைக் கையிலே கொள்ளுதல் முதலான காரியங்கள் இங்கு விவக்ஷிதமல்ல; ஸாஹஸமாக அதிப்ரவ்ருத்திகளைச் செய்தாகிலும் என்றபடி. அதாவது தன்னுடைய பதற்றத்தைக் காட்டுதல்.

எம்மாழியங்கைப்பிரானுடை என்றவிடத்திலே நம்பிள்ளை யீடுகாண்மின்; "அவன் கையுந்திருவாழியும் போலேயன்றோ நான் கையும் மடலுமாய்ப் புறப்பட்டாலிருப்பது. நான் கையும் மடலுமாய்ப் புறப்பட்டால் அஞ்சி எதிரே வந்து தன்கையில் ஆபரணத்தை வாங்கி என்கையிலேயிட்டு, தன் தோளில்

மாலையை வாங்கி என்தோளிலே யிட்டானாகில் குடியிருக்கிறான்; இல்லையாகில் எல்லாம் இல்லையாகிறது."

எம்பெருமான் பக்கலில் தான் பெற நினைப்பது திருத்துழாய் ப்ரஸாதமத்தனையே யென்பது தோன்ற இரண்டாமடியுள்ளது. மூன்றாமடியில் "யாம், மடமின்றி" என்று பிரித்துப் பொருள் காட்டப்படுகிறது ஒன்பதினாயிரப்படியில். "யாமடமென்றது ஏதேனுமொரு மடப்பமுமென்றபடி" என்பர் பன்னீராயிரவுரைகாரர்.

ஈற்றடியிலும், 'கா, மடக்கா' என்றும், 'காம் அடங்கா' என்றும் கொள்வர். மடங்குதலாவது ஒய்தல்; காக்கு ஒபாதே சொல்லும் பழமொழி யென்க.

இரைக்கும்கருங்கடல்வண்ணன் கண்ணபிரான்தன்னை *
விரைக்கோள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
நிரைக்கொளந்தாதி ஓராயிரத்துளிப்பத்தும் *
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும்தம்மூரெல்லாம் (கக)

| | |
|---|---|
| இரைக்கும் | கோஷிக்கின்ற |
| கரு கடல் வண்ணன் | கருங்கடல் போன்ற வடிவழகையுடையனான |
| கண்ணபிரான் தன்னை | கண்ணபிரானான எம்பெருமானைக்குறித்து, |
| விரை கொள் பொழில் | பரிமளம்மிக்க சோலைகளை யுடைய |
| குருகூர் | திருநகரியில் அவதரித்த |
| சடகோபன் | ஆழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்த |
| நிரை கொள் | சாஸ்த்ரமரியாதைப் படியே ஒழுங்குகளைக் கொண்ட |
| அந்தாதி | அந்தாதித் தொடையாயமைந்த |
| ஓர் ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களினுள்ளே |
| இ பத்தும் | இப்பதிகத்தை |
| உரைக்க வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| தம் ஊர் எல்லாம் | தம்தம் இருப்பிடமெல்லாம் |
| வைகுந்தம் ஆகும் | பரமபதம் போலே பேரின்பநிலமாக விளங்கும். |

* * * [இரைக்கும்.] இத்திருவாய்மொழி சொல்லவல்லார் என்னைப்போலே மடலூர்வேனென்னவேண்டாதே, தாங்களிருக்குமிடத்தே எம்பெருமான் தானே வந்து நித்யஸம்ச்லேஷம் பண்ணப்பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார்.

"இரைக்குங் கருங்கடல் வண்ணன்" என்றதற்கு இரண்டுபடியாக அருளிச்செய்வர்கள். வண்ணமென்று நிறத்துக்கும் தன்மைக்கும் பெயர்; நிறத்தைச் சொல்லும்போது மடலூர்ந்தாகிலும் பெறவேண்டும்படியான வடிவழகு சொல்லிற்றாகிறது. தன்மையைச் சொல்லும்போது, ப்ரக்ருதத்தில் கடலுக்கும் எம்பெருமானுக்கும் துல்யமாகச் சொல்லக்கூடிய தன்மை யாதெனில்; இங்கே

ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"(இரைக்கும் கருங்கடல் வண்ணன்) அனந்தாழ்வான் பணித்தானாக நஞ்சீயர் வந்து பட்டருக்கு * ஸாவஸாநய என்றபோது கடல் கீழ் மண்கொண்டு மேல் மண் எறிந்தாற்போலேயாயிற்று இவன் மடலூர்வன் என்ற துணிவைக்கேட்டு அவன் தன் ஸர்வாதிகத்வம் கலங்கினபடி என்றருளிச்செய்தார்" என்று. ஸமுத்ரராஜனை நோக்கிப் பெருமாள் சரணாகதி பண்ணச் செய்தேயும் அவன் முகங்காட்டாவிட்டவாறே இளையபெருமாளை நோக்கி "ஸாவஸாநய ஸௌமித்ரே—சாபமாநய ஸௌமித்ரே!" (லக்ஷ்மணா! வில்லைக் கொண்டுவா) என்று நியமித்தருளினவுடனே கடல் கலங்கினது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். ஸ்ரீராமன் அம்புதொடுக்க நினைத்ததும் ஆழ்வார் மடலூர்வேனென்றதும் துல்யமாகையாலே (இப்போது ஸமுத்ரஸ்தாநீயனான எம்பெருமான்) மடலூர்வேனென்ற சொல்லைக் கேட்டவாறே கலங்கினானாயிற்று. ஆக இத்தன்மையிலே ஸாம்யம் என்று அனந்தாழ்வான் திருவுள்ளம் பற்றினபடி.

வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்= இத்திருவாய்மொழியைச் சொல்ல வல்லவர்களுக்கு உத்தேச்யபூமி பரமபதமாகும் என்று ஒரு நிர்வாஹம். இவர்கள் காதலித்த மடலெடுத்துக்கொண்டு புறப்படவேண்டா; இவர்களிருந்தவிடங்களிலே அவன்தானே வந்து நித்ய ஸம்ச்லேஷத்தைப் பண்ணுகையாலே அவர்களிருந்தவிடந்தானே பரமபதமாம் என்று மற்றொரு நிர்வாஹம். .... .... (கக)

மூன்றாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

ஜ்யோதீரூபாங்கக்ருத்யாத் ரவிஜநயநாந் நிஷ்ட்வ்யாஸக்தபாஸ:
ஸௌஶீல்யாத் ஸ்வாஶ்ரிதஸ்ரவஸதயோத்ஸ்ருஷ்டஸௌஹ்ருத்யோகாத்
ரக்ஷாயாம்ஸாவ்யாநாஸ்வாஹததம்தயாஸோவகாரார்ஹ்யவத்த்வாத்
ஸூதாம்ஸௌஜ்ஞாதிஜாத்ரும்ஜநயதிஹமவாநித்ரவாத்வாரி ::॥

* மாசறுசோதியில் மடலூர்வதாவது அளவு கடந்த ப்ரேமத்தை விளைவித்தபடியாகையாலே "பகவாந் ஸ்வாநாம் அதிமாத்ரம் ப்ரேமஜநயதி இதி சடாரி: அவாதீத்" என்றார். வழியல்லா வழியாலேயாகிலும் தன்னைப் பெற வேணுமென்கிற அதிமாத்ரப்ரேமத்தை உண்டாக்கினபடிக்கு விரகுகளையருளிச் செய்கிறார் முன் மூன்றடிகளில்.

1. ஜ்யோதீரூபாங்ககத்வாத். * மாசறுசோதி.* நிர்மலஜ்யோதிர்மய மான வடிவையுடைமையாலும்.

2, 3. ஸரஸிஜநயந, அநிஷ்ட வித்வம்ஸகத்வாத். இரண்டாம் பாட்டில் * என் செய்யதாமரைக் கண்ணன் * என்றதிலே நோக்காக "ஸரஸிஜநயநத்வாத்" என்றது. மூன்றும்பாட்டில் * ஊர்ந்த சகடமுதைத்த பாதத்தன் பேய்முலை சார்ந்து சுவைத்த செவ்வாயன் * என்றது சகடாஸுராதி விரோதி நிரஸநத்வத்தைச் சொன்னதாகையாலே அதில் நோக்காகு "அநிஷ்டவித்வம்ஸகத்வாத்" என்றது.

4. மேகௌகச்யாமலத்வாத். * காரமர்மேனி நங்கண்ணன் * கருமுகில் போல்வதோர் மேனியையுடையனுகையாலும்.

5. ச்ரிதஸரஸதயா. * என்னெஞ்சம் அவனென்றே கிடக்கும் * அடியார்க்கு விடவொண்ணுதபடி அவர்கள் திறத்திலே மிகவும் ஸரஸனுகையாலும்.

6. உத்க்ருஷ்ட ஸௌலப்யயோகாத். * வண் துவராபதி மன்னன் * கண்ணபிரானுய்த் திருவவதரித்து மிகவும் எளியனுகையாலும்.

7. ரக்ஷாயாம் ஸாவதாநாத். * அலைகடற் பள்ளியம்மானை * லோகஸம்ரக்ஷணத்திலே அவஹிதனுய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண் வளருகையாலும். இங்கு ஸாவதாநாத் என்பதற்கு 'ஸாவதாநத்வாத்' என்று பொருள் கொள்ளவேண்டுகையாலே ஸாவதாநசப்தத்தை ஸாவதாநஸ்ய மென்று கொள்ளவேணும். "ரக்ஷாயாஞ்ச அவதாநாத்" என்று பாடமிருந்திருக்குமோ என்கிற சங்கையுமுண்டு.

8. ஸுபகதநுதயா. * மூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானை * புன் முறுவலாலும் தொண்டைபோன்ற திருவதரத்தாலும் அழகிய திருமேனியையுடைமை சொன்னபடி.

9, 10. ஸோபகார, அஸ்த்ரவத்த்வாத். ஒன்பதாம் பாட்டில் * தேவபிரான் தன்னை * என்றதில் நோக்காக 'ஸோபகாரத்வாத்' என்றது; பத்தாம் பாட்டில் * எம் ஆழியங்கைப்பிரானுடை * என்றதில் நோக்காக 'அஸ்த்ரவத்த்வாத்' என்றது.

ஆக இப்படிப்பட்ட தன்மைகளாலே ஆச்ரிதர்களுக்கு அளவுகடந்த ப்ரேமத்தை எம்பெருமான் உண்டுபண்ணுகிறுனென்று அருளிச்செய்தாராம் வார்—என்றதாயிற்று.

நாப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

வஹுவ்யா நஃவஸம்ஷிதஃசொஹாரஸளாரிசஜுதெஞ்ஃ
ஸம்ஶ்லேஷொத்ஸுஹ்ருஹ்யஷதிஜாஹவிஷ ஃ ।
ஜாஹெ ஷுயதஃவி கஃத்ஃவியெஷ ஷஃஃவாஸ
ஹாயுாஷஶாம்வ ஷரீஹ்ருஹ்ய ஊநிஷ்ஷீதியெ ॥

(கருத்து.) கீழ்த்திருவாய்மொழியில் * வண்டார் தண்ணந்துழாயான் மாதவன் * என்றும், * கரியமுகில் வண்ணனெம்மான் கடல் வண்ணன் * என்றும், * மறுத்திருமார்பனவன் * என்றும் எம்பெருமானுடைய மநோஹர திவ்யமங்களவிக்ரஹத்தை அநுஸந்திக்கையாலே அந்தத் திருமேனியோடு ஸம்ச்லேஷிக்கப்பெறவேணுமென்று பாரித்து அது பெறாதே கிலேசித்தவரான ஆழ்வார் மூன்றுவது திருவாய்மொழியில் ஸ்த்ரீஸமாதியாலே மடலூர்வதாகிற அதிப்ரவ்ருத்தி ரூபமான ப்ரயத்நத்தையும் செய்யவொருப்பட்டார் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாசறு சோதிக் கண்ணன்வந்து கலவாமையால்
ஆசைமிகுந்து பழிக்கஞ்சாமல்—ஏசறவே
மண்ணில் மடலூர மாறனெருமித்தான்
உண்ணடுங்கத் தான்பிறந்தவூர்.

| | |
|---|---|
| மாசு அறு சோதி | நிர்மலமான சோதியையுடைய |
| கண்ணன் | எம்பெருமான் |
| வந்து | நெருங்கி வந்து |
| கலவாமையால் | ஸம்ச்லேஷம் தாராமையினாலே |
| மாறன் | ஆழ்வார் |
| ஆசைமிகுந்து | ஆசை மீதூரப்பெற்று |
| பழிக்கு அஞ்சாமல் | (ஊரார் தாயார் முதலானோருடைய) பழிக்குப் பின் வாங்காமல் |

| | |
|---|---|
| ஏச அற | ஏசமெல்லே கடந்து, |
| தான் பிறந்த ஊர் உள்நடுங்க | தான்பிறந்த திருநகரியிலுள்ளாரெல்லாரும் நடுங்கும்படியாக |
| மண்ணில் | இவ்வுலகத்திலே |
| மடல் ஊர ஒருமித்தான் | மடலூருகையிலே இறங்கினார். |

* * * கீழ் * பொலிக பொலிகவிலே * மலியுஞ் சுடரொளிமூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை * என்று வடிவழகையும் குணங்களையும் ஸௌலப்யத்தையும் அநுஸந்தித்து இப்படிப்பட்ட எம்பெருமானோடே ஸம்ச்லேஷிக்கப்பெறவேணுமென்று கோலிக் கையை நீட்ட, அப்பெருமான் அகப்படாதே கைகழிந்து நிற்க அத்தாலே கலங்கி மடலெடுக்கையிலே கைவைத்தாராழ்வார் என்கிறது.

ஏசறவே என்றவிடத்து 'ஏசவே' என்றும் பாடமுண்டென்று வியாக்கியானத்திற் காண்கிறது. (௫௩)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி—ஐந்தாம்பத்து
## நான்காந் திருவாய்மொழி—ஊரெல்லாந்துஞ்சி.

உரையவதாரிகை :—கீழ்த் திருவாய்மொழியிலே மடலூரும் முயற்சி வளிதாய்ச் சென்றது. மடலூரவேண்டுமானால் நாயகனை ஒரு படத்திலே எழுத வேணுமே; அப்படி யெழுதுவதற்கு அவகாசமில்லாதபடி சந்த்யை வந்து புகுந்தது. * ஆழியாலன்றங்காழியை மறைத்தான் * என்றும் * ஆழிகொண் டன்று இரவிமறைப்ப * என்றும் சொல்லுகிறபடியே பண்டு பாரதப்போரிலே ஜயத்ரதனுடைய வதத்திற்காக ஸூர்யனை அஸ்தமிக்கச் செய்தது போல இப்போதும் அப்பெருமான்தானே ஸூர்யனை அஸ்தமிக்கும்படி பண்ணினான் போலும். இவள் மடலெடுத்தால் அது தனக்கு அவத்யமாகுமென்று நினைத்து அதற்கு இடையூறு செய்ய வொருப்படுவனே யெம்பெருமான். அல்லது தைவயோகத்தாலே அஸ்தமித்ததாகவும் இருக்கலாம். இரவு வந்து புகுந்தது. அதுதான் அந்யம்போதன்றிக்கே சராசரங்களெல்லாம் ஒடுங்கும்படி கடுகிசியாயிருந்தது. பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு வாசியற எல்லாரும் உறங்கிப்போய் உசாத்துணையற்றிருந்தது.

இவ்வளவிலே ஸர்வரக்ஷகனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுஸந்தித்தாராழ்வார். இவ்வநுஸந்தானம் ஸம்ச்லேஷ தசையிலன்றிக்கே விச்லேஷதசையிலே யாகையாலே மிகவும் ஆற்றாமைக்கு உறுப்பாயிற்று. அசோகவனத்திலே முடியத்தேடின பிராட்டியைப்போலே இவர்க்கும் முடிய வேண்டுமளவாயிற்று. அந்த அவஸாதமெல்லாம் இத்திருவாய்மொழியாய் வெளிவருகின்றது. கீழ்த்திருவாய்மொழிபோலே இத்திருவாய்மொழியும் நாயகிஸமாதியாலே அருளிச்செய்கிறபடி. (*)

ஊரெல்லாம்துஞ்சி உலகெல்லாம்நள்ளிருளாய் *
நீரெல்லாம்தேறி ஓர்நீளிரவாய்நீண்டதால் *
பாரெல்லாமுண்ட நம்பாம்பணையான்வாரானால் *
ஆரெல்லே! வல்வினையேன் ஆவிகாப்பாரினியே. (க)

| | |
|---|---|
| ஊர் எல்லாம் துஞ்சி | ஊர் முழுவதும் உறங்கிப் போய் |
| உலகு எல்லாம் நள் இருளாய் | உலகம் முழுவதும் காடாந்தகாரமிக்கு |
| நீர் எல்லாம் தேறி | நீர் நிலமெல்லாம் அலையடங்கித் தெளிந்து |
| ஓர் நீள் இரவு ஆய் | (பகல் கலசாத) ஒரே காளராத்ரியாய் |

| | | | |
|---|---|---|---|
| நீண்டது | நெடுகிச் செல்லின்றது; | இனி | இப்படியான பின்பு |
| ஆல் | அந்தோ!; (இந்நிலைமையில்) | வல் வினையேன் | கொடும்பாவியான என்னுடைய |
| பார் எல்லாம் உண்ட | பூமி முழுவதையும் (பிரளயகாலத்திலே) வயிற்றிலே வைத்து ரக்ஷித்த | ஆவி | உயிரை |
| நம் பாம்பு அணையான் | சேஷசாயியான எம்பெருமான் | காப்பார் | ரக்ஷிப்பவர் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; | ஆர் | யாவர்? |
| | | என்லே | என்னே!. |

* * * [ஊரெல்லாந்துஞ்சி.] ஜகத்தடங்கலும் இருள்மூடி நின்றது: ரக்ஷகனென்று பேர் பெற்றிருக்கும் ஸர்வேச்வரனே வந்து ரக்ஷித்தருள்கின்றிலன்; இனி யென்னை ரக்ஷிப்பார் ஆரென்கிறுள். ஊராருடைய பழிமொழியே எருவாகத் தன்னுடைய காதல்வளருமதாகையாலே அந்த எருவுக்கு அவகாசமில்லாதபடி ஊரெல்லாம்துஞ்சிற்றே! என்று வருந்துகிறுள். இலங்கையினுள் திருவடி புகும்போது ராக்ஷஸிகளெல்லாரும் உறங்கிக்கிடந்தாப்போலே இங்குப் பழிசொல்லுவாரடங்கலும் உறங்கிப்போனூர்கள். இவள் பிறந்தவூராகையாலே இவளது நிலைமையைக்கண்டு சோகித்து, கோரைசாய்ந்தாற்போலே எல்லாருமொக்க உறங்கினபடியைச் சொல்லிற்றுகவுமாம். பண்டு ராமராவண யுத்தத்தில் நாகபாசபந்தத்தினன்று ஜாம்பவான், திருவடிமுதலான சிலராவது உணர்ந்திருந்தார்கள், அப்படியுமில்லையாயிற்றிங்கு.

ஊரைவிட்டு வெளியேசென்று தரிக்கைக்கும் அவகாசமில்லாமே உலகெல்லாம் நள்ளிருளாயிற்று. கண்ணாலே ஒருபொருளும் காணமுடியாத நிலைமையாயிற்று. நீர்நிலங்களிலுள்ள ஸாரஸபக்ஷி முதலானவைகளும் கோலாஹலமற்று ஒய்ந்துபோகையாலே அந்த நீர்நிலங்களெல்லாம் அலைபடங்கித் தெளிந்து கிடக்கின்றன. இரவு பகல் என்கிற விபாகமின்றிக்கே ஒரேகாளராத்திரியாயிராநின்றது. மநுஷ்யர்களினுடைய ராத்திரியிற்காட்டில் தேவர்களினுடைய ராத்திரிக்கு அதிக நீட்சியுண்டு; அதனிலும் விஞ்சிய நீட்சியாயிற்று.

இந்த நிலைமையில் பரமகாருணிகனை அந்தப் பாம்பணையானும் வாராதொழிந்தான். பிரளயாபத்து வந்தவாறே உலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்குமெம்பெருமான் இவ்வாபத்திலே வந்து முகங்காட்டி உதவுகின்றிலன்; இப்படியானபின்பு தரிக்கும்வகை என்னே! என்கிறுள். (ச)

ஆவிகாப்பாரினியார்? ஆழ்கடல்மண்விண்மூடி *
மாவிகாரமாய் ஓர்வல்லிரவாய்நீண்டதால் *
காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாரானல் *
பாவியேன்நெஞ்சமே! நீயும்பாங்கல்லையே. (ரு)

| | |
|---|---|
| ஆழ் கடல் | ஆழ்ந்த கடலையும் |
| மண் | பூமியையும் |
| விண் | ஆகாசத்தையும் |
| மூடி | மறைத்து (இவ்வளவோடும் நில்லாமல் ஸகலலோகங்களையும் கபளீகரிக்கும்படி) |
| மா விகாரம் ஆய் | பெரிய விகாரத்தையுடைத்தாய்க்கொண்டு |
| வல் | வலிதான |
| ஓர் இரவு ஆய் | ஒரோராத்திரியாய் |
| நீண்டது | நெடுகிச் செல்லாநின்றது; |
| ஆல் | அந்தோ!; |
| காவி சேர் வண்ணன் | நெய்தல் பூப்போன்ற நிறத்தையுடையனான |
| என் கண்ணனும் | எனக்குத் தஞ்சமான கண்ணபிரானும் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| பாவியேன் | பாவியான என்னுடைய |
| நெஞ்சமே | மனமே! |
| நீயும் | நீதானும் |
| பாங்கு அல்லை | அநுகூலமாக இருக்கிறாயில்லை; |
| இனி | இப்படியான பின்பு |
| ஆவி காப்பார் | பிராணனை ரக்ஷித்துத் தருவார் |
| ஆர் | யாவர்? (ஒருவருமில்லை.) |

* * * [ஆவிகாப்பார்.] இந்நிலைமையிலே கண்ணபிரானும் வந்து உதவுகின்றிலனே! என்று இன்னாதாகிறாள். ஆய்ச்சியரோடு குரவைகோத்தவன்று அந்த ரஸம் ஸாத்மிக்கைக்காக நெடும்போது மறைந்து நின்று அவர்களுக்கு மிகவும் அலமாப்பை விளைத்து, பின்னை * தாஸாம் ஆவிரபூச் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:, பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத:.* என்கிறபடியே புன்முறுவல் காட்டிவந்து புகுந்தகின்றாப்போலே நமக்கும் வந்து முகங்காட்டுவன் என்றிருந்தாள் போலும்; வரவில்லையே யென்று கதறுகின்றாள்.

இனி ஆவிகாப்பார் ஆர் = * குளிரருவிவேங்கடத்து என் கோவிந்தன் குணம்பாடி, அளியத்த மேகங்காள்! ஆவிகாத்திருப்பேனே * என்று குணாநுஸந்தானம் பண்ணி ஆத்மதாரணம் பண்ணுவதென்று ஒன்றுண்டு; உசாத்துணையில்லாமையாலே அதற்கும் வழியில்லையாயிற்று. * காக்குமியல்வினன் கண்ணபெருமான் * என்று காப்பதே தொழிலான கண்ணபிரானும் உபேக்ஷித்தான்; ஆகையாலே இனி ஆவிகாப்பது எங்ஙனே?

[ஆழ்கடல் இத்யாதி.] கடலும் பூமியும் ஆகாசமும் எதுவும் தெரியாதபடி எல்லாவற்றையும் ஒன்றாக மறைத்துக் காளராத்திரியே நீண்டுவாரா நின்றது.

மாவிகாரமாய் என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"பின்னையும் அவ்வளவில் பர்யவஸிப்பதாயிருக்கிறதில்லை; மஹாவிகாரத்தை யுடைத்தாய் நித்யவிபூதியையும் கணிசிக்கிறாப்போலே பெருகின்றது. வைரிரூப்யம் காட்டின ஸர்வசக்தி செய்வதெல்லாம் செய்யாநின்றது."

ஓர் வல்லிரவாய் நீண்டது = இருளுக்கும் இரவுக்கும் வாசி தெரியவில்லை போலும்; இரண்டும் பர்யாய மென்றிருக்கிறாள்.

காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாரானல் = *இந்தீவரதளச்யாமம் என்னும்படியான வடிவழகைக் காட்டுமளவே போதுமே; அது காட்டவும் வருகின்றிலன். வடமதுரையிலே வந்து தோன்றி உடனே மறைந்தாப்போலே மறைந்தானாகிலுமாம்; வருகைதானே அரிதாயிரா நின்றதே!.

பாவியேன்நெஞ்சமே! நீயும் பாங்கல்லையே = இங்கில்லைமையிலே நெஞ்சாவது ஸ்வாதீனமாக இருக்குமாகில் மறந்து பிழைக்கலாம்; வேறு சிந்தனைகளைச் செய்து தரிக்கலாம்; அதற்கும் யோக்யதை இல்லாதபடி "என்னெஞ்சினாரு மங்கே யொழிந்தார்" என்கிறபடியே அத்தலைபற்றி இத்தலையை வெறுத் தொழிந்ததே யென்கிறாள். (உ).

நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமே! நீளிரவும் *
ஓயும்பொழுதின்றி ஊழியாய்நீண்டதால் *
காயும்கடுஞ்சிலை என்காகுத்தன்வாரானல் *
மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே. (௩).

| | |
|---|---|
| நெஞ்சமே | மனமே! |
| நீயும் | (எல்லாக் காரியங்களுக்கும் முதற்கருவியான நீயும் |
| பாங்கு அல்லை காண் | எனக்கு விதேயமாக இருக்கிறாயில்லை; |
| நீள் இரவும் | எற்கனவே நீண்டு வருகின்ற ராத்திரியும் |
| ஓயும் பொழுது இன்றி | ஓயுங்காலம் இல்லாமல் |
| ஊழி ஆய் நீண்டது | ஒரு கல்பமாய்க் கொண்டு வளர்ந்து விட்டது; |
| ஆல் | அந்தோ!; |
| காயும் | (விரோதிகளைக்) காய்கின்ற |
| கடு சிலை | கடிய சார்ங்கவில்லையுடைய |
| என் காகுத்தன் | இராமபிரான் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| வல்வினையேன் | வலிய பாபத்தையுடையேனான நான் |
| பெண் பிறந்து | பெண்ணாய்ப் பிறந்து |
| மாயும் வகை அறியேன் | முடியும் வழியை அறிகின்றிலேன். |

* * * [நீயும்பாங்கல்லைகாண்] அநிஷ்டங்களைத் தொலைக்கவல்லவனான இராமபிரானும் உதவ வருகின்றிலன்; முடியவும் வழிதெரியாமல் திகைக்கின்றேனென்கிறாள். பிராட்டியை அசோகவனத்திலே வைத்தபோது மாயாவியான இராவணன் 'இராமன் தலையறுப்புண்டு தொலைந்தான்' என்று தோன்றுமாறு ஒரு மாயா சிரஸ்ஸைக் கொண்டுவந்து பிராட்டிக்குக் காட்டி 'இதோபார் ஸீதே!, உன் கணவன் தலையறுப்புண்டு ஒழிந்தான்' என்ன, அதுகேட்டுப் பிராட்டி வருந்திக்கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்கவில்லை ஒலிப்பிக்க, அவ்வொலியானது பிராட்டியின் செவியிலே

புகுந்து ஆச்வஸிப்பித்ததென்று கேட்டிருந்த பராங்குச நாயகி, அப்படியாகத் தன்னையும் ஆச்வஸிப்பிக்க ஒரு விரகு செய்தருளவில்லையே! என்ற இன்னாப்புத் தோன்றக் காயுங்கடுஞ்சிலைநம் காகுத்தன் வாரானால் என்கிறாள். "சார்ங்கவில் சேவகனே"யும் தலைப்பெய்வது என்ஞான்றுகொலோ" என்று ஆண்டாளுடைய நிர்வேதம் இங்கு நினைக்கத்தக்கது.

மாயும்வகையறியேன் = பிராட்டி அசோகவனத்திலே "விஷஸ்ய தாதா நஹி மேஸ்தி கச்சித் ஶஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய—விஷஸ்ய தாதா ந ஹி மேஸ்தி கச்சித் சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய." என்று 'இவ்வரக்கன் மனையிலே என்னுயிரை மாய்த்துக்கொள்வதற்கு இத்தனை விஷய் கொடுப்பாரில்லையே; நின்று கொல்லாதே உடனே கொல்லவல்லதொரு சுத்தி தானும் கொடுப்பாரில்லையே!' என்று துடித்தாப்போலே இவளும் துடிக்கிறாளாயிற்று. பெண்பிறந்தே யென்றது முடியமாட்டாமைக்கு ஹேது சொன்னபடி. "பிறர்க்காக ஜீவிக்கவேண்டும் பாதந்த்ர ஜந்மத்திலே பிறக்கைக்கீடான மஹா பாபத்தைப்பண்ணினேன்" என்பது ஈடு. .... .... .... (௩)

பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று *
ஒண்சுடரோன் வாராதொளித்தான் * இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாய் எங்காரேறுவாரானால் *
எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே? (௪)

| | |
|---|---|
| பெண் பிறந்தார் எய்தும் | பெண்ணாய்ப் பிறந்தவர்கள் அடைகின்ற |
| பெரு துயர் | பெருந்துக்கத்தை |
| காண்கிலேன் என்று | காணமாட்டேன்' என்றெண்ணி |
| ஒண் சுடரோன் | ஸூரியன் |
| வாராது ஒளித்தான் | வாராதே மறைந்து போனான் போலும்; |
| இ மண் அளந்த | இப்பூமியை யளந்து கொண்டவனும் |
| பெரிய கண் | பரந்த திருக்கண்களை யுடையவனும் |
| செம் வாய் | சிவந்த அதரத்தை யுடையவனும் |
| எம் கார் ஏறு | கறுத்த திருமேனியை யுடையவனும் காளை போன்றவனுமான எம்பெருமான் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| ஆல் | அந்தோ!; |
| என் பெரிய | நினைக்கவும் முடியாத |
| சிந்தை நோய் | மநோவியாதியை |
| என்னை | என்னிடத்தில் நின்றும் |
| தீர்ப்பார் | நீக்கவல்லவர்கள் |
| ஆர் | யார் கொல்? |

* * * [பெண்பிறந்தாரெய்தும்.] கண்டார்க்குப் பொறுக்க வொண்ணாதபடி நான் துன்பப்படாநிற்க, எல்லாருடைய ஆபத்துக்களையும் போக்குவானான திரிவிக்ரமன் வருகின்றிலன்; என்னுடைய சிந்தை நோய் தீரும்வழி என்னோ! என்கிறாள்.

இரவு முப்பது நாழிகை கழிந்தவாறே ஸூரியன் உதிப்பதென்று ஒரு நியதியுண்டு; * பீஷோதேதி ஸூர்ய: * என்று உபநிஷத்தும் ஓதிவைத்தது; அப்படியிருக்க அந்த ஸூர்யன் உதிக்கவேயில்லை; 'பெண்ணாய்ப் பிறந்தவர்கள் படும் துக்கத்தைக் காண்பதிற்காட்டிலும் நாம் முடிந்துபோவதே நன்று' என்று துணிந்து அவன் முடிந்து போயினன் போலும் என்கிறாள். இரவு மிகவும் செல்லுகின்றமையை இங்ஙனம் கூறினளாயிற்று.

ஒண்சுடரோன் வாராதொளித்தான் என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "தன் தோற்றரவிலே லோகமெல்லாம் போமபடியான ப்ரகாசத்தை யுடையவனும் வாராதே மறைந்தான். வந்திலன் என்னாதே ஒளித்தானென்கிறது— * பீஷாஸ்மாத் வாத: பவதே * இத்யாதிப்படியே பகவதாஜ்ஞையாலே முப்பது வட்டம் வரவேணும்; இங்ஙனே யிருக்கிறவன் 'ஈச்வராஜ்ஞைமறுத்தால் வேணுமாகில் தலையறுத்து வைக்குமித்தனையன்றோ, இக்கொடுமை என் கண்ணால் காணப்போகாது' என்று ஈச்வரபடர் தேடிவந்தாலும் காணாதபடியொளித்தான்."

ஸூர்யன் வந்தாலென்ன, ஒளித்தாலென்ன? அவனைக்கொண்டு நமக்கொரு காரியமில்லையே. வடிவழகு முதலியவற்றால் என்னைத் தோற்பித்து எனக்குப் பரமபோக்யனாயிருக்குமவன் எழுந்தருளிக் காட்சி தரவில்லையே; என் சிந்தைநோயைத் தீர்க்கவல்லனான அவன் வரத்திருக்கிறபடியாலே இனி என் சிந்தைநோய் அநுபவித்தே கழிக்குமித்தனைபோலும் என்றாளாயிற்று. ... (ரு)

ஆரேன்னையாராய்வார்? அன்னையரும்தோழியரும் *
நீரேன்னே? என்னாதே நீளிரவும்துஞ்சுவரால் *
காரன்னமேனி நம்கண்ணனும்வாரானால் *
பேரேன்னைமாயாதால் வல்வினையேன்பின்னின்றே. (௬)

| | | | |
|---|---|---|---|
| அன்னையரும் | தாய்மாரும் | நம் கண்ணனும் | நமது கண்ணபிரானும் |
| தோழியரும் | தோழிமாரும் | வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| நீர் என்னே என்னாதே | 'இப்படியும் ஒரு சீர்மையுண்டாவதே!' என்று என்திறத்தில் இரங்காமல் | வல் வினையேன் பின் நின்று | பெரும்பாவியான நான் முடிந்தபின்பும் நின்றுகொண்டு |
| நீள் இரவும் | நீண்ட இராமுழுவதும் | பேர் | என் பேர் |
| துஞ்சுவர் | உறங்காநிற்பர்கள்; | என்னை மாயாது | என்னை முடியவொட்டுகிறதில்லை; |
| ஆல் | அந்தோ!; | என்னை ஆராய்வார் ஆர் | என்னைப்பற்றிச் சிந்திப்பார் ஆருமில்லையே!. |
| கார் அன்ன | மேகத்தையொத்த | | |
| மேனி | திருமேனியையுடைய | | |

* * * [ஆரேன்னையாராய்வார்.] துயருறுங்காலத்திலே உதவக்கடவரான அன்னையரும் தோழிமாரும் ஆராயாதே கிடக்கின்றார்கள்; அவர்கள் உதவாத போது வந்து உதவக் கடவனான கண்ணபிரானும் வருகின்றிலன்; இனி என் பெயரே மிக்கிருப்பது என்கிறாள்.

உலகத்தையெல்லாம் ஆராயப்பிறந்த ஆழ்வார் தமது திருவாக்காலே தம்மைப்பற்றி "ஆரென்னையாராய்வார்" என்னும்படியாவதே! இது ஒரு விலக்ஷணமான கோய்போலும்.

[அன்னையரும் தோழியரும் இத்யாதி.] இரண்டாமடியின் முதலிலுள்ள நீர் என்பது தலைவியின் வார்த்தையாக இருக்கத்தக்கது. (அதாவது) அன்னையரும் தோழியருமான நீங்கள் (என்னைப்பார்த்து) என்னே என்னாதே— என்ன செய்தி? என்றுகூட விசாரியாமல், நீளிரவும் துஞ்சுவரால்—; 'துஞ்சுவர்' என்கிற வினைமுற்று படர்க்கையாகையாலே 'நீர்' என்ற முன்னிலைக்குப் பொருந்தாதே யென்று சங்கிக்கக்கூடும்; இதற்காக நம்பிள்ளை அருளிச்செய்கிறபடி—"துஞ்சுவரென்னுமிது துஞ்சுகிறாலென்னுமர்த்தம் பெற்றுக்கிடக்கிறது என்றுசொல்லுவாருமுண்டு" என்று. (வடமொழியில் 'ஹவஜோமஹாநி' என்று படர்க்கையாகச் சொன்னாலும் முன்னிலைப் பொருள் கொள்ளக்குறையில்லாதாப்போலே இங்கும் துஞ்சுவர் என்றபடர்க்கைக்கு, துஞ்சுதிர் என்று முன்னிலைப்பொருள் கொள்ளலாமென்பர் என்றவாறு.)

இங்ஙனன்றிக்கே மற்றொரு நிர்வாஹமும் அருளிச் செய்கிறார்—; 'துஞ்சுவர்' என்பதற்குப் படர்க்கைப் பொருளே கொள்ளலாம்; அப்போது 'நீர்' என்பதற்கு நீங்களென்று பொருளன்று; நீர்மையென்று பொருள்; நீர் என்னே என்னாதே= இது என்ன ஸ்வபாவம்! என்று ஈடுபட்டுப் போகாமல் என்றபடி. இவ்விடத்து ஈட்டில் "நிறைநீர நீரவர்கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்ற குறள் எடுத்தாளப்பட்டுளது. நீர் என்னுஞ் சொல்லுக்கு ஸ்வபாவமென்கிற பொருளுண்மையை ரூபிப்பதற்காக அது காட்டப்பட்டதென்று கொள்க. அக்குறளின் பொருளாவது—நீரவர்—நல்ல ஸ்வபாவமுடையவர்களினது, கேண்மை — நட்பானது, பிறை—சுக்லபக்ஷத்துச் சந்திரகலைபோல, நிறைநீர—நாடோறும் நிறைந்து வளர்ந்து செல்லுந் தன்மைத்து; பேதையார் நட்பு—மூடர்களது நேசமானது, மதி—கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரகலைபோல, பின்னீர—பின்னே நாடோறுங் குறையுந்தன்மைத்து, என்றபடி.

[காரன்ன மேனி இத்யாதி.] ஒரு சாவி நிலத்திலே ஒரு சுழி மழைபெய்தாற்போலே குளிரும்படியான வடிவையுடையனாய்ப் பெண்களுக்கே உதவிப்போந்தவனான கண்ணபிரானும் வருகின்றிலன்.

வல்வினையேன் பின்னின்று பேர் என்னை மாயாது—இது பரமபோக்யமான வார்த்தை; நான் முடிந்தாலும் என் பேர் முடிகிறதில்லையென்கிறாராழ்வார். அவருடைய திருமேனி என்றைக்கோ போனாலும் பல்லூழி யூழிதோறும் போகாதே நிற்பதன்றோ திருநாமம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"ஆழ்வாருடைய திருநாமம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸத்தா ஹேதுவானாப்போலே இவர் தமக்கும் ஸத்தா ஹேதுவானபடி. அடியுடைய பேராகையாலே ஸர்வர்க்கும் தாரகமாயிருக்குமே. இதினுடைய அடியுடைமையிறே எல்லாரும் சிரஸாவஹிக்கிறது."

வல்வினையேனான என்னுடைய பேரானது நான் மாய்ந்துபோனாலும் எனக்குப் பின்னேயும் நின்றுகொண்டு என்னை மாய்க்கேனாக வொட்டுகிறதில்லை என்றபடி. என் பெயரே மிச்சமாம்படி நான் முடிந்து போகாநின்றேனென்கை பரமதாற்பரியம். "வல்வினையேன் பின்னின்று" என்பதை "ஆரென்னையாராய்வார்" என்றதோடேகூட்டி, எனக்குத் துணைநின்று என்னை ஆராய்வாரார் என்பதாகவும் உரைக்கலாமென்பர் பன்னீராயிரவுரைகாரர். ... (௫)

பின்னின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடுமால் *
முன்னின்றிராவூழி கண்புதையமூடிற்றால் :*
மன்னின்றசக்கரத்து எம்மாயவனும்வாரானால் *
இந்நின்றநீளாவி காப்பாராரிவ்விடத்தே? (௬)

| | | | |
|---|---|---|---|
| பின் நின்ற | பிடரிபிடித்துத்தள்ளுவதற்காகப்பின்தொடர்ந்து நிற்கிற | மூடிற்று | மறைத்தது; |
| காதல் நோய் | ப்ரேம வியாதியானது | ஆல் | அந்தோ; |
| நெஞ்சம் | (தனக்குப்பிறப்பிடமான) நெஞ்சை | மன் நின்ற சக்கரத்து | எப்போதும் கைகழலாது நின்ற திருவாழியாழ்வானையுடைய |
| பெரிது | மிகவும் | எம் மாயவனும் | எம்பிரானும் |
| அடும் | அழிக்கின்றது; | வாரான் | வருகின்றிலன்; |
| ஆல் | அந்தோ!, | ஆல் | ஆதலால், |
| இரா ஊழி | இரவாகிற கல்பமானது | நின்ற நீள் இ ஆவி | முடியாதே நின்ற நீண்ட இவ்வுயிரை |
| முன் நின்று | முன்னேயிருந்து | இவ்விடத்து | இந்த நிலைமையில் |
| கண் புதைய | கண்தெரியாதபடி | காப்பார் ஆர் | ரக்ஷிப்பாரார்? |

* * * [பின்னின்ற காதல்] முதலடிக்குப் பொருளருளிச்செய்யாநின்ற திருக்குருகைப்பிரான்பிள்ளான் ஆறாயிரப்படியில்—"முடிந்தபின்பும் செல்லுகிற விச்லேஷவ்யஸநம் ஒன்றும் பொறுக்கலாயிருக்கிறதில்லை" என்றருளிச்செய்திருக்கையாலே, பின்னின்ற என்பதற்கு, பின்னேயும் நிற்கின்ற (அதாவது) நான் மரணமடைந்த பின்னையும் நலிவதாக நிற்கின்ற என்று பொருள் திருவுள்ளம்பற்றியதாக விளங்குகின்றது. பிடரி பிடித்துத் தள்ளுவாரைப்போலே பின்னே நின்று குழக்குகின்ற காதல் நோய் என்பது நம்பிள்ளையருளிச்செய்த பொருள். 'மரணமடைந்த பின்னையும் நிற்கின்ற காதல்நோய்' என்றால் இது எங்ஙனே பொருந்துமென்று சிலர் சங்கிக்கக்கூடும்; 'நான் முடிந்தாலும் என் காதல் முடியாது போலிருக்கிறது' என்று சொல்வது உலகத்திலுமுண்டே; அதுவாயிற்று இங்கு விவக்ஷிதம். ஆழ்வார் தம்முடைய காதலைப்பற்றிப் பலவிடங்களில் பலவகையாகச் சொல்லுவர்; "என் காதலுரைக்கில் தோழீ!, மண்திணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதால்" என்பர் ஓரிடத்தில்; "அதனில் பெரிய என்னவா" என்பர் மற்றோரிடத்தில். "பின்னின்ற காதல்" என்கிறார் இங்கு. இந்தக் காதலுக்கு இடம்கொடுக்கலாகாதென்று நான் எங்குப்போனாலும், புக்கவிடம் புக்குப் பின்னே திரிந்து நலிகின்றது ப்ரேம வியாதி என்கிறார்.

நெஞ்சம் பெரிது அடும் = நெஞ்சை மிகவும் நோவுபடுத்துகின்றது. "கட்டமே காதலென்று மூர்ச்சிக்கும்" என்றதுங் காண்க.

காதல்நோய் படுத்துகிறபாடு இங்ஙனேயிருக்க, இந்த இராப்பொழுது படுத்துகிறபாடு பின்னையும் சொல்லமுடியாது. காதலும் இரவும் ஒன்றோடொன்று ஸங்கேதம் செய்துகொண்டு வந்தனபோலும். 'நான் பின்னிட்டு வருகிறேன், நீ முன்னே தப்பாமே சூழ்ந்துகொள்' என்று வருவாரைப்போலே வந்தது.

கண்புதைய மூடிற்றால் = இங்கே ஈடு;—" உட்கண்ணைக் காதல் மறையாநின்றது; கட்கண்ணை ராத்ரி மறைத்தது." என்பதாம். எம்பெருமான் காட்சி தருவதாக எதிரேவந்து நின்றாலும் ஸேவிக்கவொண்ணாதபடி இருள்வந்து மூடுகின்றதே! என்கிற வருத்தமும் தோன்றும்.

மன்னின்ற சக்கரத்து = 'மன்னின்ற' என்றது, நித்யமாகநின்ற என்றபடி. "எப்போதும் கைகழலா நேமியான் நம் மேல்வினை கடிவான்" என்றும், * வாதூவணதாரகூாயாம விலஸ்ட்விஸஹஷிவ| ஸதா வஞ்ஜாயுமீம் லிஜூஸஸநீ ஸ்ரீரஙமநாயகஃ— பாது ப்ரணதரக்ஷாயாம் விலம்பமஸஹந்நிவ, ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ நஸ் ஸ்ரீரங்க நாயக: * என்றும் சொல்லுகிறபடியே எப்போதும் அடியவர் வினைகெடுக்கக் கையுந் திருவாழியுமாகவே ஸேவைஸாதிக்கின்ற பெருமானும் வந்து தோன்றவில்லையே!, முடியவேண்டுமளவிலேயும் நாறே பிராயமாயிருக்கிற இவ்வுயிரை முடித்து ரக்ஷிப்பாரார்? என்கிறாள்.

இவ்விடத்தே = ஸர்வரக்ஷகனும் உதவாத இந்நிலைமையிலே என்றபடி. (சு)

காப்பாராரிவ்விடத்து? கங்கிருளின்நுண்துளியாய் *
சேட்பாலதூழியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றானால் *
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காள்! என்செய்கேனோ? (எ)

| | | | |
|---|---|---|---|
| இவ்விடத்து | இந்நிலைமையில் | தூபால | அழுக்கற்ற ஸ்வபாவத்தையுடையதாய் |
| காப்பார் ஆர் | ரக்ஷிப்பாரார்? | வெண் | வெளுத்தான |
| கங்கு இருளின் | நன்றாகச் செறிந்த இருளையுடைத்தாயும் | சங்கு | சங்கையும் |
| நுண் துளி ஆய் | நுண்ணிதான பனித்துளியையுடையதாயும் | சக்கரத்தன் | சக்கரத்தையுமுடையனானவன் |
| சேண் பாலது | மிகநீண்டிருப்பதான | தோன்றான் | தோன்றிக்காட்சி தருகின்றிலன்; |
| ஊழி ஆய் | கல்பமாய்க்கொண்டு | தெய்வங்காள் | தேவதைகளே! |
| செல்கின்ற | செல்லாநிற்கிற | தீ பால வல் வினையேன் | மிகக் கொடியபாவங்களையுடையேனான நான் |
| கங்குல் வாய் | ராத்திரியிடத்து | என்செய்கேன் | என்ன பண்ணுவேன்? |

* * * [காப்பாரார்.] இப்பேரிருளிலே என்செய்கேனென்று, உறங்காத தெய்வங்களைக் குறித்து முறையிடுகின்றாள். காப்பாரார் இவ்விடத்து = ரக்ஷகனென்று பேர்பெற்றிருக்கும் பெருமான்தானும் ரக்ஷியாதே உபேக்ஷித்திருக்குமிக்காலத்திலே வேறு ரக்ஷகரைத் தேடப்போமோ?

கங்கிருளின் நுண் துளியாய் = தடித்த இருளும் நுட்பமான பனித்துளியுமாய் என்றபடி. கங்கு என்று எல்லை நிலத்திற்குப் பேராகையாலே எல்லை நிலமாகச் செறிந்த இருள் என்றதாயிற்று.

சேட்பாலது ஊழியாய் = நீண்டு பெருகிச் செல்லுந் தன்மையதான கல்ப காலமாகி என்றபடி. இப்படிச் செல்லா நின்ற காலத்திலே * சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களுமாய் எங்குங் கண்டறியாத ஸேவையுடனே சுங்கள் பிரான் தோன்றவேணுமே; அந்தோ! தோன்றியருளவில்லையே!, இங்ஙனே அவன் உபேக்ஷிக்கும்படி என்ன பாபம் பண்ணினேன்! தெய்வங்களே! என் செய்வேன்? சொல்லுங்கோளென்கிறாள். தேவதைகள் உறங்காதவர்கள், தானும் உறங்காதவள்; இந்த ஸாம்யத்தைவிட்டு அவர்களோடு உறவு கொண்டாடிக் கேட்கிறாள் போலும். துயருற்ற காலத்திலே அம்மே! என்பாரைப் போலே தெய்வங்காளென்றதும் ஒரு வார்த்தைப்பாடு .... ... (எ)

தெய்வங்காள் என்செய்கேன்? ஓரிரவேழூழியாய் *
மெய்வந்துநின்று எனதாவிமெலிவிக்கும் *
கைவந்தசக்கரத்து என்கண்ணனும்வாரானால் *
தைவந்ததண்தென்றல் வெஞ்சுடரில்தானடுமே. (அ)

| | |
|---|---|
| தெய்வங்காள் | தெய்வங்களே! |
| ஓர் இரவு | ஒரு இராப்பொழுதானது |
| ஏழ் ஊழி ஆய் | ஏழு கல்பகாலமாய்க் கொண்டு |
| மெய் | மெய்யே |
| வந்து நின்று | முன்னேவந்து நின்று |
| எனது ஆவி | என்னுடைய உயிரை |
| மெலிவிக்கும் | இளைக்கப்பண்ணாநின்றது; |
| கை வந்த சக்கரத்து | கையிலே ஸஜ்ஜமாயிருக்கின்ற திருவாழியாழ்வானையுடைய |
| என் கண்ணனும் | எனது கண்ணபிரானும் |
| வாரான் | வருகின்றிலன்; |
| தைவந்த | தடவுகிறாப் போலிருக்கின்ற |
| தண் தென்றல் | குளிர்ந்த தென்றலானது |
| வெம் சுடரில் அடும் | வெவ்விய நெருப்பிற்காட்டிலும் அதிகமாகச் சுடாநின்றது. |

* * * [தெய்வங்காளென் செய்கேன்.] தென்றலோ கொடியதாகின்றது, கண்ணனோ வருகின்றிலன்; என் செய்வேனென்று மீண்டும் தெய்வங்களையே நோக்கி முறையிடுகின்றாள்.

ஓரிரவு ஏழூழியாய் = ஸௌபரி போகத்துக்காகப் பல வடிவுகள் கொண்டாப்போல இரவு நலிவதற்காகப் பல வடிவுகள் கொள்ளா நின்றது போலும். மெய் வந்து நின்று எனதாவிமெலிவிக்கும் = இராவணன் இடம் பார்த்து வந்து நலிந்தாப்போலே இதுவும் விரஹதசையறிந்துவந்து ஹிம்ஸிக்கின்றது. இவ்விடத்து ஈட்டில், "மோர்க்குழம்பு கொடுத்துத் தேற்றி விடுகங் கட்டி நலிவாரைப்போலே" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. முற்காலத்தில் பெருங்குற்றவாளர்களை முக்கோணங்கட்டியடிக்கும்போது அவர்கள் மிகவும் தளர்ந்துபோனவாறே சிறிது ஸாத்மிக்கும்படி மோர்க்குழம்பு முதலியன கொடுத்துத் தேறுதலுண்டாக்கிப் பிறகு கிட்டிக்கோல் போட்டு ஹிம்ஸிப்பார்கள், அதைச் சொன்னபடி. விடுகம்—கிட்டிக்கோல்.

கைவந்த-விதேயமான என்றபடி. தைவந்த-தடவுகின்ற என்றபடி. (ரு)

வெஞ்சுடரில்தானமோல் வீங்கிருளின்நுண்துளியாய் *
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றுதால் *
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால் *
நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்? நின்றுருகுகின்றேனே. (சு)

| | |
|---|---|
| வீங்கு இருளின் | மிகச் செறிந்த இருளையுடைத்தாய் |
| நுண் துளி ஆய் | நுண்ணிய பனித்துளியை யுடைத்தாய்க் கொண்டு |
| தான் | இராப்பொழுதானது |
| வெம் சுடரில் | வெவ்விய நெருப்பிற் காட்டில் |
| அடும் | சுடாநின்றது, |
| ஆல் | அந்தோ!, (இந்த நிலைமையில்) |
| அம் சுடர | அழகிய ஒளியையுடையனான |
| வெய்யோன் | ஸூரியனுடைய |

| | |
|---|---|
| அணி நெடு தேர் | அழகிய பெரிய தேரும் |
| தோன்றுது | தென்படவில்லை; |
| செம் சுடர் தாமரை கண் செல்வனும் | சிவந்த காந்தியை யுடைய தாமரை போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீமானும் |
| வாரான் | வந்து தோன்றவில்லை; |
| ஆல் | ஆதலால் |
| நின்று உருகுகின்றேன் | நிரந்தரமாக உருகா நின்றேன்; |
| இனி | இந்நிலைமையில் |
| நெஞ்சு இடர் | (எனது) மனத்துயரை |
| தீர்ப்பார் ஆர் | போக்குவாரார்? |

* * * [வெஞ்சுடரில்.] இரவோ மிகவும் நலியா நின்றது; ஆதித்யனும் ஆவிர்ப்பவிக்கின்றிலன்; எம்பெருமானும் வந்து தோன்றுகின்றிலன்; நான் நின்ற நோவுபடுமித்தனை போக்கி என் பாதையைப் போக்குவார் ஆருமில்லையே யென்கிறாள்.

இராவணன் மாரீசனைத் துணைகொண்டு வந்து நலிந்தாப்போலே இராப்பொழுதானது நுண்ணிய பனித்துளியைத் துணைகொண்டு வந்து வெவ்விய நெருப்பிற்காட்டிலும் அதிகமாகவே நலியா நின்றது; எப்படிப்பட்ட துக்கமும் இரவி தோன்றினவாறே சிறிது மறைந்தொழியுமே. அந்த இரவியின் தேர்தானும் வந்து தோன்றக் காணோமே!. ஆர்த்தியிகளில் செந்தாமரைக் கண்ண

னை எம்பெருமான் வந்து தோன்றுவதென்று ஒரு முறைமையுண்டு; அப்படி அவனும் வந்து தோன்றிற்றிலன்; இனி எனது மனத்துயரை மாய்ப்பாரார்? நானோ நீர்ப்பண்டமாயுருகி பொழியா நின்றேன் என்கிறாள். .... (௯)

நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம் *
சென்றுருகிநுண்துளியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
அன்றொருகால்வையம் அளந்தபிரான்வாரானென்று *
ஒன்றொருகால்சொல்லாது உலகோவுறங்குமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| நின்று உருகுகின்றேன் போல | நிரந்தரமாக உருகிக் கிடக்கிற என்னைப்போல | அளந்த | அளந்து ஆக்கிரமித்துக் கொண்ட |
| நெடு வானம் | பரந்த ஆகாசமானது | பிரான் | எம்பெருமான் |
| உருகி சென்று | உருகிப்போய் (அதனால்) | வாரான் என்று | வரமாட்டானென்றாகிலும் |
| நுண் துளி ஆய் | நுண்ணிய பனித்துளியாய் | ஒன்று | ஒரு வார்த்தையை |
| செல்கின்ற | நடந்து வருகின்ற | ஒருகால் சொல்லாது | ஒருதரமேனும் சொல்லாமல் |
| கங்குல் வாய் | இராப்பொழுதிலே, | உலகு | லோகமானது |
| அன்று ஒருகால் | முன்பொரு காலத்திலே | உறங்கும் ஓ | உறங்குகின்றதே! ஐயோ! |
| வையம் | உலகத்தை | | |

* * * [நின்றுருகுகின்றேனேபோல.] அந்தோ! நான் இப்பாடுபட நிற்க இவ்வுலகில் எனக்குத் தேறுதல் கூறுவாருமிலரே! எல்லாரு முறங்கா நின்றார்களே! என்கிறாள். ஆகாசமானது இடைவிடாமல் பனித்துளியாய் இற்றுவிழா நின்றதென்று சொல்லப்புகுந்து அதற்குத் தன்னையே த்ருஷ்டாந்தமாக்குகிறாள் 'நின்றுருகுகின்றேனே போல' என்று. கீழே * வாயுந்திரையுகளில் "தோழீ வரும் யாமும்போல் நீராய் நெகிழ்கின்ற—வானமே!" என்றதை இங்கு நினைப்பது. நீர்ப்பண்டமாக உருகுகின்ற என்னைப்போலே நுண் துளியாய் இற்று உருகா நின்றதாயிற்று நெடுவானம் என்கிறாள். இப்படிப்பட்ட காலத்திலே உசாத்துணையாவார் சிலரிருந்தால் ஒருவாறு கதைகேட்டுப் போதுபோக்கித் தரிக்கலாமே. உலகளந்த பெருமாள் கதையை யெடுத்துக்கூறித் தரிப்பிக்கவுமாம், அல்லது அந்த வஞ்சகன் நமக்கும் வஞ்சகனேயாவன் என்றுசொல்லி ஆசையை யறுக்கவுமாம்; ஏதேனுமொன்றைச் சொல்லலாமே உலகம்; அந்தோ! ஒன்றும் சொல்லாதே உறங்கா நின்றதே!. ... ... .... (௰)

உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை *
சிறந்தபொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிறம்கிளர்ந்தவந்தாதி ஆயிரத்திப்பத்தால் *
இறந்துபோய்வைகுந்தம் சேராவாறெங்ஙனேயோ * (௧௧)

| | |
|---|---|
| உறங்குவான் போல் | நித்திரை செய்பவன் போல |
| யோகு செய்த | ரக்ஷணோபாய சிந்தை பண்ணிக்கொண்டிருக்கிற |
| பெருமானை | எம்பெருமான் விஷயமாக, |
| சிறந்த பொழில் சூழ் குருகூர் சடகோபன் | அழகிய சோலைகளாலே சூழப்பட்ட திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் |
| சொல் | அருளிச்செய்த |
| நிறம் கிளர்ந்த | பண்விஞ்சின |
| அந்தாதி | அந்தாதித்தொடையான |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் |
| இப் பத்தால் | இப்பதிகத்தினால், |
| இறந்து போய் | (அவரவர்கள்) சரீர வியோகம் பெற்றபின்பு |
| வைகுந்தம் | பரமபதத்திலே |
| சேரா ஆறு | புகாதொழிவது |
| எங்ஙனே | எவ்வண்ணம்? (புகவே புகுவர்களென்கை.) |

* * * [உறங்குவான் போல்.] கீழ்ப்பாட்டில் "உலகோவுறங்குமே" என்று சொன்னதில் 'எம்பெருமானும் உறங்குகின்றானே' என்ற பொருளும் தோற்றியிருக்கையாலே, எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி "ஆழ்வீர்! நான் உறங்குகிறேனல்லேன்; உமக்கு எந்த விதமாகக் காட்சிதரலாமென்று ஆலோசித்துக் கொண்டிராநின்றேனத்தனை காணும்" என்றருளிச்செய்தான் போலும்; அது கேட்டு "உறங்குவான் போல் யோகுசெய்த பெருமானை" என்கிறார். யோகு செய்கையாவது உபாய சிந்தை பண்ணுகை. இங்ஙனே அறியப்பெறுகையாலே ஆழ்வார் தாமும் தரித்து ஊரும் தரித்தபடியைச் "சிறந்த பொழில்சூழ் குருகூர்" என்றதனால் தெரிவித்தபடி.

"இப்பத்தால் இறந்துபோய்" என்று இதிலே சேர்த்து அந்வயித்து, இப்பத்தைச் சொல்லுவதற்கு இறந்துபோவது பலன் என்று பொருள் கொள்ளலாகாது; 'இப்பத்தால் வைகுந்தம் சேராவாறு' என்று அந்வயித்துக்கொள்ள வேணும். அவரவர்கள் ப்ராப்த காலத்தில் இறந்துபோவது எப்படியுமுள்ளது; அப்படி இறக்க நேருங்காலத்தில் இப்பதிகத்தின் பயனாகப் பரமபத ப்ராப்தி தவிராதென்றவாறு. .... ... ... (கக)

நான்காந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

ஆபத்பந்துத்வகீர்த்யா யதுகுலஜநநாத் தீரவீரத்வகீர்த்யா
லோகாநாம் விக்ரமாச்ச ஶ்ரிததுரிதஹ்ருதே: அத்புதைச்சேஷ்டிதைச்ச
சக்ராத்யஸ்த்ராந்விதத்வாத் கமலநயநதாஸம்பதா வாமநத்வாத்
க்ஷீராப்தௌ ஶேஷஶாயீ ஜநயதி நவஹார்தஸந்தாபமார்யாயைதந ||

* ஊரெல்லாந் துஞ்சியிலே, எம்பெருமான் திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மேலே கண் வளர்ந்துகொண்டு ஜகத்ரக்ஷணத்திலே மிகவும் தீக்ஷிதனாயிராநின்றானென்று சொல்லிற்றென்கிறார். அதற்கேற்ற ஹேதுக்களை உபபாதிக்கிறார்—

1. ஆபத்பந்துத்வகீர்த்யா. * பாரெல்லாமுண்ட நம் பாம்பணையான் * உலகங்களை ப்ரளயங் கொள்வதாகவிருந்த காலத்திலே திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்த புகழுடைமையைச் சொன்னபடி.

2. யதுகுல ஜநநாத். * காவிசேர் வண்ணன் என் கண்ணனும் * யதுகுலதிலகனான கண்ணனாய் வந்து அவதரித்தமை சொன்னபடி.

3. தீரவீரத்வ கீர்த்யா. * காயுங் கடுஞ்சிலை நங் காகுத்தன் * சக்ரவர்த்தி திருமகனாய்ப் பிறந்துபடைத்த மஹாவீர்ய தைர்யங்களால் வந்த புகழுடைமையைச் சொன்னபடி.

4. லோகாநாம் விக்ரமாச்ச. *இம்மண்ணளந்த கண்பெரிய செவ்வாய்* எல்லாவுலகங்களையும் திருவடிகளாலே அளந்துகொண்டமை சொன்னபடி.

5. ஆச்ரித துரிதஹ்ருதே:. * காரன்னமேனி நங் கண்ணன் * மேகம் தாபத்தை ஹரிக்குமாபோலே மேகமன்ன திருமேனியைக் காட்டி அடியார்களின் தீவினைகளை அகற்றுந்தன்மை சொன்னபடி.

6. அத்புதைச் சேஷ்டிதைச் ச. * எம்மாயவனும் வாரானால் * மிகவும் ஆச்சரியமான சேஷ்டிதங்களுடைமை சொன்னபடி.

7, 8. சக்ராத்யஸ்த்ராந்விதத்வாத். * தூப்பால வெண் சங்கு சக்கரத்தன் * கைவந்த சக்கரத்தன் * திருவாழி திருச்சங்குகளைத் திவ்யாயுதமாகவுடைமை சொன்னபடி.

9. கமலநயநதாஸம்பதா. * செஞ்சுடர்த் தாமரைக்கட் செல்வன் * சிவந்த தாமரைப்பூப்போன்ற திருக்கண்களாகிற செல்வமுடைமை சொன்னபடி.

10. வாமநத்வாத். * அன்றொருகால் வையமளந்தபிரான் * உலகளக்க வாமனனாய் வந்தமை சொன்னபடி.

11. க்ஷீராப்தௌ சேஷசாயீ. * உறங்குவான்போல் யோகு செய்த பெருமான். *

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

———

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

தாம்வஶ்வராம் விடியதீ ஸகவெஷ்டியாணாம்
ஆஜ்ஞாதிகா ஸவியமாம்ஶு விஸம்ஜ்ஞயந்தீ ।
ஸௌதிமா விரஹிணீஶ்வஜாஷோ ச்ரேநுஷா
சோஹாஹ்வயாரஜநிரஸ்யாதிகா பதந்யெ ॥

(கருத்து.) கீழே * மாசறு சோதியில் மடலூரவேணுமென்று பதறின பதற்றத்தைத் தணிப்பதும், ஸகலேந்திரியங்களையும் மறைப்பதும் அருகிலுள்ளாரை அறிவழிப்பதுமான மோஹமென்கிற இரவானது நான்காவது திருவாய்மொழியிலே கலந்து பிரிந்தாளொரு பிராட்டியின் தசையை யடைந்த ஆழ்வார்க்கு ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதாகச் சொல்லப்பட்டதென்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஊர நினைந்தமடல் ஊரவு மொண்ணாதபடி
கூரிருள்சேர் கங்குலுடன் கூடிநின்று—பேராமல்
தீதுசெய்ய, மாறன் திருவுள்ளத்துச் சென்றதுயர்
ஓதுவதிங் கெங்ஙனேயோ.

| | | | |
|---|---|---|---|
| ஊர நினைந்த | தாம் ஊர்வதாக நினைத்துத் தொடங்கின | தீது செய்ய | உபத்திரவம் செய்ய, (அதனால்) |
| மடல் | மடலை | மாறன் | ஆழ்வாருடைய |
| ஊரவும் ஒண்ணாதபடி | ஊரமுடியாதபடியாக | திரு உள்ளத்து | திருவுள்ளத்தில் |
| கூர் இருள் சேர் கங்குல் | மிகுந்த இருள்செறிந்த இரவானது | சென்ற | சேர்ந்த |
| உடன் கூடி நின்று | தன் பரிவாரத்தோடே சேர்ந்து நின்று | துயர் | துயரத்தை |
| பேராமல் | தொலையாமல் | இங்கு ஓதுவது | இங்கு எடுத்துரைப்பதானது |
| | | எங்ஙனே | எப்படி முடியும்? |
| | | ஓ | அந்தோ!. |

கீழ்த் திருவாய்மொழியிலே மடலூருவதாக ஒருப்பட்ட ஆழ்வார் அது செய்ய முடியாதபடிக்கு இருள் செறிந்த இராப்பொழுது வந்து இடையூறாக நின்றது; அதுவுமல்லாமல் மிக்க துன்பத்தையுமுண்டுபண்ணிற்று; அதனால் துன்புற்ற ஆழ்வாருடைய நிலைமை வாய்கொண்டு பேசவொண்ணாததாயிருந்த தென்கை. .... .... .... .... (சச)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி—ஐந்தாம்பத்து
## ஐந்தாந் திருவாய்மொழி—எங்ஙனேயோவன்னைமீர்காள்.

உரையவதாரிகை:— கீழ்ச் திருவாய்மொழியில் ஆழ்வார் இருளுக்கும் பனிக்கும் வருந்தினபடி சொல்லிற்று. இதுதான் இருள்தருமா ஞாலமாகையாலே தமோகுணம் மேலிட்டு நலிந்தபடியைச் சொன்னதாக ஸ்வாபதேசப் பொருள் கொள்ளலாம். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் * [illegible] அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்தத து:க்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே * என்றருளிச் செய்ததும் கீழ்த்திருவாய்மொழியின் ஸ்வாபதேசார்த்தரூபம் என்றும் கொள்ளலாம்.

இருட்போது கழிந்து பகற்போது காண்கிறப்போலே தமோ குணத்தின் மேலீடு கழிந்து ஸத்வ குணத்தின் தலையெடுப்பு காணத் தொடங்கிற்று. அதனால் நெஞ்சு தரிப்புற்றுத் திருக்குறுங்குடி யெம்பெருமானுடைய வடிவழகையும் திவ்யாயுத திவ்யாபரணச் சேர்த்தியழகையும் வாய் வெருவும்படியாயிற்று.

உருவெளிப்பாடு என்பதொன்றுண்டு; அதாவது மானஸ ஸாக்ஷாத்காரம். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு ஸாக்ஷாத்கார விஷயமாகை. அது இத்திருவாய்மொழியில் செல்லா நின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசுந் திருவாய்மொழி. தாய்மார் தலைமகட்கு அடைவு சொல்லி மீட்கப்பார்க்க, தலைமகள் 'எனக்கோ நீங்கள் அடைவு சொல்லுவது? திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகிலே நெஞ்சு பறியுண்டு கிடக்குமென்னை நீங்கள் அடக்கப் பார்ப்பது முறையல்ல' என்று சொல்லுகிறபடியைச் சொல்லுகிறது. .... (*)

எங்ஙனேயோ அன்னைமீர்காள்! என்னைமுனிவதுநீர்? *
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சங்கினோடும்நேமியோடும் தாமரைக்கண்களோடும் *
செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்நெஞ்சமே. (க)

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர்காள் | தாய்மார்களே! | எங்ஙனேயோ | எப்படிப்பொருந்தும்? |
| நீர் | நீங்கள் | நங்கள் | நாம் அனுபவிப்பதற்குரிய |
| என்னை முனிவது | என்னைச் சீறுவது | கோலம் | அழகிய |

| | | | |
|---|---|---|---|
| திருக்குறுங் குடிநம்பியை | திருக்குறுங்குடிப் பெருமானை | தாமரை கண்களோடும் | தாமரைபோன்ற திருக்கண்களோடும் |
| நான் கண்ட பின் | நான் ஸேவிக்கப்பெற்ற பின்பு, | செம் கனி வாய் ஒன்றினோடும் | சிவந்த கனி போன்ற ஒப்பற்றதான அதரத்தோடும் |
| என் நெஞ்சம் | என் மனமானது | செல்கின்றது | நடவாநின்றது. [என் னெஞ்சில் இவையே திகழ்கின்றனவென்றபடி.] |
| சங்கினோடும் நேமியோடும் | சங்கு சக்கரங்களோடும் | | |

* * * [எங்ஙனேயோ.] தாய்மார்களே! என்னை நீங்கள் சீறுவது எதற்கு? சீறிப் பயனென்? வேணுமாகில் திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகைச் சீறுங்கோள்; 'ஏதுக்கு நீ இப்படிப்பட்ட வடிவழகு கொண்டாய்?' என்று நம்பியைச் சீறில் சீறுமத்தனை யொழிய என்னைச் சீறுவது முறைமையன்று. நான் ஏதேனும் ஒரு காபுருஷனைக் கண்டு மோஹித்தாயா படுகிறேனோ? அழகுதானே உருக்கொண்ட திருக்குறுங்குடி நம்பியையன்றோ நான் ஸேவிக்கப் பெற்றது. அப்படி ஸேவிக்கப்பெற்ற க்ஷணமே தொடங்கிச் சங்கும் சக்கரமும் செந்தாமரைக் கண்களும் செங்கனிவாயுமே என் முன்னே தோன்றுகிற்க, நான் அவற்றை வாய்வெருவா நிற்க பின்னை எதை வாய்வெருவுவேன்? ஆதலால் என்னை நீங்கள் முனிவது முறைமையன்று என்றாளாயிற்று.

திருக்குறுங்குடி = இது பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று. குறுகியவனான வாமனனது க்ஷேத்ரமாதலால் இத்தலத்திற்குக் குறுங்குடியென்று திருநாமமாயிற்றென்பர். இத்தலத்திலுள்ள எம்பெருமான்களுள் ஒரு எம்பெருமான் ஸ்ரீ பாஷ்யகாரர் பக்கலிலே திருமண்காப்பு சாத்திக்கொண்டு வேதாந்தார்த்தமுங்கேட்டு சிஷ்யனாய் 'நாமும் நம்மிராமாநுசனையுடையோம்' என்கையாலே அப்பெருமானுக்கு வைஷ்ணவநம்பியென்று திருநாமம். ஆனது பற்றியே 'வைஷ்ணவவாமன க்ஷேத்ரம்' என்றும் இத்தலம் வழங்கப்படும். ஆசார்யஹ்ருதயத்தில், "வைஷ்ணவவாமநத்தில்—நிறைந்த நீலமேனியின் ருசிஜநக லாவண்யம் பூர்ணம்" என்றருளிச்செய்ததும், அங்கு மணவாளமா முனிகள் வியாக்கியானத்திலே—"வாமநாவதாரத்தில தன்னுடைமை பெறுகைக்கு அர்த்தியானாப்போலே அர்த்தியாய் நின்று பாஷ்யகாரர் பக்கலிலே வேதாந்தார்த்தம் கேட்டு சிஷ்யனாய் 'நாமும் நம்மிராமாநுசனையுடையோம்' என்கையாலே ஸ்ரீ வைஷ்ணவ நம்பியென்று திருநாமமாய், வாமநாவதாராம்சமாகப் புராணஸித்தமாயிருக்கிற நம்பியுடைய திருப்பதியென்கை. அந்திக்கே * அறியக் கற்றுவல்லார் வைட்டணவர் * என்று இத் திவ்யதேச விஷயமான திருவாய்மொழியைக் கற்றவர்கள் வைஷ்ணவராவரென்கையாலே வைஷ்ணவர்களுடையதாய் வாமநக்ஷேத்ரமாயிருக்கிற தேசத்திலென்னவுமாம்" என்றருளிச்செய்ததும் இங்கு அநுஸந்தேயம். நம்மாழ்வாருடைய திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்தவரும் இத்தலத்து நம்பியே.

நேமி—வடசொல்; சக்கரத்தின் உறுப்புகளில் ஒன்றைச் சொல்லுமதான இச்சொல் சக்கரத்திற்கு வாசகமானது லக்ஷணையால். ... (க)

என்னெஞ்சினால்நோக்கிக்காணீர் என்னைமுனியாதே *
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
மின்னுநூலும்குண்டலமும் மார்வில்திருமறுவும் *
மன்னுபூணும்நான்குதோளும் வந்தெங்கும்நின்றிடுமே. (௭)

| | |
|---|---|
| அன்னைமீர்காள்) | தாய்மார்களே! |
| என்னை முனியாதே | என்னை வீணாகச் சீறுமல் |
| என் நெஞ்சினால் | எனது நெஞ்சைக் கொண்டு |
| நோக்கி காணீர் | அநுபவித்துப் பாருங்கோள்; |
| தென் நல் சோலை திருக் குறுங்குடி நம்பியை நான் கண்டபின்—; | |
| மின்னும் நூலும் | பளபள வென்று ஜ்வலிக்கிற பூணூலும் |
| குண்டலமும் | மகர குண்டலமும் |
| மார்பில் | திருமார்பிலே விளங்குகின்ற |
| திரு மறுவும் | ஸ்ரீவத்ஸமும் |
| மன்னு பூணும் | எப்போதும் கழற்றாத ஆபரணங்களும் |
| நான்கு தோளும் | சதுர்ப்புஜமும் |
| எங்கும் | நான் போமிடமெங்கும் |
| வந்து நின்றிடும் | வந்து நிற்கின்றன. |

* * * [என்னெஞ்சினால்.] 'பெண்ணே! திருக்குறுங்குடி நம்பியை நீ மாத்திரமேயோ கண்டது; நாங்கள் கண்டதில்லையோ? நாங்களும் ஸேவித்தே யிருக்கிறோம்; ஆனாலும் உனக்கு இப்படிப்பட்ட முறைகேடு ஆகாது' என்று தாய்மார் சொல்ல, அதற்குத் தலைமகள் கூறுகின்றாள் "என்னெஞ்சினால் நோக்கிக் காணீர்" என்று. என்னெஞ்சை இரவலாக வாங்கி வைத்துக்கொண்டு நீங்கள் நம்பியை ஸேவித்தீர்களாகில் இங்ஙனே என்னைப் பொடியமாட்டீர்களென்கை.

நீ கண்ட காட்சிக்கு வாசியென்? என்று தாய்மார் கேட்க, நம்பியை நான் கண்டபின், மேகத்திலே மின்னினாற்போலேயிருக்கிற யஜ்ஞோபவீதமும், பரந்த மின் ஓரிடத்திலே கழித்தாற்போலேயிருக்கிற மகரகுண்டலமும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற திருமார்பிலேகிடக்கிற ஸ்ரீவத்ஸமும் திருவாபரணங்களும் திருத்தோள்களும் சுற்றும் வந்து என்னை நெருக்காநின்றனவே! இதுவாயிற்று நான் கண்ட காட்சிக்கு வாசி யென்கிறாள்.

'தென்னன் சோலை' என்பதை, தென் நன் சோலை என்று பிரித்து, தெற்குத் திக்கிலே யுள்ளதாய் அழகியவான சோலையையுடைய என்றுரைப்பது தவிர, 'தென்னன்' என்று பாண்டியனுக்குப் பெயராய் அவன் கொண்டாடுமிடமாய், சோலைகளையுடையதான திருக்குறுங்குடி என்றுரைப்பதுமொன்று. .. (௭)

நின்றிடும்திசைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
வென்றிவில்லும்தண்டும்வாளும் சக்கரமும்சங்கமும் *
நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும்நீங்காவே. (௮)

அன்னையரும் — தாய்மாரான நீங்களும் (என்னைப்பற்றி)
நின்றிடும் என்று — இப்பெண் ஸ்தப்தையாய் நிற்கின்றாளென்று சொல்லியும்
திசைக்கும் என்று — இப்பெண் அறிவழிந்து கிடக்கிறாளென்று சொல்லியும்
-வையும் என்று — இப்பெண் வைகின்றாளென்று சொல்லியும்
முனிதிர் — வெறுத்துரைக்கின்றீர்கள்;
குன்றம் மாடம் — குன்றம்போன்ற மாடங்களணிந்த
திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;

வென்றி வில்லும் — ஜயசீலமான சார்ங்கமும்
தண்டும் — கௌமோதகியென்கிற கதையும்
வாளும் — நந்தகவாளும்
சக்கரமும் சங்கமும் — திருவாழி திருச்சங்குகளும்
நின்று — ஸ்திரமாக நின்று
கண்ணுள் தோன்றி — என் கண்ணுள்ளே காணப்பட்டு
நீங்கா — நீங்குகின்றனவில்லை;
நெஞ்சுள்ளும் — நெஞ்சினுள்ளும்
நீங்கா — நீங்குகின்றனவில்லை.

* * * [நின்றிடுந் திசைக்கும்.] நம்பியழகை நினைத்துச் சற்றுப்போது ஸ்தம்பித்து நிற்பது, பின்னை அறிவுகெட்டு அசேதநவஸ்துபோலே நிற்பது, உருகி நிற்பது இப்படியான நிலைமைகளைத் தலைமகள் அடைந்துவாரா நிற்க, தாய்மார் இதைச் சொல்லிச் சொல்லிப் பழிதூற்றத் தொடங்கினார்கள்; அதற்குத் தலைமகளுரைக்கின்றாள்; நான் ஒரு வ்யாபாரக்ஷமையன்றியே ஸ்தப்தையாய் நிற்பது வாஸ்தவம்; அறிவழிந்து நிற்பதும் வாஸ்தவம்; வைந்து கிடப்பதும் வாஸ்தவம்; இதற்காக நீங்கள் சீறுகைக்கு என்ன ப்ரஸக்தியுண்டு? குன்றம்போல் மணிமாட நீடு திருக்குறுங்குடி நம்பியை நான் ஸேவித்தது போல நீங்களும் ஸேவிக்கப்பெற்றாலன்றோ தெரியும். * வ்ருக்ஷவ்ருக்ஷவ பஶ்யாமி வீரக்ருஷ்ணாஜிநாம்பரம்— வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் * என்ற மாரீசனுடைய நிலைமையன்றோ எனக்குமாயிற்று. எம்பெருமானுடைய பஞ்சாயுதங்களேயன்றோ என்னைச் சூழ்ந்து கிடக்கின்றன. இந்த நிலைமை உங்களுக்கு உண்டானால் நீங்களும் நின்றிடுவீர், திசைப்பீர், வைவீர்; வீணாக என்னை ஏதுக்குப் பொடிகிறீர்கள்? என்றாளாயிற்று. .... .... .... (௩)

நீங்கநில்லாகண்ணநீர்களென்று அன்னையரும்முனிதிர் *
தேங்கொள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
பூந்தண்மாலைத்தண்துழாயும் பொன்முடியும்வடிவும் *
பாங்குதோன்றும்பட்டும்நாணும் பாவியேன்பக்கத்தவே. (௪)

கண்ண நீர்கள் — (இவளது) கண்ணீர்த் துளிகளானவை
நீங்க நில்லா என்று — துடைத்தாலும் நிற்கின்றனவில்லை என்று சொல்லி

அன்னையரும் முனிதிர் — தாய்மார்களான நீங்களும் சீறுகின்றீர்கள்;
தேன் கொள் சோலைத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
பூ — அழகிய

| | | | |
|---|---|---|---|
| தண் | குளிர்ந்த | பாங்கு தோன்றும் | திருவரைக்குப் பொருத்தமாகக் காணப்படுகிற |
| மாலை | மாலைவடிவமான | பட்டும் | பட்டுபீதாம்பரமும் |
| தண் துழாயும் | திருத்துழாயும் | நாணும் | திருவரைநாணும் |
| பொன் முடியும் | திருவபிஷேகமும் | பாவியேன் பக்கத்த | பாவியான என்னுடைய பக்கத்திலேயேயுள்ளன. |
| வடிவும் | திருமேனியும் | | |

* * * [நீங்க நில்லா.] * க்ஷணாதிவிரீகநேத்ரா ஸ்ருஹ் வாஹக்ரூதமாதுவாது| வஷா வரமாணாவிஷ: த்ருஷவ்ஸவபூஷிஹிஹி: ஆஹ்லாதசித நேத்ராபபு: புலகீக்ருதகாத்ரவாந், ஸதா பரகுணாவிஷ்ட: த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி: * என்று பகவத் குணங்களிலே யீடுபட்டுக் கண்ணுங் கண்ணீருமாயிருக்கிற நிலைமையைக் காண்கைக்கு ஆசைப்படவேணுமென்று சொல்லியிருக்க, அன்னைமீர்! அந்த நிலைமையைக் கண்டு அந்தோ! நீங்கள் வெறுப்பது என்ன நீதி!; திருக்குறங்குடியிலுள்ள சோலைகளில் தேன் வெள்ளம் மாறினாலும் மாறும், என் கண்களில் கண்ணீர் மாறாதுதான்; ஏனென்னில்;

[பூந்தண்மாலை யித்யாதி.] உபயவிபூதிக்குத் தானே கடவனென்பது தோன்ற அணிந்த செவ்வித் திருத்துழாய்த் தனிமாலையும், உபயவிபூதியும் தன் முடியிலே செல்லும்படி கவித்த திருவபிஷேகமும், அந்த மாலைக்கும் முடிக்கும் ஏற்றிருக்கும்படியான திவ்யமங்கள விக்ரஹமும், திருவரை பூத்தாற்போலே அக்குத்தைக்குப் பாங்காய்த் தோற்றுகிற திருப்பீதாம்பரமும் அதன் மேலாபரணமான விடு நாணும் இடைவிடாது என்னருகே நின்று பிரகாசியா நின்றனவே!, இப்படியானபின்பு என் கண்ணீர்கள் மாற வழியேது? என்கிறாள்.

இந்தக் கண்ணீர் ஆனந்தத்தாலுமாகலாம், சோகத்தாலுமாகலாம்; உருவெளிப்பாடாய்த் தோற்றுகையாலே ஆனந்தமுள்ளது; அநுபவிக்கக்கிடையாமையாலே சோகமுமுள்ளது அது தோன்றவே 'பாவியேன்' என்றது. (ச)

பக்கம்நோக்கிநிற்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
தக்ககீர்த்தித்திருக்குறங்குடிநம்பியை நான்கண்டபின் *
தோக்கசோதித்தொண்டைவாயும் நீண்டபுருவங்களும் *
தக்கதாமரைக்கண்ணும் பாவியேனுவியின்மேலனவே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| பக்கம் நோக்கி நிற்கும் என்று | '(இவன்) அவன் எந்த பக்கமாக வருகின்றானென்று எதிர்பார்த்திருக்கின்றாளென்றும், | முனிதிர் | முனிந்து பேசுகின்றீர்கள்; |
| நையும் என்று | (வரக்காணாமையாலே) நைகின்றாள் என்றும் சொல்லி | தக்க கீர்த்தித் திருக்குறங்குடி நம்பியை நான் கண்டபின்—; | |
| அன்னையரும் | தாய்மாரான நீங்களும் | தொக்க | ஒன்றாகத்திரண்ட |
| | | சோதி | சோதியையுடைய |
| | | தொண்டை வாயும் | கொவ்வைக்கனி போன்ற அதரமும் |

நீண்ட புருவங்களும் — நீண்டிருக்கின்ற புருவங்களும்
தக்க — தகுதியான
தாமரைகண்ணும் — தாமரைபோன்ற திருக்கண்களும்
பாவியேன் — பாவியான என்னுடைய
ஆவியின் மேலன — உயிர்நிலையிலே நின்று நலியாநின்றன.

* * * [பக்கம் நோக்கி நிற்கும்.] எம்பெருமான் எழுந்தருள்வதற்கு ஸம்பாவனையுள்ள பக்கங்களிலேயே பராங்குச நாயகியின் கண்ணோக்கம் செல்லுகின்றபடியால் அதைக்கண்டு தாய்மார்கள் முனிகின்றார்கள்; அந்தோ! இப்படியும் முனியலாமோவென்கிறாள் தலைவி.

சொன்ன சொன்னபடியெல்லாம் தரும்படியிருக்கிற கீர்த்திவாய்ந்த திருக்குறுங்குடி நம்பியை, அந்தக் கீர்த்திகளைப் பேசிக்களித்தே போது போக்கும் நான் ஸேவிக்கப் பெற்ற பின்பு, என்னை இவர்கள் முனிவதற்கு என்ன ப்ரஸக்தியுண்டு? மற்றபேர்கள் ஸேவிக்குமாபோலேயோ நான் ஸேவித்தது? அழகெல்லாம் திரண்டு ஒரு வடிவுகொண்டாற்போன்றதான திருவதரமும், * தன்கைச்சார்ங்கமதுவேபோல் அழகியவாய் நீண்டு விளங்குகின்ற திருப்புருவங்களும், அப்புருவங்களுக்குத் தகுதியாய்த் திகழ்கின்ற திருக்கண்களும் தோற்புரையே போகையன்றிக்கே உயிர் நிலையிலே நின்று நலியா நின்றனவே; இப்படிப்பட்ட நான் பக்கம் நோக்கி நில்லாதே வேறு என் செய்யவல்லேன்? அவன் வரக் காணாமையாலே நைவதும் செய்கின்றேன்; இதற்காகத் தாய்மார்கள் நம் க்ருஷிபலித்ததேயென்று உகக்கவேண்டியிருக்க, வெறுப்பது வழக்கோவென்றாளாயிற்று. .... .... .... (௬)

**மேலும்வன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள் ***
**சோலைசூழ்தண்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் ***
**கோலநீள்கொடிமூக்கும் தாமரைக்கண்ணும்கனிவாயும் ***
**நீலமேனியும்நான்குதோளும் என்னெஞ்சம்நிறைந்தனவே.** (௭)

இவள் — 'இப்பெண்பிள்ளை
நம் குடிக்கு — நமது ப்ரபந்நஸந்தானத்திற்கு
மேலும் — காலமுள்ளதனையும்
வன் பழி என்று — பெருத்த பழியாயிருப்பவள்' என்று சொல்லி
அன்னை — தாயானவள்
காண கொடாள் — நான் நம்பியைஸேவிக்கவொண்ணாதபடி தடைநிற்கின்றாள்;
சோலை சூழ் தண் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின் —;
கோலம் — அழகியதாய்
நீள் — நீண்டதான
கொடி மூக்கும் — கற்பகக் கொடிபோன்ற திருமூக்கும்
தாமரை கண்ணும் — தாமரை போன்ற திருக்கண்களும்
கனி வாயும் — பழுத்த பழம் போன்ற அதரமும்

| | | | |
|---|---|---|---|
| நீலம் மேனியும் | நீலநிறத்ததான திருமேனியும் | என் நெஞ்சம் | எனது நெஞ்சிலே |
| நான்கு தோளும் | நான்கு திருத்தோள்களும் | நிறைந்தன | நிரம்பியிருக்கின்றன. |

* * * [மேலும் வன்பழி.] படி கடவாப் பத்தினியாயிருக்கவேண்டிய இவள் படிகடந்து நடக்கின்றாளாதலால் நம் குடிக்கு இவள் பெரும்பழியை விளைப்பவளாயிராநின்றாளென்று கருதித் தாய்மார்கள் 'இனி இவள் திருக்குறுங்குடி நம்பியைக் காணவொண்ணாதபடி செய்துவிடுவதே கருமம்' என்று பேசிக்கொள்ளுகின்றார்கள்; அந்தோ! தண்ணீர் பெருகிச் சென்றபின்பு அணைகட்டப் பாரிக்குமாபோலே யிராநின்றதாயிற்று இது; திருக்குறுங்குடி நம்பியை நான் காணப் பெறுவதற்கு முன்னமே இவர்கள் சேமித்திருக்கவேணும்; அது செய்யாதே இன்று மறுக்கப் பார்க்குமிவர்கட்குப் பயன் யாதாகுமோ?

நான் நம்பியை ஸேவிக்கப்பெற்ற நாள் தொடங்கி, அப்பெருமானது திருமூக்கும் திருக்கண்ணும் திருவாயும் திருமேனியும் திருத்தோள்களுமே என்னெஞ்சை இடமடைத்துக்கொண்டு கிடக்க இவர்களுடைய நிபந்தனைகள் இனி என்னாவது என்கிறாள் .... .... .... (சு)

நிறைந்தவன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள் *
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
நிறைந்தசோதிவெள்ளம்சூழ்ந்த நீண்டபொன்மேனியொடும் *
நிறைந்தென்னுள்ளேநின்றொழிந்தான் நேமியங்கையுளதே. (எ)

| | | | |
|---|---|---|---|
| இவள் நம் குடிக்கு | 'இப்பெண்பிள்ளை நம்முடைய ப்ரபந்ந ஸந்தானத்திற்கு | சோதி வெள்ளம் சூழ்ந்த | தேஜஸ்ஸமூஹத்தாலே சூழப்பட்டு |
| நிறைந்த வல் பழி என்று | நிலைத்துநிற்கக் கூடிய கொடியபழியாயிருப்பவள்' என்று சொல்லி | நீண்ட | உத்துங்கமான |
| அன்னை | தாயானவள் | பொன் மேனியொடும் | திருமேனியோடுகூட |
| காண கொடாள் | நம்பியை ஸேவிக்க வொட்டுகிறதில்லை; | என் உள்ளே | எனது நெஞ்சுக்குள்ளே |
| சிறந்த கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்—; | | நிறைந்து நின்று ஒழிந்தான் | வியாபித்து நின்றுவிட்டான்; |
| நிறைந்த | பரிபூர்ணமான | நேமி | திருவாழியும் |
| | | அம் கை | அழகிய திருக்கையிலே" |
| | | உளது | உள்ளதாயிருக்கின்றது. |

* * * [நிறைந்த வன்பழி.] கீழ்ப்பாட்டிலே 'நம் குடிக்கு இவள் வன்பழி' என்று சொல்லித் தாய்மார் முனிந்தமை சொல்லிற்று. "மனத்துற்ற மாந்தர் பழிக்கில் புகழ்" என்கிறபடியே பழியையே பரமபோக்யமாகக் கொள்ளுமவளாகையாலே, தாய்மார் பழிக்கப் பழிக்க, தலைமகளினுடைய அதிப்ரவ்ருத்தி அதிகரிக்கத் தொடங்கிற்று; ஆதலால் "நிறைந்த வன்பழி நங்குடிக்கு இவள்" என்று பின்னையும் கைசுடுக்கி வையத் தொடங்கினாள் தாய்; அது கண்டு தலைவி சொல்லுகிறாள்;

"ஊரவர் கவ்வை யெருவிட்டு அன்னை சொல் நீர்படுத்து ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செயுள் பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி" என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறபடி பழியே வினைநீராகத் தன்னிடத்துக் காதலை வளரச்செய்யுமிதுதானே தனக்குச் சிறந்த கீர்த்தியாகப் பெற்ற திருக்குறுங்குடி நம்பியை நான் காண்பதற்கு முன்பே இவர்கள் இங்ஙனே முனிந்தாலும் பயனுள்ளதாம்; காணப்பெற்றபின்பு இவர்களின் முனிவு என் செய்ய?

நிறைந்த சோதி வெள்ளஞ் சூழ்ந்த விலக்ஷணமான திருமேனியழகும், அல்லாத அழகிற்காட்டில் கையுந் திருவாழியுமான அழகும் என்னெஞ்சிலே வேர் விழுந்தனவானபின்பு, பழியென்றாலென்? பாவமென்றாலென்? நானோ இளைப்பது என்கிறாள்.

* மேலும் வன்பழியென்றும் * நிறைந்த வன்பழியென்றும் தாய்மார் பழியிட்டுரைப்பதாகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து யாது? ப்ரபந்நஜநகூடஸ்தராகக் கொண்டாடப்படுகின்ற ஆழ்வார் ப்ரபந்நகுலமரியாதை கடவாதேயிருக்கவன்றோ கடமைப்பட்டவர்; பழிப்பதற்கு இடந் தந்து நடக்கலாமோ? என்று சிலர் சங்கிப்பர்கள். ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் — "சூழ்ச்சி அகற்றினீரென்னும்பழி, இணக்கியெங்ஙனே யென்னும் மேலெழுத்து, முன்னின்றாயிவளை நீரென்னுமிருபடை மெய்க்காட்டு, நீரென்னே யென்னுமுடன்பாடு, இடையில்லை யென்னு முதறுதல் இருந்திருந்து நடந்தானென்னுங் கொண்டாட்டம் அவஸ்தாத்ரய வ்ருத்தி" என்ற சூர்ணிகையினால் சங்கா பரிஹாரம் பெறுக.

உபாயாத்யவஸாய தசையென்றும் ப்ராப்யருசி தசையென்றும் இரண்டு அவஸ்தைகளுண்டு; முந்தின அவஸ்தையில் நின்று பார்க்கும்போது அதிப்ரவ்ருத்திகள் பழியாய்த் தோற்றும்; பிந்தின அவஸ்தையில் நின்று பார்க்கும்போது அதிப்ரவ்ருத்திகள் அவர்ஜநீயமாகையாலே உத்தேச்யமாயிருக்கும். ஆகவே விரோதமில்லையென்றுணர்க. .... .... (எ)

கையுள்நன்முகம்வைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
மைகொள்மாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
செய்யதாமரைக்கண்ணுமல்குலும் சிற்றிடையும்வடிவும் *
மொய்யநீள்குழல்தாழ்ந்ததோள்களும் பாவியேன்முன்நிற்குமே. (அ)

நல் முகம் கையுள் வைக்கும் என்று } '(இப்பெண்பிள்ளையானவள்) அழகிய முகத்தைக் கையிலே இட்டுவைக்கின்றாள்' என்றும்
நையும் என்று } நைகின்றாள் என்றும் சொல்லி
அன்னையரும் முனிதிர் } தாய்மாரான நீங்களும் சீறிப் பொடிகின்றீர்கள்;
மை கொள் மாடத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
செய்ய தாமரை கண்ணும் } செந்தாமரை போன்ற திருக்கண்களும்

அல்குலும் — கடிப்ரதேசமும்
சிறு இடையும் — சிறுகின இடையும்
வடிவும் — திருமேனியும்
மொய்ய நீள் குழல்தாழ்ந்த தோள்களும் — செறிந்து நீண்ட கேச பாசங்கள் தாழ்ந்துலாவப் பெற்ற திருத்தோள்களும்
பாவியேன் முன் நிற்கும் — பாவியான என்னுடைய கண்முன்னேபுலப்படா நின்றன.

* * * [கையுள் நன் முகம்.] உலகத்தில் துக்கம் விஞ்சினால் முகத்தைக் கைத் தலத்திலே வைத்துக்கொண்டு சிந்தை கலங்கிக் கிடப்பதென்று ஒன்றுண்டு; அந்த நிலைமை பராங்குசநாயகிக்கு முண்டாயிற்று; அங்ஙனே முகத்தைக் கையிலேயிட்டுக்கொண்டு நைந்துகிடந்தாள்; அதுகண்ட தாய்மார் 'சான்றோச் சிறுக்கிக்கு இப்படியும் ஒரு இருப்புண்டோ?' என்று முனிய, அதற்குத் தலைவி கூறுகின்றாள்;

திருக்குறுங்குடி நம்பியின் செந்தாமரைக் கண்ணும், அந்நோக்குக்குத் தோற்றவர்கள் இளைப்பாறுமல்குலும், கிழையும் மேலையுக்கொண்டு அறுமித்து அறியவேண்டும்படியான இடையும், இவற்றுக்கு ஆச்ரயமான வடிவும், * களி வண்டெங்கும் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிர நின்று * என்கிறபடியே திருக்குழல்கள் அலைய நின்ற திருத்தோள்களும் என் முன்னே தோன்றா நின்றனவே!; அவை அணைக்குமாறு கைக்கு எட்டாமையி னாலே கையுள் முகம் வைத்து நையவேண்டியதாயிற்று, என் செய்வேனென்று ளாயிற்று.

மைகோள் மாடம் = உள்ளுள்ள எம்பெருமானுடைய நிழலீட்டாலே கருமைபூண்ட மாடங்களை யுடையது திருக்குறுங்குடி. (அ)

முன்னின்றாயென்றுதோழிமார்களும் அன்னையரும்முனிதிர் *
மன்னுமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சென்னிநீண்முடியாதியாய உலப்பிலணிகலத்தன் *
கன்னல்பாலமுதாகிவந்து என்னெஞ்சம்கழியானே. (கூ)

முன் நின்றாய் என்று — '(சிறுக்கியான நீ) பலர் காணவந்து நிற்கின்றாய்' என்று என்னை நோக்கிச் சொல்லி
தோழிமார்களும் அன்னையரும் — தோழிமார்களும் தாய்மார்களுமான நீங்கள்
முனிதிர் — கண்டிக்கின்றீர்கள்;
மன்னு மாடத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
சென்னி — திருமுடியிலே
நீள் — நீண்டு தோன்றுகிற
முடி ஆதி ஆய — திருவபிஷேகம் முதலாக வுள்ள
உலப்பு இல் — எண்ணிறந்த
அணி கலத்தன் — சேர்த்தியழகு பொருந்திய திருவாபரணங்களை யுடைய அப்பெருமான்

கன்னல் பால் அமுது ஆகி வந்து — கன்னலும் பாலும் அமுதமும் போலே பரம போக்யனாய்வந்து
என் நெஞ்சம் கழியான் — எனது நெஞ்சை விட்டுப் போகின்றிலன்.

* * * [முன்னின்று யென்று.] மகளிர்க்கு நாணமே பெருஞ்செல்வமாதலால் ஒருவர் கண்ணிலும் புலப்படாமே மறைந்து நிற்கை முறைமையாயிருக்க, இப் பெண்பிள்ளை பலருங்காண முன்னிற்கையாவதென்? என்று தோழியரும் அன்னையரும் சீறுபாறென்றிருப்பது கண்ட தலைவியுரைக்கின்றாள்;

* செங்கமலக் கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில் தங்கிய பொன்வடமும் தாளநன் மாதுளையின் பூவொடு பொன் மணியும் மோதிரமுங் கிறியும் மங்கல வைம்படையும் தோள்வளையுங் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியுமென்னும்படியான திவ்யாபரணங்கள் திருக்குறுங்குடி நம்பியினுடையவை என்னெஞ்சைவிட்டு இறைப்பொழுதுமக லாமல் முன்னே தோன்றுநிற்க, நான் பின்னே நிற்பது எங்ஙனம்? நாண்மட மச்சமெல்லாம் பெயர்த்துபோம்படி அவை என்னெஞ்சை ஆக்கிரமித்த பின்பு நான் நாணங் காத்திருக்கவொண்ணுமோ வென்றாளாயிற்று. .... (௯)

கழியமிக்கதோர் காதலளிவளென்று அன்னைகாணகொடாள் *
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே *
எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழும் ஆர்க்குமறிவரிதே. (௧௦)

இவன் — 'இப் பெண்பிள்ளை
கழிய மிக்கது ஓர் காதலள் என்று — மிகவும் அதிசயித்த விலக்ஷணமான காதலை யுடையவள்' என்று சொல்லி
அன்னை — தாயானவள்
காண கொடாள் — நம்பியை ஸேவிக்க வொட்டுகிறதில்லை;
வழு இல் கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
தேவர் குழாங்கள் — நித்ய ஸூரிகளின் திரள்கள்
குழுமி — நெருங்கி
கை தொழ — ஸேவிக்கும்படி
சோதிவெள்ளத்தின் உள்ளே — தேஜஸ்ஸமூஹத்தினிடையிலே
எழுவது — எழுகின்ற
ஓர் உரு — விலக்ஷணமான விக்ரஹமானது
என் நெஞ்சுள் எழும் — எனது நெஞ்சுக்குள்ளே ப்ரகாசிக்கின்றது; (அது)
ஆர்க்கும் — எப்படிப்பட்டவர்கட்கும்
அறிவு அரிது — அறியமுடியாததேயாகும்.

* * * [கழியமிக்கதோர்.] 'லோகத்தில் அபிமத விஷயங்களைப் பிரிந்தால் நாட் செல்ல நாட்செல்ல ஸ்நேஹம் குறைந்து வருவதைக் காணுகின்றோம்; அப்படி யிருக்கவும் இப்பெண்பிள்ளை தான் கலந்து பிரிந்த விஷயத்தில் மேன்மேலும் காதல்மையல் ஏறுகின்றாள், ஆதலால் இனி இவள் ஒருகாலும் திருக்குறுங்குடி நம்பியை ஸேவிக்கவொண்ணாமே செய்துவிடவேணும்' என்று அன்னை சொல் லிக்கொண்டிருக்க, அதுகேட்ட தலைவி கூறுகின்றாள்;

உலகத்தாருடைய காதலின் நியாயமோ என்னிடத்தும் பார்ப்பது? லௌகிகர் ஈடுபடும் விஷயத்திலோ நான் ஈடுபட்டது; குறைவற்ற கீர்த்தியை யுடைய திருக்குறுங்குடி நம்பி பக்கலிலன்றோ நான் ஈடுபடப்பெற்றது. நித்ய ஸூரிகளினுடைய திரளானவை பெரு வெள்ளத்திலிழிவாரைப் போலே கை கோத்துக்கொண்டு இழியவேண்டும்படி தேஜோராசிமயமானதோர் திருவுருவம் என்னெஞ்சினுள்ளே திகழா நின்றது; * நித்ருஷ்டிர்யவஸாதிமம் மஹோ யோமி நாமேபி ஸுதுர்க்ரஹம் தியா:| ஸைந்யநாஸ்ரவசிரஸ்ஸு துர்க்ரஹம் = நித்ய மிந்த்ரியபதாதிகம் மஹோ யோகிநாமபி ஸுதுர்க்ரஹம் தியா:, அப்யநச்ரவ சிரஸ்ஸு துர்க்ரஹம் * என்னுமாபோலே அதுதான் பார்க்கும் நிலமல்லாதது; அன்னதோருரு என்னெஞ்சினுள்ளே எழாநிற்க, தாய்மார் காணக்கொடுத்தா லென்ன? காணக்கொடாவிடிலென்ன? என்றளாயிற்று. .... (௧0)

அறிவரியபிரானை ஆழியங்கையனையேயலற்றி *
நறியநன்மலர்நாடி நன்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
குறிகொளாயிரத்துள்ளிவைபத்தும் திருக்குறுங்குடியதன்மேல் *
அறியக்கற்றுவல்லார்வைட்ணவர் ஆழ்கடல்ஞாலத்துள்ளே.

| | |
|---|---|
| அறிவு அரிய பிரானை | ஒருவர்க்குமறியவொண்ணாத ஸ்வாமியாயும் |
| ஆழி அம் கையனையே | திருவாழியை அழகிய திருக்கையிலே உடையவனுயுமிருக்கிற எம்பெருமானையே |
| அலற்றி | வாய்வெருவி, |
| நறிய | பரிமளம் மிக்க |
| நல் மலர் நாடி | நல்ல பூக்களை நாடு பவரான |
| நன் குருகூர் சடகோபன் சொன்ன—; | |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் |
| திருக் குறுங் குடி அதன் மேல் | திருக்குறுங்குடி விஷயமாகப்பேசினதாய் |
| குறி கொள் | எம்பெருமானுடைய திவ்யாவயவ திவ்யாயுத திவ்யாபரணலாஞ்சனங் களை யுடையதான |
| இவைபத்தும் | இத்திருவாய்மொழியை |
| அறிய | பொருளும் தெரியும்படி |
| கற்று | ஓதி |
| வல்லார் | தேறினவர்கள் |
| ஆழ் கடல் ஞாலத்துள்ளே | ஆழ்ந்த கடல் சூழ்ந்த இந்நிலத்துள் |
| வைட்டணவர் | சிறந்த ஸ்ரீவைஷ்ணவர்களாகக்கொண்டாடப் படுவர்கள். |

* * * [அறிவரிய பிரானை.] கையுந் திருவாழியுமாயிருக்கிற தன்னுடைய அழகு ஒருவர்க்குமறியவொண்ணாதபடியிருக்கிற எம்பெருமானையே அலற்றித் திருக் குறுங்குடி நம்பி விஷயமாக ஆழ்வாரருளிச்செய்த இத்திருவாய்மொழியை அறியக் கற்றுவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவஸார்வபௌமர்களாய் வீறு பெறுவார் களென்று பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

நறிய நன்மலர்நாடி = ஆசார்யஹ்ருதயத்தில் "மூன்றாம் ப்ரகரணத்தில் "வ்யாகுலாபபூஜாபேக்ஷையற மலர்நாடி ஆட்செய்ய உய்யக்கொண்டு ஆரைக் கொண்டு வாழும் கில்லுங் கொண்டென்கிற இழவுகள் தீரப்பெற்றது" என்கிற

சூர்ணிகையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள், “* நறிய நன்மலர் நாடி என்கிறபடியே சேஷத்வபரிமளயுக்தமாய் ச்லாக்யமான ஆத்மபுஷ்பங்களைத்தேடி” என்று பொருளருளிச்செய்ததும், “ஸர்வவ்யாக்யானங்களிலும் ‘பரிமளத்தையுடைத்தாய் ச்லாக்யமான புஷ்பங்கள்போலே ஆராய்ந்து சொன்னவாயிரம்’ என்று ப்ரபந்த விசேஷணமாகச் சொல்லியிருக்கையால், இவர்க்கு நினைவு ஆத்மபுஷ்பங்களைத் தேடி யென்கிறவிது என்றுகொள்ளவேணும்” என்றருளிச்செய்ததும் இங்கு அறியத்தக்கன.

நாடி என்பதை வினையெச்சமாகவும் கொள்ளலாம்; இ விகுதிபெற்ற பெயராகவுங் கொள்ளலாம்.

குறிகொள் என்கிற அடைமொழி ஆயிரத்திற்குமாகலாம், இப்பத்துக்குமாகலாம்.

அறியக்கற்று வல்லார் வைட்டணவர் = ஏடு பார்த்துக் கற்கையன்றிக்கே ஆசார்யோச்சாரண அநுச்சாரணமுகேந அப்யஸிக்கையாகிய அத்யயநத்தைப் பண்ணி, உபதேசமுகத்தாலே அர்த்தஜ்ஞானம் பிறந்து அதற்கேற்றவாறு அனுஷ்டிக்கவும் வல்லாரானால் ஸ்ரீவைஷ்ணவத்வஸித்தி யுண்டாகுமென்றதாயிற்று.

இப்பத்துப் பாசுரங்களைக் கற்றதனாலேயே வைஷ்ணவத்வம் ஸித்தித்து விடமாட்டாதென்றும், திருவாய்மொழியாயிரமும் கற்றதனாலாகும் பலனை இப் பதிகத்திற்குமாத்திரம் கூறினது ஒருவகையான அதிசயோக்தியென்றும் திருவுள்ளம்பற்றிய அழகியமணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயத்திலே “சந்தங்களாயிரமும் அறியக்கற்று வல்லாரானால் வைஷ்ணவத்வ ஸித்தி” என்றருளிச்செய்தனர்.

“ஆழ்கடல் ஞாலத்துள்ளே—வைட்டணவர்” என்றவிடத்து நம்பிள்ளை யீடு;—“மருபூமியான ஸம்ஸாரத்திலிருக்கச்செய்தே நித்யஸூரிகளோடொக்கச் சொல்லலாம்படியாவர்கள் உகந்தருளின நிலங்களில் வாசியறியுமவர்கள்.”

ஐந்தாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

𑌶𑌙𑍍𑌖𑌾𑌦𑍍𑌯𑍈𑌰𑍍𑌯𑌜𑍍𑌞𑌸𑍂𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌪𑌿 𑌚 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌮𑍁𑌖𑍍𑌯𑍈𑌸𑍍𑌤𑍁𑌲𑌸𑍍𑌯𑌾
𑌬𑌿𑌮𑍍𑌬𑍌𑌷𑍍𑌠𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌸𑍁𑌨𑌾𑌸𑌾𑌵𑍍𑌰𑌤𑌤𑌿 𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍂𑌰𑍍𑌜𑌸𑍍𑌵𑌿𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌯𑌾 ।
𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌬𑍍𑌜𑌾𑌦𑍍𑌯𑍈𑌰𑌶𑍇𑌷𑌾𑌭𑌰𑌣𑌸𑍁𑌷𑌮𑌯𑌾 [illegible]
[illegible] 𑌵𑌿𑌷𑌯𑌤𑌯𑌾 𑌹𑌾𑌰𑌿 [illegible] ॥

* எங்ஙனேயோவென்கிற திருவாய்மொழியில், திருக்குறுங்குடிநம்பி, விச்லேஷஸமயத்திலும் அடியார்க்கு மறக்கவொண்ணாதபடி ப்ரகாசியாநிற்கிற படியை அருளிச்செய்தாரென்கிறது.

1. சங்காத்யை:. * சங்கினோடும் நேமியோடும். * திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்களாலும்.

2. யஜ்ஞஸூத்ராதிபிரபிச. * மின்னுநூலுங் குண்டலமும் * திருயஜ்ஞோபவீதம் முதலியவற்றாலும்.

3. சார்ங்கமுக்யை:. * வென்றி வில்லுந் தண்டும் வாளும் * சார்ங்க வில் முதலியவற்றாலும்.

4. துலஸ்யா. * பூந்தண்மாலைத் தண்டுழாயும் * திருத்துழாய் மாலையாலும்.

5. பிம்போஷ்டாத்யை:. * தொக்க சோதித் தொண்டைவாயும் * கொவ்வைக் கனிபோன்ற திருவதரம் முதலியவற்றாலும்.

6. ஸுநாஸாவ்ரததி = * கோலநீள் கொடிமூக்கும் * கொடிபோன்ற திருமூக்கு முதலியவற்றாலும்.

7. நிரவதிஜ்யோதிரூர்ஜஸ்வி மூர்த்யா. * நிறைந்த சோதி வெள்ளஞ் சூழ்ந்த நீண்ட பொன்மேனியொடும் * நிரவதிக தேஜோமயமாய் ஸ்ப்ருஹணீயமான திவ்யமங்கள விக்ரஹத்தாலும்.

8. நேத்ராப்ஜாத்யை:. * செய்யதாமரைக் கண்ணுமல்குலும் * செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண் முதலியவற்றாலும்.

9. அசேஷாபரணஸுஷமயா. * சென்னி நீண்முடியாதியாய வுலப்பிலணிகலத்தன் * திருவபிஷேகம் முதலான பல்பல திவ்யாபரணங்களின் காந்தியாலும்.

10. ஸ்வை: பக்தை: மநோஜ்ஞ:. * குழுமித் தேவர்குழாங்கள் கை தொழவிருந்தாதி. * நித்யஸூரிஸமூஹங்களாலும் தர்சநீயராய்க் கொண் டிருக்கிற,

தேவ:— திருக்குறுங்குடிநம்பி,

ஸ்வாநாம்— தம் அடியார்களுக்கு, அஜஸ்ரம் — இடைவிடாமல், ஸ்ம்ருதி விஷயதயா பாதி — மறக்கவொண்ணுமே உருவெளிப்பாட்டாலே நிகழ்கின்ருர், இதி அப்யதாயி — என்றருளிச் செய்யப்பட்டதென்கை. (*)

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

தாத்ருக் ஸௌஹார்த்த ஸேதுஸ் ஸ்திதி ஸரஸதயா
ஸத்யோ ஹர்ஷாஸ்ரவர்ஷவ்யவஹரணாதித்ருஷ்டா ।
ப்ராத்யக்ஷ்யஸ்யேவ ஹேதுஸ் த்ருதவாபி ததா
ஸீதாயாமா ஸ்திராஜ்ஞா வஹதி ஸ:॥

(கருத்து.) * எங்ஙனேயோ வென்கிற ஐந்தாவது திருவாய்மொழியில் ஆழ்வார் ஸந்தோஷத்தோடும் துக்கத்தோடும் கூடியிருந்தார். கீழ்த்திருவாய் மொழியில் சென்ற வியாமோஹம் தலைமடுத்தவாறே பாவநா ப்ரகர்ஷத் தாலே எம்பெருமானுடைய திவ்யாவயவங்களையும் திவ்யாபரணங்களையும் திவ் யாயுதங்களையும் உருவெளிப்பாட்டாலே காணப்பெற்றதனுல் ஸந்தோஷம்; நேர் கொடு நேரே அநுபவிக்கப் பெருமையினுலே துக்கம். ஆக, ப்ரீதியும் அப்ரீதி யும் கலந்த கலவியாய்ச் சென்றது என்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

எங்ஙனே நீர்முனிவ தென்னையினி நம்பியழகு
இங்ஙனே தோன்றுகின்ற தென்முன்னே—அங்ஙன்
உருவெளிப்பாடா வுரைத்த தமிழ்மாறன்
கருதுமவர்க் கின்பக் கடல்.

| | |
|---|---|
| நீர் | தோழியரும் தாய்மாருமான நீங்கள் |
| இனி என்னை எங்ஙனே முனிவது | இனி என்னைச் சீறலாகுமோ? |
| நம்பி அழகு | திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகானது |
| என் முன்னே | என் கண்ணெதிரில் |
| இங்ஙனே தோன்றுகின்றது அங்ஙன் | இதோ ப்ரத்யக்ஷமாய்த் தோற்றுகின்றதே!; என்று |

| | |
|---|---|
| உரு வெளிப்பாடு ஆ | உருவெளிப்பாடென்னும் பரிசிலே |
| உரைத்த | அருளிச் செய்த |
| தமிழ் மாறன் | த்ராவிட வேதப்ரவர்த்தகரான நம்மாழ்வார் |
| கருதுமவர்க்கு | தம்மைச் சிந்திப்பவர்களுக்கு |
| இன்பம் கடல் | ஆனந்த ஸாகரமாயிருப்பர். |

* * * திருக்குறுங்குடி நம்பியின் திவ்யாவயவஸௌந்தர்யம், திவ்யாபரண ஸௌந்தரியம், திவ்யாயுதஸௌந்தர்யம் ஆகிய அழகுகளிலே நெஞ்சுபறியுண்ட ஆழ்வார் அநவரதமும் அவற்றையே வாய்வெருவாநிற்க, அதுகண்ட தாய்மார் சீறி சிக்ஷிக்கப்புக, 'நான் நீங்கள் சிக்ஷிக்குமளவிலே நிற்கின்றேனில்லையே, உருவெளிப்பாட்டாலே நம்பியின் அழகு என் முன்னே வந்து தோன்றுகின்றதே!, இனி என்னை நீங்கள் பகவத்விஷயத்தில் நின்றும் மீட்கப்பார்ப்பது பயனற்றதேயாகும்' என்று அவர்களுக்குத் தெரிவித்தமை இத்திருவாய்மொழியின் ப்ரமேயம்.

இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு இன்பமும் துன்பமும் கலந்து உண்டாயிற்று. அப்படிப்பட்ட ஆழ்வாரைச் சிந்திப்பவர்களுக்கோவென்னில், ஒருநாளும் துன்பமுண்டாகப்ரஸக்தியில்லை, இன்பமேயாகும் என்றும் ஸூசிப்பித்தருளினாராயிற்று. .... .... .... (சரு.)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி—ஐந்தாம்பத்து

## ஆறாந் திருவாய்மொழி—கடல்ஞாலஞ் செய்தேனும்.

உரையவதாரிகை. பிரிந்து வருந்துங்காலத்திலே 'அநுகரித்துத் தரித்தல்' என்று ஒரு முறையுண்டு. அதாவது, எம்பெருமான்தானாகவே தன்னை யநுகரித்துப் பேசி இங்ஙனே பொழுது போக்காலே தரித்திருக்கையாம். திருவாய்ப்பாடியில் திருக்குரவை கோத்தவன்று ப்ரீதிரஸம் தலைமண்டை கொண்டு செல்ல, அது ஸாத்மிக்கைக்காகக் கண்ணபிரான் பிரிந்து தன்னை மறைத்திட, அப்போது திருவாய்ப்பாடியிற் பெண்களெல்லாரும் அநுகரித்துத் தரித்தார்களென்னுமிடம் ஸ்ரீ விஷ்ணுபுராணப்ரஸித்தம். அதில் (5—13—23) * கோப்யஶ்ச வ்ருந்தஶ꞉ க்ருஷ்ணசேஷ்டாஸ்வாயத்தமூர்த்தய꞉ ॥ அந்யதேஶம் கதே க்ருஷ்ணே சேருர்வ்ருந்தாவநாந்தரம் ॥ க்ருஷ்ணே நிருத்தஹ்ருதயா இதமூசு꞉ பரஸ்பரம் । க்ருஷ்ணோஹமேஷ லலிதம் வ்ரஜாம்யாலோக்யதாம் கதி꞉ ॥ அந்யா ப்ரவீதி க்ருஷ்ணஸ்ய மம கீதிர்நிஶம்யதாம் ॥ துஷ்டகாலிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா ॥ பாஹுமாஸ்போட்ய க்ருஷ்ணஸ்ய லீலாஸர்வஸ்வமாததே । அந்யா ப்ரவீதி போ கோபா꞉ நிஶ்ஶங்கை꞉ ஸ்தீயதாமிஹ । அலம் வ்ருஷ்டிபயேநாத்ர த்ருதோ கோவர்த்தநோ மயா ॥ தேநுகோயம் மயா க்ஷிப்த꞉ விசரந்து யதேச்சயா । காவோ ப்ரவீதி சைவாந்யா க்ருஷ்ணலீலாநுகாரிணீ ॥ என்றிவைமுதலான ச்லோகங்கள் காண்க. (இந்த ச்லோகங்களின் கருத்தாவது—) கண்ணபிரான் பிரிந்து சென்றகாலத்தில் கோபிகள் விருந்தாவனத்தில் திரள்திரளாகக் கூடி ஒருவர்க்கொருவர் இங்ஙனே பேசிக்கொண்டார்கள்; நான் கண்ணன், இதோ அழகாகநடைநடக்கிறேன் பார் என்றாள் ஒருத்தி; நான் கண்ணன், செவிக்கினிதாகக் குழலூதுகின்றேன் கேள் என்றாள் மற்றொருத்தி. நான் கண்ணன், கொடிய காளியநாகமே! நில் என்றாள் இன்னொருத்தி. தோளைத்தட்டிக் கொண்டு கண்ணபிரான் செய்யும் லீலைகளை யெல்லாஞ் செய்தாள் வேறொருத்தி. கோபாலர்களே! நீங்கள் மழைக்கு அஞ்சாதேநில்லுங்கள், இதோநான் கோவர்த்தனமென்னுங் கொற்றக் குடையைத் தூக்கிவிட்டேன் பாருங்களென்றாள் ஒருத்தி. தேனுகாசுரனை இதோ நான் மாய்த்துவிட்டேனாகையால் இனிமாடுகளெல்லாம் நிர்ப்பயமாக உலாவலாமென்றாள் ஒருத்தி — என்கை.

அங்ஙனே அநுகரித்துத் தரிக்கும் விதம் ஆண்டாள் பக்கலிலுங் கண்டு கொள்ளும். நோன்பு நோற்பதாகக் கொண்டு திருப்பாவை பாடியது ஆய்ச்சியர்களின் அனுட்டானத்தை அநுகரித்த படியத்தனையிறே. இத்தகைய அநுகார ப்ரகாரங்கள் உபநிஷத்துக்களிலும் காண்பனவாகும். ஆழ்வார்க்கும் அந்த அநுகார ப்ரகாரமே இத்திருவாய்மொழியில் செல்லாநின்றது. அதுதானும் தாய்பாசுரத்தாலே வெளிவருகின்றது.

பராங்குச நாயகியானவள் ஜ்ஞான முத்திரையுக்தாளுமாய் தோசார்யனைப் போலேயிருந்து கொண்டு "கடல்ஞாலஞ் செய்தேனும் யானே, கடல் ஞாலமாவேனும் யானே, மலை யெடுத்தேனும் யானே, இனத்தேவர் தலைவனும் யானே" என்றாற்போலே பாசுரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கக்கண்ட திருத்தாயார் 'இது என்ன நிலைமை!' என்று ஆராயத் தொடங்கினள்; 'எம்பெருமானைப் பிரிகையாலுண்டான ஆற்றாமையினாலே அநுகரித்துத் தரிக்கின்றாள்' என்று அறியமாட்டாதவளாய்க் கலங்கிக்கிடந்தாள்; அப்போது சில பந்துவர்க்கங்கள் அங்கேவந்து சேர்ந்து, இது என்னென்று வினவ, 'ஸர்வேச்வரன் இவள் பக்கலிலே ஆவேசித்தான் போலேயிருக்கிறது' என்று விடைகூறுகிறபடியாய் இத்திருவாய்மொழி செல்லுகின்றது. .... .... (*)

கடல்ஞாலம்செய்தேனும்யானேயென்னும்
கடல்ஞாலமாவேனும்யானேயென்னும் *
கடல்ஞாலம்கொண்டேனும்யானேயென்னும்
கடல்ஞாலம்கீண்டேனும்யானேயென்னும் *
கடல்ஞாலமுண்டேனும்யானேயென்னும்
கடல்ஞாலத்தீசன்வந்தேறக்கொலோ *
கடல்ஞாலத்தீர்க்கிவையென்சொல்லுகேன் ?
கடல்ஞாலத்தென்மகள்கற்கின்றவே. (க)

| | |
|---|---|
| கடல் ஞாலத்து என் மகள் | கடல் சூழ்ந்த வுலகத்திலுள்ளவளான எனது பெண்பிள்ளை |
| கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும் | கடல்சூழ்ந்த இவ்வுலகத்தைப்படைத்தவனும் நானேயென்கிறாள்; |
| கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும் | (படைக்கப்பட்ட) கடல்ஞாலத்திலே அநுப்ரவேசித்திருப்பவனும் நானேயென்கிறாள்; |
| கடல் ஞாலம் கொண்டேனும் யானே என்னும் | (மஹாபலியிடத்தில்) கடல்ஞாலத்தை இரந்து பெற்றுக் கொண்டவனும் நானே யென்கிறாள் |
| கடல் ஞாலம் கீண்டேனும் யானே என்னும் | (மஹாவராஹமாகி) கடல்ஞாலத்தை உத்தரித்தவனும் நானே யென்கிறாள்; |
| கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும் | (ப்ரளயத்தில்) கடல் ஞாலத்தை உள்ளே வைத்து நோக்கினவனும் நானே யென்கிறாள்; |
| கற்கின்ற இவை | (இப்பெண்பிள்ளை) இவ்வளவும் பேசுகிற இப்பேச்சுக்கள் |
| கடல் ஞாலத்து ஈசன் வந்து ஏற கொலோ | கடல்சூழ்ந்த மண்ணுலகுக்குத்தலைவனான பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ! |

கடல் ஞாலத்தீர்க்கு } இவ்வுலகிலுள்ள உங்களுக்கு | என் சொல்லுகேன் } என்னவென்று சொல்லுவேன்?

* * * [கடல் ஞாலம்.] கடல் சூழ்ந்த ஞாலம் முழுவதையும் படைத்தவன் பகவானேயாவன்; சாந்தோக்ய உபநிஷத்தில் * ஸதேவஸோம்ய! இதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம * என்று ஓதிக்கிடக்கிற விடத்தில் 'ஸதேவ' என்றும் 'ஏகமேவ' என்றும் 'அத்விதீயம்' என்றும் மூன்று வார்த்தைகள் இருப்பதனால் அம்மூன்றாலும் மூவகைக் காரணங்களும் எம்பெருமானேயென்கிறது என்று கொள்ளவேணும். வேறொரு உபாதாந வஸ்து இல்லாமல் தானே உபாதாந காரணபூதனாய், வேறொரு ஸஹகாரிகாரணமில்லாமல் அதுவும் தானேயாய், வேறொரு நிமித்தகாரணமில்லாமல் அதுவும் தானேயாயிருப்பவன் என்பதையே அந்த உபநிஷத் வாக்கியம் தெரிவிக்கும். இங்கு யானே என்கிற ஏகாரத்தினால் அவ்வர்த்தமே தெரிவிக்கப்பட்டதாகும். மூவகைக் காரணமுமாயிருந்துகொண்டு ப்ரபஞ்சஸ்ருஷ்டியைப் பண்ணினது நானே யென்கிறான்

கடல் ஞாலமாவேனும் யானே = உலகத்தில் ஒருவன் ஒரு வஸ்துவைப் படைத்தால் படைத்தவனுடைய பெயர் வேறாய், படைக்கப்பட்ட பொருளின் பெயர் வேறாயிருக்கக் காண்கிறோம். எம்பெருமானளவில் வந்தால் அப்படியன்று; படைக்கப்பட்ட ஒவ்வொரு வஸ்துவிலும் தான் அநுப்ரவேசித்தே நாமரூபங்களை உண்டாக்கியிருப்பதனால் அவ்வோவஸ்துக்களைச்சொல்லும் சொற்கள் தன்னளவும் வந்து வலிக்கும்படி அவையாய் நிற்பவனும் தானேயாதலால் கடல் ஞாலமாவானும் எம்பெருமானேயாவன். வேதாந்திகள் அபர்யவஸாந வ்ருத்தியென்பர்; அது இங்கு அறியத்தக்கது. இப்படிக் கடல் சூழ்ந்த வுலகஸ்வரூபியாயிருப்பதும் நானே யென்கிறான்.

கடல் ஞாலம் கொண்டேனும் யானே = * தன்னுருவமாரு மறியாமல் தானங்கோர் மன்னுங் குறளுருவின் மாணியாய் மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து, போர்வேந்தர் மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி என்னுடைய பாதத்தால் யானளப்பமூவடிமண் மன்னா! தருகென்று வாய்திறப்ப, மற்றவனும் என்னால் தரப்பட்ட தென்றலுமே, அத்துணைக்கண் மின்னார் மணிமுடிபோய் விண்தடவ, மேலெடுத்த பொன்னார் கனைகழற்காலேழுலகும் போய்க்கடந்து அங்கொன்றுவசுரர் துளங்கச் செலநீட்டி மன்னிவ்வகலிடத்தை மாவலியை வஞ்சித்துத் தன்னுலகமாக்குவித்த தாளாளன் நானே யென்கிறான்.

கடல் ஞாலங்கீண்டேனும் யானே = பூமிக்குச் சூழ்கமாகவைத்த கடல்தானே இத்தையழிக்க அண்டத்தின் மூகட்டிலே அழுந்தின விதனை மஹாவராஹமாகி இடந்தெடுத்துக் கொண்டுவந்ததும் நானே யென்கிறான்.

கடல் ஞாலமுண்டேனும் யானே= சிலர் இருக்கச் சிலர் அழிகையன்றிக்கே ஸ்ருஷ்டிகர்த்தாக்களோடு ஸம்ஹாரகர்த்தாக்களோடுவாசியற எல்லாரையும் பிரளயம் கொள்ளப்புகுந்த போது, * மண்ணும் விண்ணும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம், உண்ணுதபெரு வெள்ளம் உண்ணுமல் தான்விழுங்கியுய்யக் கொண்ட * என்கிறபடியே வயிற்றிலேவைத்து ரக்ஷித்ததும் நானே யெங்கிறுள்.

என்வயிற்றிலேபிறந்த இப்பெண்பிள்ளை இங்ஙனே பேசுவது பொருத்தமற்றதாயிராநின்றது; விசிஷ்டாத்வைதஸம்ப்ரதாயத்திலே தலைநிற்குமிவள் அத்வைதம் பேசுகிறுளாக வொண்ணுது; பின்னை எதனுலே இங்ஙனே பேசுகிறுளென்று பார்க்குமிடத்து, எம்பெருமான் தானே இவளிடத்து ஆவேசித்தானுகவேணுமென்று தோன்றுகிறதென்று சொல்லுபவளாய் "கடல்ஞாலத்ீசன்வந்து ஏறக்கொலோ" என்கிறுள் தாய்.

வினவவந்தவர்கள், இங்ஙனம் சொன்ன திருத்தாயை நோக்கி 'அம்மா! உன்னைக்கேட்டுத் தெளிந்து கொள்ளவந்தோம்; உனக்கும் ஒரு நிச்சயவுணர்ச்சி இல்லைபோல் காண்கிறதே, நாங்கள் தெளியும்படி ஆராய்ந்து சொல்லலாகாதோ?' என்ன; "கடல் ஞாலத்தீர்க்கு இவை யென் சொல்லுகேன் கடல் ஞாலத்தென் மகள் கற்கின்றவே" என்கிறுள். ஸம்ஸாரத்திலேயிருந்து வைத்து நித்யஸூரிகள் யாத்திரையாய்ச்செல்லுகிற என்மகள்படியை, நித்யஸம்ஸாரிகளாய் பகவத்விஷயம் கனக்கண்டறியாத உங்களுக்கு என் சொல்லுவது! என்றவாறு. (க)

கற்கும்கல்விக்கெல்லையிலனேயென்னும்
கற்கும்கல்வியாவேனும்யானேயென்னும் *
கற்கும்கல்விசெய்வேனும்யானேயென்னும்
கற்கும்கல்விதீர்ப்பேனும்யானேயென்னும் *
கற்கும்கல்விச்சாரமும்யானேயென்னும்
கற்கும்கல்விநாதன்வந்தேறக்கொலோ? *
கற்கும்கல்வியீர்க்கிவையென்சொல்லுகேன்
கற்கும்கல்வியென்மகள்காண்கின்றவே. (உ)

கற்கும் கல்வி என் மகள் } இன்று வார்த்தை கற்கும் பருவமாயிருக்கின்ற எனது பெண்பிள்ளை,

கற்கும்கல்விக்கு எல்லை இலன் என்னும் } நான் எல்லை யில்லாதபடி கல்விகள் கற்றிருக்கின்றேனென்கிறுள்;

கற்கும் கல்வி ஆவேனும் யானே என்னும் } கற்கப்படுகிற கல்விகளெல்லாம் நானேயென்கிறுள்;

கற்கும் கல்வி செய்வேனும் யானே என்னும் } கற்கப்படுகிற கல்விகளை நானே உண்டாக்கினேனென்கிறுள்

கற்கும் கல்வி தீர்ப்பேனும் யானே என்னும் } கற்கப்படுகிற கல்விகளை (ஸம்ஹாரகாலத்தில்) முடித்து நானே என்னெஞ்சிலிட்டு வைத்துக் கொண்டிருக்கிறேனென்கிறுள்;

| | | | | |
|---|---|---|---|---|
| கற்கும் கல்வி சாரமும் யானே என்னும் | கற்கும் கல்விகளின் ஸாரமாகிய திருமந்திரம் முதலியனவும் நானே யென்கிறாள்; | | கற்கும் கல்வி நாதன் வந்து ஏற கொலோ | கற்கும் கல்விகளால் ப்ரதிபாதிக்கப்படுகிற எம்பெருமான் வந்து? ஆவேசித்தனனோ) (அறியேன். |
| காண்கின்ற இவை | (இங்ஙனமாக இப்பெண் பிள்ளையிடத்தில்) காணப் படுகின்ற இந்த வாசகங்களானவை | | கற்கும் கல்வி யீர்க்கு | இனிக்கற்க வேண்டும் கல்விகளையுடையீரான உங்களுக்கு |
| | | | என் சொல்லு கேன் | ஏனென்று சொல்லுவேன்?. |

* * * [கற்குங் கல்விக்கு.] கண்ணபிரான் ஸாந்தீபினி பக்கலிலே அறுபத்தி னன்கு நாளில் எல்லையிலாத நூல்களையெல்லாம் அதிகரித்தனனாதலால் அதைச் சொல்கிறதாகக் கொள்ளலாம். * யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ * என்கிறபடியே வேதங்களுக்கும் நிலமல்லாதபடி நின்றமையைச் சொல்கிறதாகவுமாம்.

[கற்குங்கல்வியாவேனும்.] ஸகலவேதஸ்வரூபியாகவே எம்பெருமானுள னாதல் அறிக. [கற்குங்கல்வி செய்வேனும்.] அந்தந்த காலங்களிலே அந்தந்த வித்யைகளை ப்ரவசகம் செய்பவனும் எம்பெருமானே. [கற்குங்கல்வி தீர்ப்பே னும்] தீர்க்கையாவது நிர்மாணிக்கை; உண்மையான அர்த்தங்களை நிர்ண யிக்கை. ஸகலசாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் பண்ணுகிற ஆசார்யர்களும் ஸர்வேச் வரனேயாவன். ஸம்ஹாரகாலத்திலே ஸகலசாஸ்த்ரங்களையும் தன்னுடைய திருவுள்ளத்திலே இட்டுவைத்துக்கொண்டிருக்கும்படியைச் சொன்னதாகவுமாம்.

[கற்குங் கல்விச்சாரமும்.] பரக்க எத்தனை கல்விகள் கற்றாலும் அதற்கு ஸாரமான பலன் எம்பெருமானை யறிவதேயாதலால் கற்குங் கல்விச்சாரம் எம் பெருமானேயாகத்தட்டில்லை. இனி, கற்குற் கல்விச்சாரமென்று திருவஷ்டா க்ஷரமஹாமந்த்ரத்தைச் சொல்கிறது; அந்த மந்த்ரஸ்வரூபியாயிருப்பவன் எம் பெருமான் என்றதாகவுமாம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் நானே என்று பராங்குசநாயகி சொல்லுகிறவிது, [கற்குங் கல்வி நாதன் வந்து ஏறக் கோலோ] ஸகலவித்யா வேத்யனான ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்தனனோ!.

காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னும்
காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னும் *
காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னும்
காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னும் *
காண்கின்றகடலெல்லாம்யானேயென்னும்
காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ ? *
காண்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
காண்கின்றவென்காரிகைசெய்கின்றவே. (ரு)

| | |
|---|---|
| காண்கின்ற என் காரிகை | பகவத்விஷயத்தை உள்ளபடி கண்டுபேசுகிற என்மகள் |
| காண்கின்ற நிலம் எல்லாம் யானேயென்னும் | காணப்படுகிற பூமியெல்லாம் நானேயென்கிறாள்; |
| காண்கின்ற விசும்பு எல்லாம் யானே என்னும் | காணப்படுகிற ஆகாசமெல்லாம் யானே யென்கிறாள்; |
| காண்கின்ற வெம் தீ எல்லாம் யானே என்னும் | காணப்படுகின்ற தேஜ: புஞ்சமும் யானே யென்கிறாள்; |
| காண்கின்ற இ காற்று எல்லாம் யானே என்னும் | காணப்படுகின்ற வாயுக்களும் யானே யென்கிறாள்: |
| காண்கின்ற கடல் எல்லாம் யானேயென்னும் | காணப்படுகின்ற ஜலதத்துவமெல்லாம் யானே யென்கிறாள்; (இப்படி இவள் சொல்லுவதானது) |
| காண்கின்ற கடல்வண்ணன் ஏறகொலோ | அழகிய கடல்போன்ற வடிவையுடைய எம்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ? |
| செய்கின்ற | (இப்பெண் பிள்ளை) செய்கிறவைகளை |
| காண்கின்ற உலகத்தீர்க்கு | இவ்வுலகமல்லது மற்றொன்றை காணாதவுங்களுக்கு |
| என் சொல்லுகேன் | என்னவென்று எடுத்துக் கூறுவேன்? |

* * * [காண்கின்ற நிலம்.] காணக்காண எல்லை காணவொண்ணாதபடியிருக்கின்ற பூமியெல்லாம் எம்பெருமானிட்ட வழக்காதலாலும், மற்றும் ஆகாசம் தேஜஸ்ஸு வாயு அப்பு என்கிற பூதங்களும் எம்பெருமானிட்ட வழக்காதலாலும் இத்தன்மையை யெடுத்துக்கூறி அப்படிப்பட்ட எம்பெருமான் நானே யென்கிறாள் பராங்குசநாயகி. இது கடல் வண்ணனான ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்ததனால் போலும்.

[காண்கின்ற வுலகத்தீர்க்கு.] "நீங்களும் என்னோடொக்கக் காணாநின்றீர்களாகில் உங்களுக்கு நான் என்ன பாசுரமிட்டுச் சொல்லுவது? உங்களோடு என்னோடு வாசியுண்டோ சொல்லவொண்ணாமைக்கு?" என்பது நம்பிள்ளையீடு. "லோகமொழிய அறியாத உங்களுக்கு என்னென்பதாகச் சொல்லுவேன்" என்பது பன்னீராயிரவுரை.

[காண்கின்ற என் காரிகை.] பிறரால் காணமுடியாததையும் காண்பவளாயிற்று ஆழ்வார். ✓"என்னாதனகளொண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப" என்றவிடத்து ஈடு ஸேவிக்க. .... .... (௫)

செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னும்
செய்வானின்றனகளும்யானேயென்னும் *
செய்துமுன்னிறந்தவும்யானேயென்னும்
செய்கைப்பயனுண்பேனும்யானேயென்னும் *
செய்வார்களைச்செய்வேனும்யானேயென்னும்
செய்யகமலக்கண்ணனேறக்கொலோ? *
செய்யவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
செய்யகனிவாயிளமான்திறத்தே. (௬)

(இப்பெண்பிள்ளையானவள்)

செய்கின்ற கிதி எல்லாம் யானே என்னும் } நிகழ்காலச் செய்கைகளெல்லாம் யானேயென்கிறாள்;

செய்வான் நின்றனகளும் யானே என்னும் } எதிர்காலச் செய்கைகளெல்லாம் யானே யென்கிறாள்;

செய்து முன் இறந்தவும் யானே என்னும் } இறந்தகாலச் செய்கைகளெல்லாமும் யானேயென்கிறாள்;

செய்கை பயன் உண்பேனும் யானே என்னும் } செய்கைகளின் பலன்களையனுபவிப்பதும் யானே யென்கிறாள்;

செய்வார்களை செய்வேனும் யானே என்னும் } செய்கைகளைச் செய்கின்ற கர்த்தாக்களைப் படைப்பதும் யானே யென்கிறாள்;

(இவள் இப்படி யெல்லாம் சொல்லுவது)

செய்ய கமலம் கண்ணன் ஏறகொலோ } செந்தாமரைக் கண்ணனான எம்பெருமான் ஆவேசித்ததனாலோ?

செய்ய கனி வாய் இள மான் திறத்து } சிவந்தகனி போன்ற அதரத்தையுடையளாய் இளமான் போன்றவளான இவள் விஷயத்தில்

செய்ய உலகத்தீர்க்கு } கபடமறியாத வுங்களுக்கு

இவை என் சொல்லுகேன்?

* * * [செய்கின்ற கிதி.] நிகழ்காலம் எதிர்காலம் இறந்தகாலம் என்று காலம் மூவகைப்படும். இம்மூன்று காலங்களிலும் பலபல காரியங்கள் நடந்திருக்கின்றன, நடந்துகொண்டிருக்கின்றன, நடக்கப்போகின்றன; அவையெல்லாம் எம்பெருமானிட்ட வழக்கேயாதலால் அது சொல்லப்பட்டது.

[செய்கைப் பயனுண்பேனும் யானே.] * ஸஹம் ஹி ஸவ்யஜ்ஞாநாம் ஹொக்தா — அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா * என்று கீதையிலருளிச் செய்தபடியே அந்தந்த கருமங்களாகிற பலனை புஜிப்பவன் [அதாவது, அந்தந்த கருமங்களினால் ஆராதிக்கப்படுகிறவன்] எம்பெருமானே.

"செய்கைப்பயன்" என்பதை ஒரு சொல்வடிவமாகக் கொள்ளாமல், செய்கையும், பயனுண்பேனும் என்று பிரித்துக் கூறுதலுமுண்டு; ஈடு;— "அன்றிக்கே, செய்கையாகிற க்ரியையும் ஸஹொக்தாவும் நானிட்ட வழக்கு என்னுகின்றாள்."

[செய்வார்களைச் செய்வேனும் யானே.] அந்தந்த க்ரியைகளை அனுட்டிக்கின்ற கர்த்தாக்களைப் படைப்பவனும் எம்பெருமானே. இப்படிப்பட்ட எம்பெருமான் நானே யென்று இவள் சொல்லுவது [செய்ய கமலக்கண்ணனேறக்கொலோ] செந்தாமரைக் கண்ணனான ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்ததனாலோ?

[செய்யவுலகத்தீர்க்கு இவை என் சொல்லுகேன்.] ஐயோ! நீங்கள் கள்ளங் கவடு அறியாதவர்களாயிருக்கின்றீர்களே! விஷயப்ராவண்யமடியாக வந்த நோய் எப்படி வெளியிட்டுச் சொல்லத் தகாததோ, அப்படியே பகவத்விஷய

ப்ராவண்யமடியாக வந்த நோயும் வெளியிட்டுச் சொல்லத்தகாதது என்னுமிடம் நீங்கள் அறியவேண்டாவோ? சொல்லலாம், ஆகாது என்று அறியாமே சொல்லு சொல்லென்று அலைக்கிறீர்களே!. [செய்ய] கபடமறியாமல் ருஜுவான என்றபடி. .... .... .... .... (ச)

திறம்பாமல்மண்காக்கின்றேன்யானேயென்னும்
திறம்பாமல்மலையெடுத்தேனேயென்னும் *
திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னும்
திறம்காட்டியன்றைவரைக்காத்தேனேயென்னும் *
திறம்பாமல்கடல்கடைந்தேனேயென்னும்
திறம்பாதகடல்வண்ணனேறக்கொலோ? *
திறம்பாதவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்?
திறம்பாதென் திருமகளெய்தினவே. (ரு)

| | |
|---|---|
| என் திரு மகள் | என் செல்வமகளான பராங்குசநாயகி, |
| திறம்பாமல் மண் காக்கின்றேன் யானே என்னும் | நீதிதவறாமல் இவ்வுலகத்தை நானே காக்கின்றேனென்கிறாள்; |
| திறம்பாமல் மலை எடுத்தேனே என்னும் | சலியாதபடி கோவர்த்தன மலையை நானேயெடுத்தேனென்கிறாள்; |
| திறம்பாமல் அசுரரை கொன்றேனே என்னும் | தப்பாதபடி (தேனுகன் முதலிய) அசுரர்களை நானே கொன்றிட்டேனென்கிறாள்; |
| அன்று | அக்காலத்தில் |
| ஐவரை | பஞ்ச பாண்டவர்களை |
| திறம் காட்டி காத்தேனே என்னும் | உபாயங்கள் காட்டி நானே ரக்ஷித்தேனென்கிறாள்; |
| திறம்பாமல் | அபாயமொன்றுமின்றிக்கே |
| கடல் கடைந்தேனே என்னும் | நானே கடல் கடைந்தேனென்கிறாள்; |
| | (இப்படி இவள் சொல்லுவதானது) |
| திறம்பாத கடல் வண்ணன் ஏற கொலோ | அடியாரை நோக்குவதில் சலியாதவனும் கடல்வண்ணனுமான எம்பெருமான் ஆவேசித்ததனாலோ? |
| திறம்பாத உலகத்தீர்க்கு | இச்செய்தியை அவசியம் அறிந்தேதீரவேணுமென்று ஸ்திரமாயிருக்கிற உலகத்தீர்களான உங்களுக்கு |
| | (இப்பெண் பிள்ளை) |
| திறம்பாது எய்தின | ஒழிதல்சொல்லி மீட்கவொண்ணாதபடி அடைந்திருக்கிற தன்மைகளைப் பற்றி |
| என் சொல்லுகேன் | என்னவென்று சொல்லுவேன்? |

* * * [திறம்பாமல்.] கெடுதலொன்றும் வாராதபடி இவ்வுலகத்தைக் காப்பவன் எம்பெருமானே; இந்திரன் பண்டு பசிக்கோபத்தினால் ஏழு நாள் இடைவிடாது மழை பெய்வித்தபோது "கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமு மழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில" என்னும்படியே அநாயாஸமாகக் கோவர்த்தனமலையைக் கொற்றக்குடையாகத் தாங்கி நின்றவனும் எம்பெருமானே. தேவாசுரயுத்தம் நடைபெறும்போதெல்லாம் அசுரர்களை மாய்ப்

பவனும் எம்பெருமானே; * க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:—க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச் ச பாண்டவா: * என்னும்படி பஞ்சபாண்டவர்களை ரக்ஷித்தருளினவனும் எம்பெருமானே; * மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ் சாறுகொண்ட சுந்தரத் தோளுடையானும் எம்பெருமானே; உண்மை இங்ஙனமிருக்க, அக்காரியங்களெல்லாம் நானே செய்தேனென்கிறாள் இப்பராங்குச நாயகி; இங்ஙனேசொல்லுவது கடல் வண்ணன் வந்து இவளிடத்து ஆவேசித்ததனாலே போலும். 'கேட்டல்லது கால் வாங்கோம்' என்றிருக்கிற உங்களுக்கு நான் எத்தைச் சொல்லுவது?

" ஆழங்காலிலே விழுந்தார்படியைக் கரையிலே நின்றாராலே சொல்லப் போமோ?" என்பது நம்பிள்ளையீடு. ... ... (எ)

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும்
இனவேறுகள்செற்றேனும்யானேயென்னும் *
இனவான்கன்றுமேய்த்தேனும்யானேயென்னும்
இனவாநிரைக்காத்தேனும்யானேயென்னும் *
இனவாயர்தலைவனும்யானேயென்னும்
இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ? *
இனவேற்கண்நல்லீர்க்கிவையென்சொல்லுகேன்?
இனவேற்கண்ணியென்மகளுற்றனவே. (அ)

| | |
|---|---|
| இனம் வேல் கண்ணி என் மகள் | வேற்படையை யொத்திருக்கிற கண்ணழகையுடையளான என்மகள், |
| இனம் வேய் மலை ஏந்தினேன் யானே என்னும் | திரள் திரளான மூங்கில்களையுடைய கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்தேன் யானே யென்கிறாள்; |
| இனம் ஏறுகள் செற்றேனும் யானே என்னும் | கூட்டமாகவந்த எருதுகளைக் கொன்றேனும் யானே யென்கிறாள்; |
| இனம் ஆன் கன்று மேய்த்தேனும் யானே என்னும் | கூட்டங்கூட்டமான கன்றுகளை மேய்த்தனும் நானே யென்கிறாள்; |
| இனம் ஆநிரை காத்தேனும் யானே என்னும் | திரளான பசுக்கூட்டங்களை ரக்ஷித்தேனும் நானே யென்கிறாள்; |
| இனம் ஆயர் தலைவனும் யானே என்னும் | இடையர் கூட்டங்களுக்குத் தலைவனான கோபாலகிருஷ்ணனும் நானே யென்கிறாள்; |
| | (இப்படி இவள் சொல்லுவதானது) |
| இனம் தேவர் தலைவன் வந்து ஏற கொலோ | நித்யஸூரிகள் கூட்டங்களுக்குத் தலைவனான ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்ததனாலோ? |
| உற்றன இவை | இவள் அடைந்த இந்த வைகாரங்களை |
| இனம் வேல் கண் நல்லீர்க்கு | வேல்போன்ற கண்ணழகையுடையீரான உங்களுக்கு |
| என் சொல்லுகேன் | ஏதென்று சொல்லுவேன்? |

* * * [இனவேய்மலை.] "திறம்பாமல் மலையெடுத்தேனே யென்றும்" என்ற கீழ்ப்பாட்டிலும் கோவர்த்தநோத்தரணம் செய்தது நானே யென்று சொல்லி யிருக்கச்செய்தேயும், மீண்டும் "இனவேய்மலை யேந்தினேன் யானே" என்கிற விது என்னென்னில்; புநருக்தி முதலிய தோஷங்களைச் சங்கிக்க நிலமோ இது? * அத்யந்த பக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம: * என்று நால்வரம்பின்றியே பரிமாறும் முறைமை செல்லாநிற்க இங்ஙனே சங்கிக்க இடமில்லைகிடீர்.

இனவேறுகள் சேற்றேனும் யானே = நீளாதேவியின் அம்சமாகப் பிறந்தனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டுவந்த நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவருக்கும் அடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனனென்பது புராணப் பிரசித்தம். இந்தச் செயலைச் செய்தது நானே யென்கிறாள் இப்பராங்குச நாயகி.

இனவான் கன்று மேய்த்தேனும் யானே = திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (2-5-3) "கன்று மேய்த்து விளையாட வல்லானை" என்றார்; இங்கே 'விளையாட வல்லான்' என்ற சொற்போக்கு மிகவும் குறிக்கொள்ளத்தக்கது; 'யானை கொல்லவல்லான்' 'சிங்கம் கொல்ல வல்லான்' என்றால் ஏற்கும்; இங்ஙனே "விளையாடவல்லான்" என்னலாமோ? விளையாட்டுக்கும் ஒரு வல்லமை வேண்டுமோ? என்று சங்கை தோன்றும்; அதற்குப் பரிஹாரமாக ஆழ்வார் தாமே அடுத்தபடியாக அருளிச்செய்கிறார்—"வரைமீகானில் தடம்பருகு கருமுகிலை" என்று. இவ்விடத்திற்கு பட்டர் அருளிச்செய்யும் விசேஷார்த்தமாவது — மலைமேல் காட்டிலேயுண்டான தடாகங்களில் கன்றுகள் தண்ணீர் குடிக்கப் புகுந்தால் இளங்கன்றுகளாகையாலே நீரிலே முன்னேயிறங்கிக் குடிக்க இறாய்க்குமாம்; அக்கன்றுகட்கு நீருண்ணும் விதத்தைப் பழக்குவிப்பதற்காகக் கண்ணபிரான் தான் தன் முதுகிலே கையைக் கட்டிக் கவிழ்ந்து நின்று தண்ணீரமுது செய்து காட்டுவனாம்; அதைச் சொல்லுகிறது "வரைமீகானில் தடம் பருகு" என்று. இப்படிப்பட்ட வல்லமையை நினைத்து "கன்றுமேய்த்து விளையாட வல்லானை" என்றார் திருமங்கையாழ்வார். அங்ஙனே விளையாடினது நானென்கிறாள் இப்பெண்பிள்ளை.

இனவாநிரை காத்தேனும் யானே = ப்ரஹ்மசர்யாச்ரமதர்மங்களை அனுட்டித்திருந்து பின்பு க்ருஹஸ்தாச்ரம தர்மங்களை யனுட்டிப்பாரைப்போலே இளமையிலே கன்றுகளை மேய்த்துப் பருவம் நிரம்பின பின்பு பசுக்களை மேய்த்ததும் நானே யென்கிறாள்.

இனவாயர் தலைவனும் யானே = ஆயர்களுக்குள்ளே கண்ணபிரான் தான் தலைவனாயிருக்கையாவது என்னென்னில்; * தன்னேராயிரம் பிள்ளைகளென்கிற

படியே தன்னேடொத்த பருவத்துப் பிள்ளைகளும் தானுமாய்த் தீம்புசெய்து திரியுமிடத்தில் தீம்பில் தானே தலைமைபெற்றிருப்பதாகும். அத்தகைய தீம்புகள் செய்ததும் நானே யென்கிறுள். இப்படியிவள் சொல்லுவது நித்யஸூரிநாதன் வந்து ஆவேசித்ததனுலே போலும். ... ... (சு)

உற்றார்களெனக்கில்லையாருமென்னும்
உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும் *
உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும்
உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும் *
உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும்
உற்றாரிலிமாயன்வந்தேறக்கொலோ? *
உற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யான் ?
உற்றென்னுடைப்பேதையுரைக்கின்றவே. (எ)

- **என்னுடை பேதை** — என்னுடைய சிறு பெண்பிள்ளை
- **எனக்கு உற்றார்கள் ஆரும் இல்லை என்னும்** — எனக்கு உறவினர் ஒருவருமில்லை யென்கிறுள்;
- **இங்கு எனக்கு உற்றார்கள் எல்லாரும் என்னும்** — இவ்வுலகில் எனக்கு யாவரும் உறவினர் என்கிறுள்;
- **உற்றார்களை செய்வேனும் யானே என்னும்** — (சிலரை) எனக்கு உற்றார்களாம்படி செய்வதும் நானே யென்கிறுள்;
- **உற்றார்களை அழிப்பேனும் யானே என்னும்** — (அற்பபலன்களுக்காகப்) பிட்டுமவர்களை (அந்த அற்பபலன்களைக் கொடுத்து அகற்றுவதும் நானே யென்கிறுள்;
- **உற்றார்களுக்கு உற்றேனும் யானே என்னும்** — அநந்யப்ரயோஜநர்களாய்ப் பிட்டுமவர்களுக்கு எல்லாவுறவு முறையும் நானே யென்கிறுள்; (இவள் இப்படிச் சொல்லுவதானது)
- **உற்றார் இலி மாயன் வந்து ஏற கொலோ** — தம்முடைத்தியால் தன்னைப் பிட்டினரில்லாத ஆச்சர்ய சக்தி யுக்தனை எம்பெருமான் வந்து ஆவேசித்ததனுலோ?
- **உற்று உரைக்கின்ற** — உள்ளூறக்கண்டு சொல்லும் வார்த்தைகளை
- **உற்றீர்கட்கு** — உறவினரானவுங்களுக்கு
- **யான் என் சொல்லி சொல்லுகேன்** — நான் என்ன பாசுரத்தை யிட்டுச் சொல்லுவேன்?.

* * * [உற்றார்கள்.] உற்றார்களெனக்கில்லையாரும் = இதற்குப் பலபடியாகப் பொருள் கூறலாம்; 'உற்றார்களெனக்கில்லை' என்றது 'பகைவர்களுமெனக்கில்லை' என்றதற்கும் உபலக்ஷணமாகி, * [illegible] —ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய: * என்று கீதையிலருளிச்செய்தபடியே ஸர்வஸமாதாரணன் எம்பெருமான் என்றபடி. அன்றியே, என்னேடுண்டான ஸம்பந்தமறிந்து என்பக்கல் நேசிப்பார் ஆருமில்லை என்றதாகவுமாம். பலரும் தேவதாந்தர பஜனம்பண்ணித் தொலைகின்றார்களே யல்லது என்னளவில் வருவார் ஆருமில்லையென்றபடி.

உற்றார்கள் எனக்கு இங்கெல்லாரும் = கீழே உற்றார்களில்லை யென்றது அவர்கள் கருத்தாலே; இது எம்பெருமான்றன் கருத்தாலே சொல்லுகிறது. 'இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்" என்றும், "கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று ஸத்தையை நோக்கி உடன்கேடனாய்" என்றும் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்தபடியே எம்பெருமான் எல்லாரையும் உற்றார்களாகவே நினைத்துக் காரியஞ் செய்கிறபடி. அன்றியே, எம்பெருமானைவிட்டுத் தேவதாந்தர பஜனம்பண்ணுமவர்களும் * 𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌽𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃। 𑌤𑍇𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 = யேப்யந்யதேவதாபக்தா: யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதி பூர்வகம். * என்று கீதையிலருளிச்செய்தபடி எம்பெருமானையே பஜித்தார்களாகத் தேறுகிறபடியால் அதுதன்னைச் சொல்லுகிறதாகவுமாம்.

உற்றார்களைச் செய்வேனும் யானே = விமுகராய்ப் போருமவர்களையும் வடிவழகு முதலியவற்றைக்காட்டி மடிமாங்காயிட்டுப் பிடித்திழுத்துத் தன் பக்கலிலே அபிமுகர்களாம்படி பண்ணுமவனிறே யெம்பெருமான்.

உற்றார்களையழிப்பேனும் = சிலர்க்கு ருசிக்குத் தக்கவாறு க்ஷுத்ர ப்ரயோஜனங்களைத் தந்து தன் பக்கலில் நின்றும் அகற்றுமவன் எம்பெருமான். ஆண்டான் ஸ்ரீபாதத்தில் ஆச்ரயித்திருந்த இளையபெருமாளென்பவர் ஆண்டான் பணித்ததாகக் கூறும்பொருள் ஒன்றுண்டாம்; அதாவது— உற்றார்களையழிக்கையாவது ஸௌந்தர்யம் முதலானவற்றிலே யீடுபடுத்தி * நினைந்து நைந்துள் கரைந்துருகி * என்னுமாபோலே அழிந்தார்களாகச் செய்தல் என்று.

உற்றார்களுக்கு உற்றேனும் யானே = என்னையே எல்லாவுறவு முறையுமாகப்பற்றினார் உண்டாகில் நானும் அவர்களையே எல்லாவுறவு முறையுமாகப் பற்றுவேனென்கை. ... .... ... (எ)

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னும்
உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும் *
உரைக்கின்றவமரரும்யானேயென்னும்
உரைக்கின்றவமரர்கோன்யானேயென்னும் *
உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும்
உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கோலோ? *
உரைக்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன் *
உரைக்கின்றவென்கோமளவொண்கோடிக்கே. (அ)

உரைக்கின்ற முக்கண்பிரான் யானே என்னும் } (இப்பெண்பிள்ளை) ஈச்வரனுகச் சொல்லப்படுகிற சிவபிரான் நானே யென்கிருள்;

உரைக்கின்ற திசைமுகன் யானேயென்னும் } ப்ரஸித்தனுன பிரமனும் நானே யென்கிருள்;

உரைக்கின்ற அமரரும் யானே என்னும் } பேசுகின்ற தேவர்களும் யானே யென்கிருள்;

உரைக்கின்ற அமரர் கோன் யானே என்னும் } ப்ரஸித்தனுன தேவேந்திரனும் நானே யென்கிருள்;

உரைக்கின்ற முனிவரும் யானேயென்னும் } ப்ரஸித்தர்களான நாரதாதிமஹரிஷிகளும் நானே யென்கிருள்;

(இப்படிச் சொல்லுவதானது)

உரைக்கின்ற முகில் வண்ணன் ஏறகொலோ } ப்ரஸித்தனுன காளமேகவண்ணப் பெருமான் வந்து ஆவேசித்தனுலோ?

உரைக்கின்ற உலகத்தீர்க்கு } சொல்லு சொல்லென்று கேட்கிற நாட்டாரான உங்களுக்கு,

உரைக்கின்ற என் கோமளம் ஒண் கொடிக்கு } விலக்ஷணமாகப் பேசுகின்ற எனது அழகிய [illegible] பெண்ணைப் பற்றி

உரைக்கின்ற இவை } இவள்தான் சொல்லுகின்ற இப்பேச்சுக்களை

என் சொல்லுகேன் } என்னவென்று கூறுவேன்?

* * * [உரைக்கின்ற.] முக்கட்பிரான் யானே, திசைமுகன் யானே, அமரரும் யானே, அமரர்கோன் யானே, முனிவரும் யானே என்கிறவிது அத்வைதவாதமன்று; முதல் திருவாய்மொழிதன்னிலே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நன்குவிளக்கியருளின பரம வைதிகராகையாலே இவர் அத்வைதவாதம் பண்ண ப்ரஸக்தியில்லை; பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] * என்கிற ச்லோகத்தாலே சிக்ஷித்த கட்டளை இங்கு உரைத்தக்கது. முக்கண்ணன் முதலானுரை நிர்வஹிப்பவன் எம்பெருமானேயென்றவாறு.

திசைமுகன் = கிழக்கு தெற்கு மேற்கு வடக்காகிற நான்கு திசைகளிலும் முகமுடையவன் என்றவாறு. அன்றியே, திசை என்னுஞ்சொல் நான்கு என்கிற எண்ணைக் காட்டிற்றுய் நான்முகன் என்றவாறுமாம்.

உரைக்கின்ற முகில்வண்ணன் = 'உரைக்கின்ற' என்ற அடைமொழி முகிலுக்கும் ஆகலாம்; வார்த்தை சொல்லுவதொரு மேகம் போன்றவன் என்று இல்பொருளுவமை. ... ... ... (அ)

கோடியவினையாதுமிலனேயென்னும்
கொடியவினையாவேனும்யானேயென்னும் *
கொடியவினைசெய்வேனும்யானேயென்னும்
கொடியவினைதீர்ப்பேனும்யானேயென்னும் *

கோடியானிலங்கைசெற்றேனேயென்னும்
கொடியபுள்ளுடையவனேறக்கோலோ? *
கொடியவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்?
கொடியேன்கொடியேன்மகள்கோலங்களே. (க)

கொடிய வினை யாதும் இலன் என்னும் — (இப்பெண்பிள்ளை) கொடிய கருமங்களின் பற்று சிறிது முடையே னல்லேன் நான் என்கிறாள்;

கொடிய வினை ஆவேனும் யானே என்னும் — அக்கொடியகருமங்களும் எனது நிக்ரஹஸ்வரூபம் என்கிறாள்;

கொடிய வினை செய்வேனும் யானே என்னும் — ஆச்ரிதவிரோதிகளுக்குக் கொடிய பாவங்களை விளைப்பதும் நானேஎன்கிறாள்;

கொடிய வினை தீர்ப்பேனும் யானே என்னும் — (அடியார்கட்குக்)கொடிய பாவங்களைத் தீர்த்துக் கொடுப்பதும் நானே யென்கிறாள்;

கொடியான் இலங்கை செற்றேனே என்னும் — கொடியவனான இராவணனுடைய இலங்காபுரியைத் தொலைத்ததும் நானே யென்கிறாள்,

(இவள் இப்படிச்சொல்லுவது)

கொடிய புள் உடையவன் ஏற கொலோ — ஆச்ரித விரோதிகளுக்குக் கொடியவனான பெரிய திருவடியை த்வஜமாகவுடைய எம்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ?

கொடியேன் கொடி என் மகள் கோலங்கள் இவை — கொடியேனான என்னுடைய கொடிபோன்ற இம்மகளின் அழகிய சேஷ்டைகளான இவற்றைப்பற்றி

கொடிய உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் — சொல்லு சொல்லென்று நிர்ப்பந்திக்கிற உங்களுக்கு என்னவென்று சொல்லுவேன்?.

* * * [கொடியவினை.] எம்பெருமான் சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியாய் அவற்றை சரீரமாகக் கொண்டிரா நிற்கச்செய்தேயும் அவற்றிலுள்ள தோஷங்கள் தனக்குத் தட்டாதபடி யிருப்பவன். ஜீவாத்மாவானவன் இந்த சரீரத்தை அதிஷ்டித்து ஸ்வாதீநமாக நிர்வஹித்துக்கொண்டிராநிற்கச்செய்தேயும் அதற்குரிய பால்யம் யௌவநம் முதலிய விகாரங்கள் உள்ளுறையும் தனக்குத் தட்டாதவாறுபோல இதனைக் கொள்க. "ஆவிசேருயிரினுள்ளால் ஆதுமோர் பற்றிலாத பாவனையதனைக் கூடில் அவனையுங் கூடலாமே" என்றது காண்க. தத்வத்ரய வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி:— "சரீரியான ஜீவாத்மாவுக்கு சரீரதர்மங்களான பால்யாதிகள் வந்ததில்லையேயாகிலும் சரீர ஸம்பந்த நிபந்தநமாக துக்க அஜ்ஞாநாதிகள் வருகிறவோபாதி சரீரபூதமான இவற்றோட்டை ஸம்பந்தத்தாலே இவனுக்கு மிங்ஙனே சில தோஷங்கள் வாராதோவென்னில்; வாராது; அதுக்கடி ப்ரவேச ஹேதுவிசேஷம். இவனைப்போலே கர்மமடியாகவன்றிக்கே அநுக்ரஹமடியாகவிறே அவனுக்கு இவற்றில் ப்ரவேசமிருப்பது. * [illegible] *......என்னா நின்றதிறே."

கொடியவினை யாவேனும் யானே = எம்பெருமானுக்குக் கர்மஸம்பந்தமில்லையாகிலும் கருமங்கள்யாவும் அவனிட்ட வழக்கேயாதலால் 'கொடியவினை யாவேனும் யானே' என்கிறது.

கொடியவினை செய்தல் — ஆச்ரிதவிரோதிகளுக்கு ; கொடியவினை தீர்த்தல்—ஆச்ரிதர்களுக்கு. முறையே * தாநஹம்த்விஷத: க்ரூராந் * ஸகூதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே * என்கிற பிரமாணங்கள் காண்க.

கோடியானிலங்கை செற்றேனே = இலங்கை நீறெழச்செற்று ராவண ஸம்ஹாரம் செய்ததும் நானே யென்கிறாள். ஆழ்வார் தம்மை எம்பெருமானாக அநுகரித்துச் சொல்லும்போது 'இலங்கை செற்றேனே' என்று இவ்வளவே சொன்னதாகவும், 'கொடியான்' என்பதைத் திருத்தாயார் கூட்டிக்கொண்டு சொல்லுகிறதாகவும் நஞ்சீயர் அருளிச்செய்வராம். இதற்குக் கருத்து என்னென்னில், ஆழ்வார் இப்போது எம்பெருமான் தன்மையிலே நிற்கிறபடியால் 'கொடியான்' என்பது எம்பெருமானுடைய வார்த்தையாக ஆகவேண்டிவரும். அற்பனான இராவணனை ஒரு பொருளாக மதித்துக் கொடியானென்று எம்பெருமான் கூறினதாக இருக்கவேண்டாமென்பதே.

கோலம் = அழகிய தன்மை. அன்றியே, 'கோல்' என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்த சொல்லாகக்கொண்டு முயற்சியென்றும் பொருளுரைப்ப. கோலுதல்—முயலுதல். .... ... .... .... (கூ)

கோலங்கோள்சுவர்க்கமும்யானேயென்னும்
கோலமில்நரகமும்யானேயென்னும் *
கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னும்
கோலங்கொளுயிர்களும்யானேயென்னும் *
கோலங்கொள் தனிமுதல்யானேயென்னும்
கோலங்கொள்முகில்வண்ணனேறக்கொலோ ? *
கோலங்கொளுலகத்தீர்க்கென்சொல்லுகேன் ?
கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே. ய

கோலம் கொள் சுவர்க்கமும் யானே என்னும் — (என் மகளானவள்) அழகிய ஸ்வர்க்கலோகமும் நானிட்ட வழக்கென்கிறாள்;

கோலம் இல் நரகமும்யானே என்னும் — துக்கமே வடிவெடுத்த நரகமும் நானிட்ட வழக்கென்கிறாள்;

கோலம் திகழ் மோக்கமும் யானே என்னும் — இன்பமயமான மோக்ஷமும் நானிட்டவழக்கென்கிறாள்;

கோலம் கொள் உயிர்களும் யானே என்னும் — பலபல சரீரங்களைப்பரிக்ரஹிக்கிற ஆத்மாக்களும் நானிட்ட வழக்கென்கிறாள்;

கோலம் கொள் தனி முதல் யானே என்னும் — விசித்திரகாரியங்களைச் செய்யவல்லதான மூலப்ரக்ருதியும் நானிட்ட வழக்கென்கிறாள்;

(இப்படிச் சொல்லுவதானது)

கோலம் கொள் முகில் வண்ணன் ஏற கொலோ — அழகிய காளமேகவண்ணப்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ?

| | | | |
|---|---|---|---|
| கோலம் நிகழ் கோதை என் கூந்தலுக்கு | அழகியமாலையையுடைய மயிர்முடியையுடையளா ன என்மகள் விஷயமாக | கோலம் கொள் உலகத்தீர்க்கு என் சொல்லு கேன் | அழகாகவந்து உட்கார்ந் திருக்கின்ற உங்களுக்கு என்ன சொல்லுவேன்? |

* * * [கோலங்கோள்.] ஞானிகளுக்கு நரகத்தோடு ஸ்வர்க்கத்தோடு வாசி யில்லை; இரண்டும் அநர்த்தமென்றேயிருப்பர்கள்; அப்படியிருக்க, ஸ்வர்க்கத் திற்கு 'கோலங்கொள்' என்றும், நரகத்திற்கு 'கோலமில்' என்றும் இங்கு அடை மொழி கொடுத்தது என்? என்னில்; உலகத்தாருடைய கருத்தாலே சொல்லுகிற படி. ஸ்வர்க்கத்தில் மிக்க இன்பமுண்டென்று நினைத்து அதற்கு ஸாதநாநுஷ்டா நங்களும் பண்ணுவர்களே உலகர்கள். பெரிய திருமடலில் "அறத்தின்வழி முயன்ற அன்னவர்தாம் கண்டீர்கள் ஆயிரக்கண் வானவர்கோன்" என்று தொடங்கி அருளிச்செய்ததுகாண்க. ஸ்வர்க்கமும்நரகமும் மீட்சியில்லாதவைகுந் தமாநகரும் ஜீவாத்மவர்க்கமுமெல்லாம் எம்பெருமானிட்ட வழக்கென்கிறது.

கோலங்கோள் தனிமுதல் யானே = 'தனிமுதல்' என்று மூலப்ரக்ருதி யைச் சொல்லவுமாம்; ஸங்கல்பரூபஜ்ஞானத்தைச் சொல்லவுமாம். * அஜாமே காம் லோஹித ஶுக்லக்ருஷ்ணாம் பஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம்* என்று ச்ருதி சொன் னபடியே விசித்திர காரியங்களை மூலப்ரக்ருதி விளைவிப்பதனால் 'கோலங்கொள் தனிமுதல்' என்று அத்தைச் சொல்லுகிறது. பகவத் ஸங்கல்பமில்லாதபோது அதுதானும் கார்யகரமாகமாட்டாமையாலே * பஹுஸ்யாம் * என்கிற ஸங்கல் பத்தையும் சொல்லத்தகும். .... .... ... (ய)

கூந்தல்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும்
குலவாயர்கொழுந்துக்கும்கேள்வன்தன்னை *
வாய்ந்தவழுதிவளநாடன்மன்னு
குருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய்து *
ஆய்ந்ததமிழ்மாலைஆயிரத்துள்
இவையுமோர்பத்தும்வல்லார் * உலகில்
ஏந்துபெருஞ்செல்வத்தராய்த் திருமா
லடியார்களைப்பூசிக்கநோற்றார்களே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கூந்தல் | விலக்ஷணமான மயிர் முடியையுடையளான | கேள்வன் தன்னை | நாயகனான எம்பெரு மான் விஷயமாக, |
| மலர் மங்கைக்கும் | பெரியபிராட்டிக்கும் | வாய்ந்த வழுதி வளம் நாடன் மன்னு குருகூர் சடகோபன் | ஆழ்வார், |
| மண் மடந்தைக்கும் | பூமிப்பிராட்டிக்கும் | | |
| குலம் ஆயர் கொழுந்துக்கும் | நல்லகுடிப்பிறப்பையு டைய நப்பின்னைப் பிராட்டிக்கும் | குற்றேவல் செய்து | அந்தரங்ககைங்கர்ய ரூபமாக |

ஆய்ந்த — ஆராய்ந்து அருளிச் செய்த

தமிழ் மாலை ஆயிரத்துள் இவையும் ஒரு பத்தும் வல்லார்—;

உலகில் — இவ்வுலகத்திலே

எத்த பெரு செல்வத்தர்
ஆய் — எல்லாரும்கொண்டாடும்படியான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியையுடையராய்க் கொண்டு

திருமால் அடியார்களை — பகவத்பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை

பூசிக்க — ஆராதிக்க

நோற்றார்கள் — ஸுக்ருதம் பண்ணினவர்களாவர்.

* * * [கூந்தல் மலர்.] இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை செய்யப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

* பிராட்டியானவள் எம்பெருமானையும் சேதநர்களையும் உபதேசத்தாலே திருத்தப்பார்ப்பள் என்றும், உபதேசம் கார்யகரமாகாவிடில் சேதநனை அருளாலேயும் ஈச்வரனை அழகாலேயும் திருத்தப்பார்ப்பள் என்றும் ஆசாரியர்கள் நிர்வஹிப்பர்கள். அழகாலே ஈச்வரனைத் திருத்தும்போதைக்கு முதல் ஸாமக்ரி கூந்தலாகையாலே 'கூந்தல் மலர்மங்கை' என்கிறது.

எம்பெருமான் தான் இடைக்குலத்திலே வந்து பிறந்தவாறே பிராட்டி தானும் இடைக்குலத்திலே வந்துபிறந்து நப்பின்னையென்று பேர்பெற்றுளாதலால் "குலவாயர் கொழுந்து" என்றது.

திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்கள் = திருமாலைப் பூசிப்பதிலும் காட்டில் அவனடியார்களைப் பூசித்தலே சிறப்பாதலாலும், ஜந்மாந்தர ஸஹஸ்ர ஸுக்ருதத்தின் பயனாகவே அது நேரவேண்டுதலாலும் இங்ஙனேயருளிச்செய்யப்பட்டதென்க. .... .... .... .... (கக)

ஆறாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

ஸ்ரஷ்ட்ருத்வாஜ்ஜகத்யா: ஸகலவிதகலாவர்த்தகத்வேந ! பூதாந்தர்யாமித்வேந க்ருத்யோத்தரணபரதயா பூபராபாக்ருதேஶ்ச । ஶைலேந்த்ரோத்தாரணாத்யை: ஸ்வஜநஹிததயா ப்ரஹ்மருத்ரேந்த்ரபாவாத் துஷ்கர்மோந்மூலநாத்யை: ப்ராஹ [illegible] ॥

* கடல்ஞாலமென்கிற திருவாய்மொழியில் எம்பெருமான் ஆழ்வாராலே [அஹம்புத்திபோத்ய: அங்வபாவி] யானே யானே யென்ற அநுகாரமுகத்தாலே அநுபவிக்கப்பட்டானென்கிறது இதில்.

1. ஜகத்யா: ஸ்ரஷ்ட்ருத்வாத்யை:. * கடல்ஞாலம் செய்தேனும் * பூமியைப் படைத்தது முதலியன சொன்னபடி.

2. ஸகலவிதகலாவர்த்தகத்வேந. * கற்கும் கல்விக்கு * ஸகலவிதமான கலைகளையும் உண்டுபண்ணினமை ப்ரவர்த்திப்பித்தமை முதலியன சொன்னபடி

3. பூதாந்தர்யாமித்வேந. * காண்கின்ற நிலமெல்லாம் * நிலம் முதலிய பஞ்ச பூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கை சொன்னபடி.

4. க்ருத்யுத்தரணபரதயா. * செய்கின்றகிதி. * இறப்பெதிர் நிகழ்காலக் கிரிசைகள் தானிட்ட வழக்காம்படியிருத்தல் சொல்லிற்று.

5. பூபராபாக்ருதேச் ச. * திறம்பாமல் மண் காக்கின்றேன் * மண்ணின் பாரம் நீக்குகை சொன்னபடி.

6. சைலேந்த்ர உத்தாரணாத்யை:. * இனவேய்மலை யேந்தினேன், * கோவர்த்தன மலையையெடுத்துத் தாங்கினமை முதலியன சொன்னபடி.

7. ஸ்வஜநஹிததயா. * உற்றார்களெனக்கு * ஆச்ரிதஜனங்களுக்கு இனியனாயிருத்தல் முதலியன சொன்னபடி.

8. ப்ரஹ்மருத்ர இந்த்ரபாவாத். * உரைக்கின்ற முக்கட்பிரான் * பிரமன் சிவனிந்திரன் முதலானார்க்குத் தான் உள்ளீடாயிருக்கை சொன்னபடி.

9, 10. துஷ்கர்ம உந்மூலநாத்யை:. * கொடியவினை * கொடியவினைகளைக் களைதல் முதலியன சொன்னபடி. ஆத்ய சப்தத்தாலே "கோலங்கொள்" என்கிற பத்தாம் பாட்டின் ப்ரமேயம் ஸங்க்ருஹீதமென்று கொள்வது.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஶோகம் வதும் வஶிஜிஹீஷு-ர்விவாவிநாதாம்
ஸம்ஸ்ருஷ்டிகத்ருத்வ முகாமவைலக்ஷ ஶௌரேஃ |
தஸ்ய ஷஷ்டே த்ரவிடா வரிதா ஈயேதி
தத்பாவஸாவிதக நா ஈதிராம ஷஷ்டே ||

(கருத்து.) கீழ்த் திருவாய்மொழியில் உருவெளிப்பாட்டாலேயுண்டான ஆர்த்தியை ஒருவாறு தணிக்கக் கருதிய ஆழ்வார் அகில ஜகத்ஸ்ருஷ்டி முதலியவற்றைச் செய்தருள்பவனான எம்பெருமானுக்குத் தம்மை அநுகரித்து, அப்பெருமான் செய்த செயல்களையெல்லாம் தாம் செய்ததாக அருளிச்செய்தார் ஆறாந் திருவாய்மொழியில் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

கடன்ஞாலத் தீசனை முன்காணமல் நோந்தே
உடனு வனுகரிக்க லுற்று—திடமாக
வாய்ந்தவனாய்த் தான்பேசும் மாற னுரையதனை
ஆய்ந்துரைப்பா ராட்செயகோற் றார்.

| | | | |
|---|---|---|---|
| கடல்ஞாலத்து | கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் | அவன் ஆய் தான் பேசும் | அவனாகவேதாம் அநுகரித்துப் பேசின |
| ஈசனை | எம்பெருமானை | மாறன் | ஆழ்வாருடைய |
| முன் காணமல் | கண்முன்னே காணப் பெறாமல் | உரை அதனை | ஸ்ரீஸூக்திகளை |
| நொந்து | க்லேசப்பட்டு | ஆய்ந்து உரைப்பார் | வைபவமறிந்து அநுஸந்திப்பவர்கள் |
| உடன் ஆ அநுகரிக்கல் உற்று | அவனைத்தாம் அநுகரித்துத் தரிக்கப் பார்த்து | ஆள் செய | ஆழ்வார்க்கு அடிமை செய்ய |
| திடம் ஆக வாய்ந்து | திண்ணிய அத்யவஸாயம் கொண்டவராய் | கோற்றார் | கோன்புகோற்றவராவர்கள். |

கீழ் * எங்ஙனேயோவென்னும் திருவாய்மொழியில் உருவெளிப்பாடாய்ச் சென்றதித்தனைபோக்கி ஸாக்ஷாத்தாகக் காணப்பெற்றதில்லையே; அதனால் ஆழ்வார்க்கு க்லேசம் மிக்கதாயிற்று; அந்த க்லேசத்தை எவ்வழியாலே போக்கிக் கொள்ளலாமென்று பார்த்த ஆழ்வார் ‘அநுகரித்துத்தரித்தல் என்று ஒன்றுண்டு’ என்று திருவுள்ளம்பற்றி அப்படியே தத்பாவ பாவனைகொண்டு பேசினாராயிற்று * கடல் ஞாலத்தில். அப்படிப்பட்ட ஆழ்வாருடைய அருளிச்செயல்களைத் தரமறிந்து ஓதவல்லவர்கள் யாவரோ அவர்கள் ஆழ்வார்க்கு நித்யகைங்கரியம் பண்ண நோன்பு நோற்றவர்களெனக் கொள்ளத்தகுவர் என்றதாயிற்று.

ஈற்றடியில் “ஆட்செய”—தொகுத்தல் விகாரம்; “ஆட்செய்ய” என்பது பாடமன்று; தளையும் பிறழும். ... ... ... (சகூ)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி—ஐந்தாம்பத்து
## ஏழாந் திருவாய்மொழி—நோற்ற நோன்பு.

உரையவதாரிகை:— கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானாகவே தம்மை அநுகரித்துப் பேசினது, ஒருவாறு தரிக்கைக்காகவன்றோ. அவ்வளவிலும் எம்பெருமான் வந்து முகங் காட்டாமையாலே பழைய ஆர்த்தியே தலையெடுத்தது. 'சிறிது ஆர்த்தியுண்டானாலும் கடுக வந்து முகங்காட்டி அருள்செய்வதையே இயற்கையாகவுடைய எம்பெருமான் நம்மளவிலே இப்படி உபேக்ஷையாயிருக்க யாது காரணமோ?' என்று பார்த்தார் ஆழ்வார்; கருமயோகம் ஞானயோகம் முதலானவற்றிலே நமக்கு அந்வயம்வேணுமென்று இருந்தானோ? அல்லது, அந்த உபாயாந்தரங்களில் நாம் அந்வயித்திருக்கிறோமென்று திருவுள்ளம்பற்றிக் கைவிடப் பார்த்தானோ? அவனது திருவுள்ளம் இன்னதென்று தெரியவில்லையே! என்று தடுமாறின ஆழ்வார் தம்முடைய உண்மையான நிலைமையை எம்பெருமான் திருவடிகளிலே விண்ணப்பஞ்செய்யவேணுமென்று கருதி வானமாமலைப் பெருமாள் திருவடிகளிலே தம்முடைய அநந்யோபாயத்வம் முதலானவற்றை விண்ணப்பஞ்செய்து வேரற்ற மரம்போலே விழுந்து சரணம் புகுகிறாராயிற்று இத்திருவாய்மொழியில்.

சிரீவர மங்கை என்றும், சிரீவர மங்கலம் என்றும் வானமாமலை க்ஷேத்திரத்தின் திருநாமம். இது பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்று. இத்திருவாய்மொழியில் ஆறாம்பாட்டில் "வானமாமலையே! அடியேன் தொழவந்தருளே" என்கிற ஸ்ரீஸூக்தியை நோக்குமிடத்தில் 'வானமாமலை' என்கிற திருநாமம் எம்பெருமானுக்கே உள்ளதென்றும், அந்தத் திருநாமத்தையிட்டு திவ்யதேசம் வழங்கப்பட்டு வருகிறதென்றும் சொல்லும்படியாகின்றது. "பாதமே சரணாக்குமௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

நோற்றநோன்பிலேன்நுண்ணறிவிலேன் ஆகிலுமினியுன்னைவிட்டொன்
றாற்றகிற்கின்றிலேன் அரவினணையம்மானே ! * [றும் *
சேற்றுத்தாமரைசெந்நெலூடேமலர் சிரீவரமங்கலநகர் *
வீற்றிருந்தவெந்தாய்! உனக்குமிகையல்லேனங்கே. (க)

| | |
|---|---|
| சேறு | சேற்று நிலங்களிலே |
| செந்நெலூடு | செந்நெற்பயிர்களினிடையே |
| தாமரை மலர் | தாமரைகள் மலரப்பெற்ற |
| சிரீவரமங்கலம் நகர் | சிரீவரமங்கை யென்னும் வானமாமலைப்பதியிலே |
| வீற்றிருந்த எந்தாய் | இருந்தருளும் எம்பெருமானே! |
| அரவின் அணை அம்மானே | சேஷசயனனான தலைவனே! |
| நோற்ற | நானுக அநுட்டித்த |
| நோன்பு இலேன் | கருமயோக முடையேனல் லேன்; |
| நுண் அறிவு இலேன் | நுட்பமான ஞானயோகமும்முடையேனல்லேன்; |
| ஆகிலும் | இங்ஙனே கைம்முதலற்றவனேயானாலும் |
| இனி | இதுமுதலாக |
| உன்னை விட்டு | உன்னை யொழிய |
| ஒன்றும் | சிறிதும் |
| ஆற்ற கிற்கின்றிலேன் | தரித்திருக்க மாட்டுகின்றிலேன்; |
| உனக்கு | ஸர்வரக்ஷகனென்று பேர் பெற்றிருக்கிற உனக்கு |
| அங்கே | அந்த வானமாமலைப் பதிதன்னிலே |
| மிகை அல்லேன் | (ரக்ஷ்யவர்க்கத்தில்) வெளிப்பட்டவனல்லேன் [என்னை ரக்ஷித்தே தீரவேணுமென்றபடி. |

* * * [நோற்ற நோன்பு.] நோன்பு என்று கர்மயோகத்தைச் சொல்லுகிறது; தமக்குக் கர்மயோகமில்லையென்று சொல்லவேண்டில் "நோன்பிலேன்" என்றால் போதாதோ? 'நோற்ற நோன்பிலேன்' என்னவேணுமோ? அதற்குக் கருத்து என்? என்னில்; ஒருபடியாலும் நோன்பு இல்லை என்று சொல்லப் போகாது; யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்றாப்போலே சில ஸுக்ருத விசேஷங்கள் இல்லையென்னப்போமோ? "என் கைப்பாடாகச்செய்ததொரு கருமமில்லை" என்று சொல்லுவதே யுக்தமாதலால் நோன்புக்கு 'நோற்ற' என்று அடைமொழி கொடுக்கப்பட்டது.

நுண்ணறிவிலேன் = அறிவுக்கு நுண் என்று அடைமொழி கொடுத்ததன் கருத்து யாதெனில்; முந்துற ஸ்வஸ்வரூபத்தையுணர்ந்து பிறகு பரஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிப்பதாகிற நுட்பமான அறிவு இல்லாமையைச் சொன்னபடி.

ஆகிலும் = என் கையிலே ஒரு கைம்முதலும் இல்லையாகிலும் என்றபடி. கர்மயோக ஜ்ஞானயோகங்களில்லாமை சொன்னது பக்தியோகமில்லாமை சொன்னபடிக்கும் உபலக்ஷணமாம். "நஹ்ஸ்ஸ்ரீ நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நமேக்தி ஸ்ஸ்மனணாரவிஷ்டே— ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் த்வச் சரணாரவிந்தே" என்று ஆளவந்தாருளிச்செய்தசந்தை இங்கு அநுஸந்தேயம்.

இனி = உன்னையும் என்னையும் அறியப்பெறுதிருந்த காலத்திலே இழந்தொழிந்தேனகிலும் அறியப்பெற்ற இதுமுதலாக ஆறியிருக்க முடியுமோ? இங்கே நம்பின்ளையிடு காண்மின்;—"உன்னையும் அறியாதே என்னையும் அறியாதேயிருந்தவன்று இழந்தது அமையாதோ? உன் நிறைவும் என் குறைவும் அறிந்த இன்றும் இழக்கவேணுமோ? ஒருவன் கையிலே சோறுமுண்டாய் அவன் இடுவானுமானல், ஒருவனுக்குச் சோறுமின்றிக்கே பசியனுமானல் இழக்கவேண்டுமோ? என் கையிலேயும் ஒன்றுண்டாய் அது சமையுந்தனையும் ஆறியிருக்கிறேனே?.... அநாதிகாலம் மெய்மறந்து இழந்த காலம் போராதோ? நான் மெய்யாக இசைந்த இன்றும் இழக்கவேணுமோ?"

உன்னைவிட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன் = உன்னை நிர்ப்பந்திப்பதே எனக்குப் பணியாய்விட்டது; உன்னைத்தவிர வேறொன்றால் காரியமாகுமென்று இருக்கமாட்டிற்றிலேன் என்றவாறு. கர்மயோகம் முதலிய ஒன்றிலும் அந்வயமில்லாத நமக்கு எம்பெருமானைப் பற்றின சிந்தனை ஏதுக்கு? என்று நான் கையொழிந்து நிற்கவேண்டியவனாயிருந்தும் உன்னை மறந்து பிழைக்கமாட்டிற்றிலேன் என்றபடியுமாம்.

அரவினணையம்மானே! = "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்" இத்யாதிப்படியே ஸகலவித கைங்கரியங்களையும் செய்யுமாறு கைக்கொண்ட திருவனந்தாழ்வான் எங்களிலே ஒருவனன்றோ? அவனைப்போலே என்னையும் அடிமைகொண்டருளவேண்டாவோ? என்பது குறிப்பு.

அரவினணையம்மானே! ஒன்றுமாற்றகிற்கின்றிலேன் = நான் படுக்கையில் கண்ணுறங்கப்பொறுதே "உள்ளஞ்சோர வுகக்தெதிர்விம்மி உரோமகூபங்களாய்க் கண்ண நீர்கள், துள்ளஞ்சோரத் துயிலணை கொள்ளேன்" என்னும்படி கிடவா நிற்க, நீ மெல்லிய படுக்கைபார்த்துக் கண்ணுறங்குவதைக் கண்டு என்னால் ஆற்றமுடியவில்லையே! என்பதாகவும் கொள்ளலாம்.

[சேற்றுத் தாமரை இத்யாதி.] பரமபதத்தையும் மறக்கும்படியாகவன்றோ இத்தலத்தின் வாய்ப்பு இருப்பது. சேறுகளிலே தாமரைகளானவை செந்நெற் பயிர்களினூடே வெகு அழகாக அலர்ந்திருக்கப்பெற்ற சிரீவரமங்கையிலே வீற்றிருந்த திருக்கோலமாகக் காட்சி தந்தருளும் பெருமானே! [உனக்கு மிகையல்லேன்.] உன்னாலே ரக்ஷிக்கப்படவேண்டிய சேதநவர்க்கங்களில் நான் புறம்புபட்டவனல்லேன் என்கை. என்னையும் ரக்ஷித்தே தீரவேணுமென்கை. .... .... .... .... (க)

அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லேன் உன்னைக்காணுமவாவில்
எங்குற்றேனுமல்லேன் இலங்கைசெற்றவம்மானே! * [வீழ்ந்து * நான்
திங்கள்சேர்மணிமாடநீடு சிரீவரமங்கலநகருறை *
சங்குசக்கரத்தாய்! தமியேனுக்கருளாயே. (உ)

| | |
|---|---|
| இலங்கை | லங்காபுரியை |
| செற்ற | தொலைத்த |
| அம்மானே | ஸ்வாமியே!, |
| திங்கள் சேர் | சந்திரனளவும் சேர்ந்திருக்கிற |
| மணி மாடம் | மணி மயமான மாடங்களையுடைத்தாய் |
| நீடு | விசாலமான திருவீதிகளையுடைத்தாயிருக்கிற |
| சிரீவரமங்கலம் நகர் உறை | சிரீவரமங்கையிலே நித்யவாஸம் செய்தருளுகிற |
| சங்கு சக்கரத்தாய் | சங்க சக்ரபாணியான ஸர்வேச்வரனே! |
| நான் | அடியேன் |
| அங்குற்றேன் அல்லேன் | நித்யஸேவை பண்ணுகிற நித்யஸூரிகளிலே சேர்ந்தவனல்லேன்; |
| இங்குற்றேன் அல்லேன் | உன்னைக் கனவிலுமறியாத ஸம்ஸாரிகள் படியுமுடையேனல்லேன்; |
| உன்னைகாணும் அவாவில் வீழ்ந்து | உன்னைக் காணவேணுமென்கிற ஆசையில் படிந்தவனாகி |
| எங்குற்றேனும் அல்லேன் | ஒருவர் படியிலும் சேரா தலையா நின்றேன்; |
| தமியேனுக்கு | இப்படித் தனிப்பட்டிருக்கிற என் விஷயத்திலே |
| அருளாய் | அருள் புரியவேணும். |

* * * [அங்குற்றேனல்லேன்.] ; பரமபதத்திலுள்ளாரில் சேர்ந்தவனல்லேன், இந்நிலத்திலுள்ளாரிலும் சேர்ந்தவனல்லேன் என்கிறவிதற்குக் கருத்து என்னென்னில்; பரமபதத்திலுள்ள நித்யமுக்தர்கள் க்ருதக்ருத்யர்களாய்ப் பலன் கைபுகுந்தவர்களாகையாலே அன்னவர்களது வகுப்பிலே நான் சேர்ந்தவனல்லேன்; தம் தலையாலே ஸாதநாநுஷ்டாநம் பண்ணிக்கிடக்கிற இந்நிலத்திலுள்ளார் வகுப்பிலும் சேர்ந்தவனல்லேன்;

இதுவரையிலும் ஒரு ஸாதனமும் அநுஷ்டியாமற் போனாலும் இனிமேலாவது ஸாதநாநுஷ்டானம் பண்ண யோக்யதையுண்டன்றோ என்னில்; [உன்னைக் காணுமவாவில் வீழ்ந்து நான் எங்குற்றேனுமல்லேன்] மேலும் ஸாதநாநுஷ்டானம் பண்ணவொண்ணாதபடி வடிவழகு முதலானவற்றிலே யீடுபட்டு உன்னைக் காணவேணுமென்னும் ஆசையாலே தளர்ந்து கிடக்கிறேனாகையாலே எவ்விதமான உபாயத்தையும் அநுஷ்டிக்க க்ஷமனல்லேன் என்கை.

நீ இருந்தவிடத்தே வந்து கிட்டி உன்னை அநுபவிக்கிறவனல்லேன்; உன்னை ஒரு பொருளாகவே மதியாத ஸம்ஸாரிகளின் திரளிலே சேர்ந்தவனுமல்லேன்; உன்னையொழியவும் தரித்திருக்கிறவர்களின் திரளிலும் சேர்ந்தவனல்லேன் என்றுமாம்.

இலங்கை செற்ற அம்மானே! = இலங்கையைக் கிழங்கெடுத்தவனுக்கு என் வரையில் இந்த ஸம்ஸாரத்தைக் கிழங்கெடுத்தல் அரிதோ? என்றவாறு.

[திங்கள் சேர் இத்யாதி.] சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற மணிமாடங்களையுடைய சிரீவரமங்கல நகரிலே திருவாழி திருச்சங்குடனே ஸேவை ஸாதிக்கும் பெருமானே! துணையற்றவெனக்கு உறுதுணையாயிருந்து அருள் செய்தருளவேணும் என்றாராயிற்று. .... .... .... .... (உ)

கருளப்புட்கொடிசக்கரப்படை வானநாட! என்கார்முகில்வண்ணா! *
பொருளல்லாதவென்னைப்பொருளாக்கி அடிமைகொண்டாய்! *
தெருள்கொள்நான்மறைவல்லவர்பலர்வாழ் சிரீவரமங்கலநகர்க்கு *
அருள்செய்தங்கிருந்தாய்! அறியேனொருகைம்மாறே. (௯)

கருளன் புள் கொடி — கருடப்பறவையைக் கொடியாகவுடையனாய்
சக்கரம் படை — திருவாழியை ஆயுதமாகவுடையனாய்
வானம் நாட — பரமபதத்தை நாடாகவுடையனான பெருமானே!,
எம் கார் முகில் வண்ணா — எமக்குக் காளமேகம் போன்ற திருவுருவைக் காட்டி உபகரிக்குமவனே!
தெருள் கொள் — மிகுந்த ஞானத்தையுடையராய்
நால் மறை வல்லவர் — நான்கு வேதங்களிலும் வல்லவர்களான
பலர் — பல ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ் — வாழப்பெற்ற
சிரீவரமங்கலம் நகர்க்கு — வானமாமலைப்பதிக்கு
அருள் செய்து — கிருபைபண்ணி
அங்கு இருந்தாய் — அந்தத் திருப்பதியிலே நித்யவாஸம் செய்பவனே!
பொருள் அல்லாத என்னை — அபதார்த்தமாய்க் கிடந்த வென்னை
பொருள் ஆக்கி — ஸ்வரூபம் பெற்றவனாம்படி அங்கீகரித்து
அடிமை கொண்டாய் — (திருவாய்மொழிபாடுகை யாகிற இக்) கைங்கரியத்தை என்பக்கலிலே திருவுள்ளம் பற்றினாய்;
(இப்படியாகச்செய்த மஹோபகாரத்திற்கு)
ஒரு கைம்மாறு அறியேன் — நானொரு கைம்முதலுடையேனாக அறிகின்றிலேன்.

* * * [கருளப்புட்கொடி.] கீழ்ப்பாட்டில் * சங்கு சக்கரத்தாய்! தமியேனுக்கு அருளாயே * என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், 'ஆழ்வீர்! அருள் செய்யவேணுமென்கிறீர்; அப்படியே அருள் செய்வோம்; அதில் ஒரு குறையில்லை; ஆனால் நாம் அருள்செய்யவேணுமானால் உம்மிடத்தில் ஏதேனும் ஒரு கைம்முதல் இருக்கவேணுமே; அப்படி ஏதேனுமுண்டாகில் சொல்லிக்காணீர்' என்ன; பிரானே! இனிமேல் நீ செய்கிற அருள் இருக்கட்டும்; இதுவரையில் உன் பக்கலில் நான் பெற்றிருக்கிற அருள் அபலபிக்கமுடியாததன்றோ; ஒரு வஸ்துவாக எண்ணத்தகுந்தவனல்லாதபடியிருந்தவென்னை வஸ்துவாக்கி இவ்வளவு அதிகாரியாம்படி செய்தருளினாயே!, இது என் பக்கலில் என்ன கைம்முதலைக் கண்டு? கீழ்க்காலத்தில் செய்த அருள் நிர்ஹேதுகமானாப்போலே மேற்காலத்திலும் செய்யுமருள் நிர்ஹேதுகமாயிருக்கத் தடையுண்டோ?; இனி அருள் செய்கிறாய் செய்யாதொழிகிறாய்; அதில் விசாரமில்லை; இதுவரை நான் பெற்றிருக்கிற அருளுக்கு என்னிடத்தில் ஒரு கைம்முதலிருந்ததாக அறிகின்றிலேனே! என்கிறார்.

கருளப்புள்ளை (அதாவது, கருடபக்ஷியை)க் கொடியாகக்கொண்டு, அடியவர்கள் இருந்தவிடங்களிலே சென்று காரியஞ் செய்வாய் நீ; சில ஸமயங்களில் "கருதுமிடம் பொருது — கைவந்த சக்கரத்தன்" என்கிறபடியே திருவாழியாழ்வானைப் போகவிட்டு அடியவர்களை கெடுப்பாய்; திருநாட்டிலே சிரிய

சிங்காசனத்திலே யெழுந்தருளியிருந்து நித்யமுக்தர்களுக்குக்காட்சிதந்தருளுமா போலே எம்போல்வாரை வாழ்விக்கவேண்டிக் காளமேகத் திருவுருவத்தைக் காட்டுவாய்; இப்படியெல்லாம் உபகரித்தருளுமவனை நீ அபதார்த்தமா யிருந்தவென்னை ஒரு பதார்த்தமாக்கி இங்ஙனே வாசிகமான கைங்கரியத்தைப் பண்ண வல்லேனும்படி அருள்புரிந்தாய்; திருநாட்டிலே நித்யமுக்தர்களுக்கு நித்யமாக ஓலக்கங் கொடுத்துக்கொண்டிருக்கிற வண்ணமாக, வைதிகர்கள் நிறைந்த வானமாமலைப்பதியிலே நித்யஸந்நிதி பண்ணியிருக்கின்ற பிரானே! நீ இவ்வளவாக உபகரித்து நின்றவிதுக்கு என் தலையில் ஒரு கைம்முதல் இருந்ததாக அறிகின்றிலேன் என்றாராயிற்று.

முதலே பிடித்துக் கைம்முதலை எதிர்பாராமலே காரியஞ்செய்யுமுனக்கு இப்போதாக ஒரு கைம்முதல் பார்ப்பது தகுதியோ? என்றவாறு.

கருடః என்கிற வடசொல் கருளன் என்றாயிற்று; டகரம் ளகாரமாயிற்று. இங்கு ஈடு;— "ஈடே என்கிறவித்தை ஈளே என்னுமாபோலே" என்றுள்ளது. * ஸுஹ்ரீளெ வாரோஹிசு * என்கிற வேதவாக்கியம் மற்றொரு வேதவாக்கி யத்தில் * ஸுஹ்ரீடை * என்று ஓதப்படுவதை இங்கு எடுத்துக் காட்டினபடி. (ரு

மாறுசேர்படைநூற்றுவர்மங்க ஓரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி *
நீறுசெய்தவெந்தாய்! நிலங்கீண்டவம்மானே! *
தேறுஞானத்தர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
ஏறிவீற்றிருந்தாய்! உன்னையெங்கெய்தக்கூவுவனே? (ச)

| | |
|---|---|
| மாறு சேர் படை | விரோதிகளாய்க்கொண்டு சேர்ந்த சேனையையுடைய |
| நூற்றுவர் | துரியோதநாதிகள் நூறு பேர்களும் |
| மங்க | தொலையும்படி |
| அன்று | அக்காலத்தில் |
| ஓர் ஐவர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்குத் துணைவனாயிருந்துகொண்டு |
| மாயம் போர் பண்ணி | ஆச்சரியமான யுத்தத்தை நடத்தி |
| நீறு செய்த எந்தாய் | நீறுபடுத்தின ஸ்வாமியே! |
| நிலம் கீண்ட அம்மானே | பூமியை ப்ரளயாபத்தில் நின்றும் இடந்தெடுத்த பெருமானே! |
| தேறு ஞானத்தர் | தெளிந்த ஞானத்தையுடையவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களையுடைய |
| வேதம் வேள்வி அறா | வைதிகஸமாராதனம் இடைவிடாமல் நடக்குமிடமான |
| சிரீவரமங்கலம் நகர் | வானமாமலைப் பதியிலே |
| ஏறி | குடியேறி |
| வீற்றிருந்தாய் | பெருமை தோற்ற எழுந்தருளியிருக்குமவனே |
| உன்னை | உன்னை |
| எங்கு எய்த | எங்கேவந்து கிட்டுவதாக |
| கூவுவன் | நான் கூப்பிடுவேன்? |

[உன்னை நான் கிட்டப்பெறுவதென்றொரு பொருளுண்டோ? என்றவாறு.]

* * * [மாறுசேர்படை.] அடியார்களை ரக்ஷிப்பதையே தொழிலாக வுடையவனல்லவோ நீ; என்னை ரக்ஷிப்பது உனக்கு மிகையோவென்கிறார். பஞ்சபாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து பாரதயுத்தத்தை நடத்தித் துரியோதநாதியரைத் தொலைத்த செய்தியை ஒன்றரையடிகளாலே அநுஸந்திக்கிறார்.

"ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய:—ஸமோ ஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" என்றிருக்கிற பகவானுக்கு ஒருவரையும் பகைவராகச் சொல்லக்கூடாதாயிருக்க "மாறுசேர்படை நூற்றுவர்" என்று சொல்லலாமோவென்னில், ஆச்ரித விரோதிகளைத் தன் விரோதிகளாக எம்பெருமான் நினைப்பவனாதலாலும், அது தோன்ற "த்விஷந்நம் நபோக்தவ்யம் த்விஷந்நம் நைவ போஜயேத் | பாண்டவாந் த்விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்டவா:—த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத், பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:" என்று தானே அருளிச்செய்திருக்கையாலும் சொல்லத் தட்டில்லை.

மாயப்போர் = மாயமென்று ஆச்சரியத்திற்கும் கபடத்திற்கும் பேராதலால், ஆச்சரியமான யுத்தம் என்றுவது, கபடமான யுத்தம் என்றுவது பொருள் கொள்ளலாம். ஈடு;— "ஆச்சர்யமான யுத்தமென்னுதல், வஞ்சகமான யுத்தமென்னுதல். அதாவது — பகலை இரவாக்கியும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்தும், சத்ருக்களுயிர்நிலையைக் காட்டிக்கொடுத்தும் செய்தவை."

வஞ்சக யுத்தம் செய்வது தருமமூர்த்தியான பகவானுக்குத் தகுதியோவென்று சிலர் சங்கிப்பர்கள்; வஞ்சனைக்காரர்கள் திறத்திலே வஞ்சகவழியைக் கைப்பற்றுதல் ஏற்குமென்ப.

நிலம் கீண்டவம்மானே! = பிரளயங்கொண்ட பூமியை அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்துக் கொணர்ந்து வைத்தாயே!, அது அபேக்ஷித்ததனால் செய்தாயோ? நம்முடைய சரக்கை நாம் நோக்கவேணுமென்று செய்தவத்தனையே, அதுபோலே நானும் உன் சரக்கன்றோ, என்னையும் நோக்கவேண்டாவோ என்கை.

[தேறு ஞானத்தர் இத்யாதி.] தெளிந்த ஞானம்பெற்ற மஹா விவேகிகளின் வைதிக ஸமாராதனங்கள் இடைவிடாது செல்லப்பெற்ற சிரீவரமங்கல நகரிலே அவர்களோடொக்கக் குடியேறிப் பெரும்பேறு பெற்றானாயிருக்கிற பெருமானே! நீயே விஷயீகரிக்குமித்தனையல்லது நான் உன்னைப்பெறுகைக்கிடான முயற்சி பண்ணுகையென்று ஒரு பொருளுண்டோ?. நீ கூவுதல் வருதல் செய்வதன்றோ தகுந்தது என்றபடி.. .... .... .... (௪)

எய்தக்கூவுதலாவதேயெனக்கு எவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று *
கைதவங்கள்செய்யும் கருமேனியம்மானே! *
செய்தவேள்வியர்வையத்தேவரறாச் சிரீவரமங்கலநகர் *
கைதொழவிருந்தாய் அதுநானுங்கண்டேனே. (௬)

| | |
|---|---|
| எய்த கூவுதல் | உன்னைப் பெறுவதற்காகக் கூப்பாடு போடுவதான து |
| எனக்கு ஆவதே | எனக்குத் தகுமோ? |
| எவ்வ தெவ்வத்துளாயும் ஆய் நின்று | எப்படிப்பட்ட சத்ருஸமூஹத்திலுள்ளும் கலந்திருந்து |
| கைதவங்கள் செய்யும் | க்ருத்ரிமங்களைச் செய்யுமவனுன [அதாவது, அஸுரவர்க்கத்தினுள்ளே புத்தவிக்ரஹபரிக்ரஹம் பண்ணிக் கலந்து நின்று வைதிகருசியைக் குலைத்து வியாமோஹிப்பித்தவனுன] |
| கரு மேனி அம்மானே | கரியதிருமேனி கொண்ட ஸ்வாமியே!, |
| செய்த வேள்வியர் | க்ருதக்ருத்யர்களான |
| வையம் தேவர் அறு | நிலத்தேவர்கள் இடைவிடாமல் வர்த்திக்கிற |
| சிரீவரமங்கலம் நகர் | வானமாமலைப் பதியி லுள்ளாரெல்லாரும் |
| கை தொழ | ஸேவிக்கும்படி |
| இருந்தாய் | எழுந்தருளியிருப்பவனே! |
| நானும் | அடியேனும் |
| அது கண்டேன் | அவ்விருப்புக் காணப் பெற்றேன். |

* * * [எய்தக்கூவுதல்.] கீழ்ப்பாட்டில் "உன்னை யெங்கெய்தக் கூவுவனே!" என்ற ஆழ்வாரைநோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! ஒன்றும் பெறாதவர்போலே கூப்பிடாநின்றீரே; சிரீவரமங்கல நகரிலிருப்பை உமக்குக் காட்டித்தரவில்லையோ நான்?" என்றருளிச்செய்ய, அதற்கு ஆழ்வார், அது இல்லையென்று நான் சொன்னேனே? அவ்வளவால் த்ருப்தி பிறக்கவில்லையே! என்கிறார்.

எய்தக் கூவுதல் எனக்கு ஆவதே! = என்னைப் பெறுவதற்கு நீ முயற்சி பண்ணவேண்டியிருக்க, உன்னைப் பெறுவதற்கு நான் முயற்சிபண்ணவேண்டும் படியாவதே! இது தகுதியோ? என்றவாறு. சேதநலாபம் எம்பெருமானுக்கா? எம்பெருமானுடைய லாபம் சேதநனுக்கா? என்று பார்க்குமளவில், சேதநலாபம் ஈச்வரனுக்கு என்பது சாஸ்த்ரார்த்தமாகத் தேறி நிற்கும். தன்னுடைய சொத்துக் கைதவறிப்போனால் அதைப் பெறுதற்கு ஸ்வாமியானவன் முயல வேண்டியிருக்குமேயல்லது, சொத்து ஸ்வாமியைப் பெறுதற்கு முயல்வதென்பது கிடையாது; இது இங்கே தலைகீழாயிற்றே! என்கிறார்.

எவ்வதெவ்வத்துளாயுமாய் நின்று கைதவங்கள் செய்யும் அம்மானே! = தெவ்வமென்று சத்ருஸமூஹத்திற்குப் பெயர்; "தேவ்வர் அஞ்ச நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்" என்று குலசேகராழ்வாருடைய பிரயோகமும் காண்க. 'எவ்வ' என்றது எப்படிப்பட்ட என்றபடி. எவ்வகைப்பட்ட சத்ரு ஸமூஹத்தினுள்ளும் புகுந்து க்ருத்ரிமங்களைச்செய்யும்பிரானே! இங்கே ஈடு — "புத்தமுநியாய் அவர்கள் நடுவே புக்குநின்று அவர்களுக்குண்டான வைதிகச்ரத்தை

யைப் போக்கினபடி. [கைதவங்கள் செய்யும் கருமேனியம்மானே!] வசாங்களாலும் யுக்திகளாலும் க்ருத்ரிமத்தைப்பண்ணி வைதிக ச்ரத்தையைப் போக்கி அவ்வளவிலும் கேளாதார்க்கு வடிவைக்காட்டி வாய்மாளப் பண்ணினபடி. தன்னுடைய வார்த்தைகளாலே அவர்களை ஸவப்ராயராக்கி ஒருவனம்புக்கிலக் காம்படி பண்ணிவைத்தான்.''

செய்தவேள்வியர் = எம்பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை உள்ளபடியறிந்தவர்கள் என்றவாறு. "விது³: க்ரு'ஷ்ணம் ப்³ராஹ்மணாஸ் தத்த்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:— விதுஃ க்ருஷ்ணம் ப்ராஹ்மணாஸ் தத்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தாஃ." [எம்பெருமானாகிய கண்ணபிரானை உள்ளபடி அறியப்பெற்றவர்கள் யாவரோ, அவர்கள் வேள்விகளையெல்லாம் குறையறச் செய்தவர்களேயாவர்] என்ற பிரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

"அது நானும் கண்டேனே" என்று இப்பாசுரம் முடிந்திருந்தாலும் வாக்ய சேஷங்கொண்டு பூரிக்கவேணுமென்று நம்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிறார். ஈடு; — ["அது நானும் கண்டேனே] தேவர் செய்தருளின அம்சம் இவ்வளவுண்டு; அதில் குறையில்லை; எனக்கு அவ்வளவால் போராது. திருவடிகளில் கைங்கர்யமே யாத்ரையாகப் பெறவேணுமென்று வாக்ய சேஷமாய்க் கிடக்கிறது." .... .... .... .... (ரு)

ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனே! கண்ணா! என்றுமென்னை
வானநாயகனே! மணிமாணிக்கச்சுடரே! * [யாளுடை *
தேனமாம்பொழில்தண்சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை *
வானமாமலையே! அடியேன்தொழவந்தருளே. (சு)

| | |
|---|---|
| ஏனம் ஆய் | மஹாவராஹரூபியாய் |
| நிலம் கீண்ட | பூமியைக்குத்தி யெடுத்து வந்து ஸ்வஸ்தானத்திலே சேர்த்த |
| என் அப்பனே | எம்பெருமானே! |
| கண்ணா | கண்ணபிரானே! |
| என்றும் | எந்நாளும் |
| என்னை ஆள் உடை | என்னை அடிமை கொள்ளுகிற |
| வானம் நாயகனே | நித்ய ஸூரிநாதனே! |
| மணி மாணிக்கம் சுடரே | மணி மாணிக்கம் போன்ற தேஜஸ்ஸை யுடையவனே! |

| | |
|---|---|
| தேன மா பொழில் | தேனையுடைய மாந் தோப்பு சூழ்ந்த |
| தண் | குளிர்ந்த |
| சிரீவரமங்கலத்தவர் | சிரீவரமங்கையிலுள்ளவர்கள் |
| கை தொழ | வணங்கும்படியாக |
| உறை | அங்கு நித்யவாஸம் பண்ணுகிற |
| வானமாமலையே | வானமாமலைப் பெருமானே! |
| அடியேன் தொழ | அடியேன் தொழும் படியாக |
| வந்தருள் | இங்கே யெழுந்தருளாய் |

* * * [ஏனமாய் நிலங்கீண்ட.] நான் ஆசைப்பட்டபடியே அடிமைசெய்யலாம்படி வந்தருளவேணுமென்கிறார்.

பிரளயத்துக்குள்ளான பூமியை வராஹவுருக்கொண்டு எடுத்தாப்போலே ஸம்ஸார வெள்ளத்துக்குள்ளே "ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல், பிறவிக்கடலுள் நின்று நான் துளங்க" என்கிறபடியே அலைந்துழல்கின்ற என்னையும் எடுத்தருளவேணுமென்னுங் கருத்துப்பட "ஏனமாய் நிலங்கீண்டவென்னப்பனே!" என்கிறார்.

கண்ணா! = "வம்ச பூமிகளை உத்தரிக்கச் சிழ்க்குளம்புக்க வராஹ கோபாலரைப்போலே" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி இங்கே நினைக்கத்தக்கது. நிமக்நரையுயர்த்துவதற்காகவே யன்றோ நீ வராஹரூபியாயுத் கோபாலமூர்த்தியாயும் தாழவிழிந்தது; அப்படிப்பட்ட நீ என்னையும் உயரத் தூக்கவேண்டாவோ என்பது உள்ளுறை.

என்றும் என்னையாளுடை வானநாயகனே! = நீ வானநாயகனாயிருக்கும் போதும் [அதாவது, பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கும்போதும்] என்னை ஆட்கொள்ளும்படியையன்றோ ஆராய்ந்து போருவது! என்ற கருத்துக்காண்க.

[தேனமாம்பொழில் இத்யாதி.] தேன்மிக்க மாம்பொழில் சூழ்ந்த சிரீவரமங்கல நகரிலுள்ளார்கள் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணுமாறு எழுந்தருளியிருக்கிற வானமாமலை யெம்பெருமானே! நானும் அடிமை செய்து வாழும்படியாக வந்து தோற்றவேணும் என்கிறார்.

'வானமாமலை' என்பது திவ்யதேசத்தின் திருநாமமாக வழங்கி வந்தாலும் இது எம்பெருமானுடைய திருநாமமேயென்பது இங்கு ஸ்பஷ்டமாகிறது. ஆகாசத்தளவும் சென்று கிட்டும்படி ஓங்கின மலைபோலேயிராநின்ற எம்பெருமானை மலையாகவே கூறுதல் லக்ஷணையென்க. .... .... (கூ)

வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர்கொழுந்தே! * உலகுக்கோர்
முந்தைத்தாய்தந்தையே! முழுவேழுலகுமுண்டாய்! *
செந்தொழிலவர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
அந்தமில்புகழாய்! அடியேனையகற்றேலே. (எ)

| | |
|---|---|
| வந்தருளி | (பரமபதம் முதலிய வற்றை விட்டு) எழுந்தருளி |
| என் நெஞ்சு | என்னுடைய நெஞ்சை |
| இடம் கொண்ட | இருப்பிடமாகக் கொண்ட |
| வானவர் கொழுந்தே | நித்யஸூரிநாதனே! |
| உலகுக்கு | இவ்வுலகத்துக்கு |
| ஓர் முந்தை தாய் தந்தையே | அநாதிஸித்த மாதா பிதாவானவனே! |
| முழு ஏழ் உலகும் உண்டாய் | ஸகல லோகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனே! |
| செம் தொழிலவர் | சிறந்த அநுஷ்டானங்களை யுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய |

| | | | |
|---|---|---|---|
| வேதம் வேள்வி அறா | வைதிகஸமாராதனம் இடையறாமல் நடக்கப் பெற்ற | அந்தம் இல் புகழாய் | முடிவில்லாத புகழை யுடையவனாய் எழுந் தருளியிருப்பவனே! |
| ஸ்ரீவரமங்கலம் நகர் | வானமாமலைப்பதியிலே | அடியேனை அகற்றேல் | என்னைப்புறம்புபடுத்தா தொழியவேணும். |

* * * [வந்தருளி.] கீழ்ப்பாட்டில் "அடியேன் தொழவந்தருளே" என்றாரே; அர்ச்சாவதாரஸமாதியைக் குலைத்துக்கொண்டு ஸ்ரீவரமங்கலநகரிலிருந்து திருக்குருகூரிலே திருப்புளியடியிலே வந்து காட்சிதரவேணுமென்றாயிற்று ஆழ்வாருடைய கோரிக்கை; அங்ஙனே வரக்காணாமையாலே 'உபேக்ஷித்தான் போலும்' என்றஞ்சி "பிரானே! என்னை உபேக்ஷியாதொழியவேணும்" என்கிறார்.

பாசுரம் தொடங்கும்போதே 'வந்தருளி' என்றிருக்கின்றபடியாலே உபேக்ஷித்தானென்று நினைப்பது எங்ஙனே பொருந்தும்? என்னில்; கீழ்ப் பாட்டிலே அபேக்ஷித்தபடியே வந்தருளினபடியைச் சொல்லுகிறதன்று இது. "வடதடமும் வைகுந்தமும் மதிள்துவராபதியும் இடவகைகளிகழ்ந்திட்டு என் பாலிடவகை கொண்டனையே" என்னுமாபோலே பரமபதம் முதலானவிடங் களைவிட்டுத் தம் ஹ்ருதயத்திலே வந்து குடிகொண்டிருக்கிறபடியைச் சொன்ன வித்தனை.

"வந்தருளி யென்னெஞ்சிடங்கொண்ட" என்கிறவிடத்திலே நம் பிள்ளையீட்டு ஸ்ரீஸூக்தி பரமபோக்யமானது. அது வருமாறு;— "பட்டர் ஸ்ரீபுஷ்பயாகம் அணித்தானவாறே நஞ்சீயரைப் பலகாலும் இயல் கேட்ட ருளுவர்; ஒரு கோடையிலே திருவீதியிலே நீரைவிட்டு எழுந்தருளியிருந்து இப் பாட்டை இயல் சொல்லுமென்று ஜீயரை அருளிச்செய்து தாம் இத்தை அநு ஸந்தித்திருந்து அநந்தரத்தே தாமும் இப்பாட்டை இயல்சொல்லி 'யமநியமாதி க்ரமத்தாலே யோக்ய வஸ்துவை மநநம்பண்ணிப் புறம்புள்ள பராக்கையறுத்து அநுஸந்திக்கப்புக்காலும் சுக்கான் பரல்போலேயிருக்கக்கடவ நெஞ்சுகள் பதஞ் செய்யும்படி, தார்மிகராயிருப்பார் இவை சில ஈரச்சொற்களைப் பொகட்டுப் போவதே!' என்றருளிச்செய்தார்; நஞ்சீயர் இவ்வார்த்தையை உருத்தோறு மருளிச்செய்வர் என்றருளிச்செய்வர்."

'வானவர் கொழுந்தே!' எனவிளித்து *வந்தருளி யென்னெஞ்சிடங் கொண்ட* என்கையாலே, ஸ்ரீவைகுண்டத்தை திவ்யஸ்தானமாகவுடையவன் என்னெஞ்சை இடமாகப் பெறுகைக்குப் படாதபாடுகளும் படுவதே! என்ற ஈடுபாடு தோற்றும். அவனைத் தவிர்த்து விஷயங்களை உகந்து போந்த என் னெஞ்சு ஸ்ரீவைகுண்டநாதனுக்கு இடமாகப் பெற்றதே! என்று தலைசிக்கிறார். பெருமாள் தண்டகாரணியத்திலே ஸ்ரீசரபங்கமஹர்ஷியின் ஆச்ரமத்திலே யெழுந்தருளி "ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே — ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே." என்று 'இக்காட்டிலே தேவரீர் நியமிக்கு

மோரிடத்திலே குடியிருப்புக்கொள்ள விரும்பாநின்றேன்' என்றாப்போலே இங்கு ஆழ்வார் பக்கலிலே வந்து குடியிருப்பு இரந்து பெற்றான்போலும்.

**உலகுக்கு ஓர் முந்தைத் தாய்தந்தையே!** = நாம் ஸாதாரணமாக நினைத்திருக்கிற மாதாபிதாக்கள், நம்மொருவர்க்கு மாதாபிதாக்களாயும் சில்காலமிருந்து மறையக் கூடியவர்களாயுமிருப்பர்கள்; அங்ஙனன்றிக்கே ஒருநாளுமழியாத மாதாபிதா எம்பெருமானேயாவன்.

**முழுவேழுலகுமுண்டாய்!** = மாதாவானவள் பத்துமாஸம் வயிற்றிலே வைத்துச் சுமப்பதானது 'பிறந்து வளர்ந்து பரிபக்வனானால் நமக்கு ப்ரயோஜனப்படும்' என்றாயிற்று; எம்பெருமானாகிற மாதாவின்படி அப்படியல்லாமல் இவை நோவுபடாதொழியப் பார்த்திருக்கையே தன்பேறாயிருக்கும்.

**செந்தொழிலவர்** = செவ்விய தொழிலாவது கைங்கரியம்; அநந்யப்ரயோஜநமாகத் தொண்டுசெய்கை. அப்படித் தொண்டுபூண்டமுதமுண்ணும் ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய வேதகோஷமும் வைதிகக்ரியா கோலாஹலமும் இடையறாது செல்லுமிடமான சிரீவரமங்கல நகரிலே எல்லைகாணமுடியாத புகழோடே நித்யஸந்நிதி பண்ணியிருக்கும் பெருமானே! அடியேனைக் கைவிடாதருளவேணும். .... .... .... .... (எ)

அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் *
அகற்றியென்னையும்நீ அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய் *
பகர்க்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே! * என்றும்
புகற்கரியவெந்தாய்! புள்ளின்வாய்பிளந்தானே! (அ)

| | |
|---|---|
| பகர் கதிர் | விளங்காநின்ற ஒளியையுடைத்தான |
| மணி மாடம் நீடு | மணிமாடங்கள் ஓங்கியிருக்கப்பெற்ற |
| சிரீவரமங்கை | வானமாமலைப்பதியிலே |
| வாழ்நனே | வாழுமவனே! |
| என்றும் | ஒருநாளும் |
| புகற்கு அரிய எந்தாய் | (உகவாதவர்களுக்கு) ப்ராபிக்கவொண்ணாத ஸ்வாமியே! |
| புள்ளின் வாய் பிளந்தானே | பகாஸுரனது வாயை இருதுண்டமாக்கி அவனை முடித்தவனே! |
| அகற்ற நீ வைத்த | ஒதுக்குகைக்காக நீ உண்டாக்கி வைத்த |
| மாயம் | ஆச்சரியமான செய்கையையுடைய |
| வல் | பலிஷ்டங்களான |
| ஐம்புலன்கள் ஆம் அவை | பஞ்சேந்திரியங்களை |
| நன்கு அறிந்தனன் | உள்ளபடியே அறியப்பெற்றேன்; |
| நீ | பரம காருணிகனான நீ |
| என்னையும் அகற்றி | அடியேனையும் உன் பக்கலில் நின்றும் அகலச்செய்து |
| அரு சேற்றில் | கால்வாங்கிக் கரையேற முடியாத விஷயங்களாகிற சேற்றிலே |
| வீழ்த்தி கண்டாய் | தள்ளிவைக்கின்றாயே! |

* * * [அகற்ற நீவைத்த.] இப்பாட்டில் * அடியேனையகற்றேல் * என்று ஆழ்வார் ப்ரார்த்திக்கக்கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்!' உம்மை அகற்றுவதற்கு என்ன ப்ரஸக்தியுண்டாயிற்று? அப்ரஸக்தமாக ஏதுக்கு இரக்கிறீர்?' என்றருளிச்செய்ய, பிரானே! அடிமைக்கு விரோதியான ஸம்ஸாரத்திலே என்னை வைத்திருப்பது அகற்றினபடியன்றோ; அப்ரஸக்தமாயோ என் பேச்சிருப்பது? என்கிறார்.

அர்த்த பஞ்சக ஜ்ஞானத்திலே விரோதி ஜ்ஞானமும் ஒன்றாயிருக்கும்; அஃது உண்டானபடி இப்பாட்டின் மூன்னடிகளிலே சொல்லுகிறது. கீதையிலே "மம மாயா துரத்யயா—மம மாயா துரத்யயா." என்று, நான் பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்த்துக்கொள்ளப்போகாது என்று சொல்லிவைத்தபடியே நீ பிணைத்த பிணைக்குத் தப்பிப் பிழைத்தாருண்டோ? ஐந்து இந்திரியங்களையும் அவற்றுக்கு உணவான ஐந்து விஷயங்களையும் பிணைத்துவைத்து இவற்றின் நடுவே என்னை இருத்தினாயே! இது அகற்றுவதற்கு இட்டவழியோ? அன்றி அணுகுவதற்கு இட்டவழியோ? உன்னை உகவாதார் அகன்றுபோம்படிக்கோக நீ வைத்தவை இவை என்று நான் நன்றாக அறிந்துகொண்டேன். * மயர்வறமதிநலம் பெறுகையாலே நான் அழகிதாக அறிந்தேன்.

ஆழ்வார் இங்ஙனே சொல்லக்கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! உகவாதார் அகன்றுபோகைக்கு வைத்தோமென்று அறிந்திருக்கின்ற நீர் நம்மைப் பொடிய ப்ரஸக்தியுண்டோ?' என்ன; [அகற்றி என்னையும் நீ அருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய்] என்கிறார். நான்மாத்திரம் இந்த யந்திரத்திலிருந்து தப்பிப் பிழைக்கும்படியாயோ நீ வைத்திருப்பது? உன்னாலல்லது செல்லாதபடியாயிருக்கிற என்னையும் உன் பக்கல் நின்றும் நீ பிரித்து, கால்வாங்கவொண்ணாதபடியான சப்தாதி விஷயங்களிலே தள்ளிவைத்திருக்கின்றாயே!- என்கிறார்.

மூன்றாமடியில் "பகர்க்கதிர்" என்றும், "பகற்கதிர்" என்றும் பாட பேதமுள்ளதாக வியாக்கியானங்களில் காட்டப்படுகிறது. இடையின ரகரமான பாடத்தில், பகர் என்றும், கதிர் என்றும் ஒளியாய், மிக்க வொளியையுடைய என்றபடி. வல்லின றகரமான பாடத்தில் பகல் என்று ஸூர்யனுக்குப் பேராகையாலே * ஸூர்யமண்டலத்தளவுஞ் செல்லவுயர்ந்து ஒளியையுடைய மணிமாடங்கள் என்றபடி.

வாணன் — வாழ்நன்; மரூஉமொழி. .... .... .... (அ)

புள்ளின்வாய்பிளந்தாய்மருதிடைபோயினாய்! எருதேழடர்த்த * என்
கள்ளமாயவனே! கருமாணிக்கச்சுடரே! *
தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார் மலிதண்சிரீவரமங்கை *
உள்ளிருந்தவெந்தாய்! அருளாயுய்யுமாறெனக்கே. (கூ)

| | |
|---|---|
| புள்ளின் வாய் பிளந்தாய் | பகாஸுரனையழித்தவனே! |
| மருது இடை போயினாய் | இரட்டைமருதமரங்களினிடையே தவழ்ந்து சென்றவனே! |
| எழ் எருது அடர்த்த | ஏழு ரிஷபங்களையும் வலி தொலைத்தவனும் |
| என் | என் திறத்திலே |
| கள்ளம் மாய வனே | கள்ள மாயங்களைச் செய்து போருமவனே! |
| கரு மாணிக்கம் சுடரே | கரியமாணிக்கத்தின் ஒளிபோன்ற வடிவை யுடையவனே! |
| தெள்ளியார் | தெளிந்தவர்களாயும் |
| திரு நால் மறைகள் வல்லார் | விலக்ஷணமான நான்கு வேதங்களிலும் வல்லவர்களாயுமிருப்பார் |
| மலி | நிறைந்திருக்கப்பெற்ற |
| தண் | குளிர்ந்த |
| சிரீவரமங்கை உள் | வானமாமலைப்பதியிலே |
| இருந்த எந்தாய் | எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே! |
| எனக்கு | அடியேனுக்கு |
| உய்யும் ஆறு | உஜ்ஜீவநோபாயத்தை |
| அருளாய் | அருளிச்செய்யவேணும். |

* * * [புள்ளின்வாய் பிளந்தாய்.] கீழ்ப்பாட்டில் "அகற்றியென்னையும் நீ அருஞ்சேற்றில் வீழ்த்திகண்டாய்" என்னக்கேட்ட எம்பெருமான், 'ஆழ்வீர்! உம்முடைய வினைகளாகிற ப்ரபல விரோதிகள் காரணமாக நீர் அருஞ்சேற்றில் விழுந்து கிடந்தீராகில் இதற்கு நான் என் செய்வது?' என்ன; அதற்கு ஆழ்வார், 'பிரானே! இதற்கு மேற்பட்ட ப்ரபல விரோதிகளையெல்லாம் அநாயாஸமாக அழித்திருக்கிறவுனக்கு இது ஒரு வார்த்தையோ? இப்படியும் ஒரு கள்ளத்தனமான பேச்சுண்டோ?' என்கிறார்.

புள்ளின்வாய் பிளந்ததும் மருதிடை போனதும் எருதேழடர்த்ததும் க்ருஷ்ணாவதாரத்திலே. பகாஸுரனிற்காட்டிலும் வலிதோ என் வினை? இரட்டை மருதமரங்களில் ஆவேசித்துக்கிடந்த அசுரரிற்காட்டிலும் வலிதோ என் வினை? நப்பின்னைப்பிராட்டியின் திருமணத்திற்கு இடையூறாய் நின்ற எருதுகளிற்காட்டிலும் வலிதோ என் வினை?

கருமாணிக்கச்சுடரே! என்பது திருமேனியொளியில் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தை. புள்ளின்வாய்பிளந்தது முதலிய செயல்கள் திருமேனியை ஆயாஸப்படுத்திச் செய்தனவாகும்; அப்படி ஏதேனும் ஆயாஸப்படவேணுமோ என் வினைகளைப் போக்க? என்பது உள்ளுறை.

தெள்ளியார் = ஞானத்தில் தெளிவுடையவர்கள்; அவன் கை பார்த்திருக்குமதுக்கு மேற்பட ஒன்றுமில்லை என்கிற தெளிவு உடையவர்களென்க. இப்படிப்பட்ட பரம வைதிகர்கள் வாழுமிடமான சிரீவரமங்கலநகரிலே எழுந்தருளியிருக்கும் பெருமானே! எனக்கு உன் திருவடிகளில் கைங்கரியம் கிட்டும்வகை பண்ணியருளவேணும் என்றாராயிற்று. .... .... .... (கூ)

ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய் * உனக்கோர்கைம்
மாறுநானொன்றிலேன் எனதாவியுமுனதே *
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை *
நாறுபூந்தண்டுழாய்முடியாய்! தெய்வநாயகனே! (௰)

சேறு கொள் — சேற்று நிலங்களிலே வளர்கின்ற
கரும்பும் — கரும்புகளும்
பெரு செந்நெலும் — பெரிய செந்நெற் பயிர்களும்
மலி — மலிந்திருக்கப்பெற்ற
தண் — குளிர்ந்த
சிரீவரமங்கை — வானமாமலைப்பதியிலே (எழுந்தருளியிருக்கிற)
நாறு பூ தண் துழாய் முடியாய் — பரிமளம் மிக்க திருத்துழாய் மாலையணிந்த திருமுடியையுடையவனே!
தெய்வநாயகனே — தெய்வநாயகப் பெருமானே!
எனக்கு — அடியேனுக்கு
ஆறு — உபாயமேதென்றால்
நின் பாதமே சரண் ஆக — உன் திருவடிகளே உபாயமாக
தந்தொழிந்தாய் — அநுக்ரஹித்து விட்டாய்;
(இந்த மஹோபகாரத்திற்கு)
உனக்கு — உன் விஷயத்திலே
ஓர் கைம்மாறு ஒன்று நான் இலேன் — ஒரு ப்ரதியுபகாரமுமுடையேனல்லேன்;
எனது ஆவியும் — என்னுடைய ஆத்மாவும்
உனதே — ஏற்கனவே உன்னுடையதாயிராநின்றது.

* * * [ஆறெனக்கு.] ஏற்கனவே தமக்குக் கிடைத்திருக்கிற அத்யவஸாய விசேஷத்திற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தாநம் பண்ணுகிறாரிப்பாட்டில். ஆறு என்று வழிக்குப் பெயர்; அதாவது உபாயத்தைச் சொன்னபடி. மேலே, சரணாக என்றவிடத்தில் சரண் என்ற சொல் 'சரண்ய:' என்ற வடசொல்லின் விகாரமாய் உபேயத்தைச் சொல்லிற்றாகும். ஆக, "எனக்கு நின் பாதமே ஆறு சரணாகத் தந்தொழிந்தாய்" என்று அந்வயித்து "ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் உன் திருவடி மலர்களே யென்றிருக்கும் இவ்வத்யவஸாயத்தை எனக்கு ஸ்வபாவமாம்படி தந்தருளினாய்" என்றருளிச்செய்வர் பிள்ளான். பட்டர், ஆறு என்பதற்கும் சரண் என்பதற்கும் உபாயமென்கிற பொருளையே கொள்வர். உபாயப் பொருளதான சரணம் என்கிற வடசொல் சரணென்று திரிந்ததாகக் கொண்டபடி. உபாயமென்னும் பொருளிலே இரண்டு சொற்கள் கிடந்தனவாகில் எங்ஙனே அந்வயிக்கிறதென்னில்; பதவுரையிற் காண்க.

ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "* நோற்ற நோன்பிலேன் என்று தொடங்கி உபாயாந்தர சூந்யதையை முன்னிட்டுக்கொண்டு உபாயநிஷ்கர்ஷம் பண்ணுகிற திருவாய்மொழியாகையாலே அத்தையே நிகமிக்கிறது. அவதாரணத்தாலே ஏக பதத்தை நினைக்கிறது. ஈச்வரனைப் பற்றினவுற்றத்தாலே உபாயாந்தரங்களை நெகிழுகையொழிய நாஸ்திக்யத்தாலே விடுமன்று அது விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவாம்; ஔஷதஸேவை பண்ணினானொருவன் ஸர்ப்பத்தின் வாயிலே கைகொடுத்தால் அது நிர்ப்பாதம். ஔஷதஸ்பர்சமில்லாதவன் அத்தைச் செய்தால் அது மரண ஹேதுவாம்."

"சாஸ்த்ரிகள் தெப்பக்கையரைப் போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக் கடலை நீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும் விட்டுக் கரை குறுகுங்காலமெண்ணுவர்கள்" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தியை இங்கே நினைப்பது.

உனக்கு ஓர் கைம்மாறு நானொன்றிலேன்=இப்படிப்பட்ட அத்யவஸாயத்தைப் பிறப்பித்தருளினவுனக்குத் தகுந்த பிரதியுபகாரம் காணாதவளவேயன்றிக்கே போலியாயிருப்பதொரு உபகாரமும் காண்கின்றிலேன். இங்ஙனே கூறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! நும்முடைய ஆத்மாவைத் தரலாகாதோ? அது ஒரு கைம்மாறாக ஆகலாமே" என்ன, * எனதாவியுமுனதே * என்கிறார்.

நம்பிள்ளையீடு;—"எத்தனையேனும் அளவுடையார்க்கும் நிர்வாஹகனாகின்றாய்; ஆனபின்பு உனக்கு நான் என்ன ப்ரத்யுபகாரம் பண்ணுவது? நீயோ கனக்க உபகரித்துக்கொண்டு நின்றாய்; நான் அஜ்ஞனாகப்பெற்றிலேன். இங்ஙனேயானாலும் நான் சில செய்து தலைக்கட்டினேனாகவொண்ணாதபடி நீ பரிபூர்ணனாய்; உபகாரம் கொள்ளாதார் உண்டுடுத்துத் திரியாநின்றார்கள்; அறிவுகேடரானவர்கள் சில ப்ரத்யுபகாரம் பண்ணினோம் என்கிறார்கள்; நீ அபூர்ணனாகில் இவையெல்லாம் சில செய்ததாக நினைத்திருக்கலாயிற்றே; நீயோ பூர்ணனாயிருந்தாய்; ஆனபின்பு ஒன்று செய்து தலைக்கட்டப்போமோ?"

தெய்வநாயகனே!=இது வானமாமலை யெம்பெருமானுடைய திருநாமம்.

தெய்வநாயகன்காரணன் திரிவிக்கிரமனடியிணைமிசை *
கோய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் *
செய்தவாயிரத்துள்ளிவை தண்சிரீவரமங்கைமேயபத்துடன் *
வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே. (கக)

| பதம் | பொருள் |
|---|---|
| தெய்வநாயகன் காரணன் திரிவிக்கிரமன் | எம்பெருமானுடைய |
| அடி இணை மிசை | உபய பாதங்களிலே, |
| கோய் கொள் பூ பொழில் சூழ் குருகூர் சடகோபன் | ஆழ்வார் |
| செய்த ஆயிரத்துள் | அருளிச் செய்த ஆயிரத்தினுள்ளே |
| இவை | இந்த |
| தண் சிரீவர மங்கை மேய பத்து | வானமாமலைப்பதி விஷயமான பதிகத்தை |
| உடன் | கருத்துடனே |
| வைகல் | எப்போதும் |
| பாட வல்லார் | பாட வல்லவர்கள் |
| வானோர்க்கு | நித்ய ஸூரிகளுக்கு |
| ஆரா அமுது | ஆராவமுதமாயிருப்பர்கள். |

* * * [தெய்வநாயகன்.] இத்திருவாய்மொழியைக் கற்குமவர்கள் நித்யஸூரிகளுக்கும் பரமபோக்யராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

ஸர்வேச்வரனாய் ஆச்ரிதவத்ஸலனாய் தன்னுடைமை பெறுகைக்குத் தான் அர்த்தியாய் அபேக்ஷிதம் செய்து கொடுக்குமவனான எம்பெருமான் திருவடிகளிலே ஆழ்வார் ஸமர்ப்பித்த இத்திருவாய்மொழியைக் கருத்தறிந்து பாடவல்லவர்கள் காலதத்துவமுள்ளதனையும் நித்யஸூரிகளுக்குப் பரமபோக்யர்களாக ஆகப்பெறுவரென்றதாயிற்று. .... .... .... (கக)

ஏழாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

𑌸𑌰𑍍𑌪𑌾𑌧𑍀𑌶𑍇 𑌶𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑌰𑌿𑌕𑌰𑌧𑌰𑌣𑌾𑌤𑍍 𑌸𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍍𑌵𑌯𑍋𑌗𑌾𑌤𑍍
𑌸𑌤𑍍𑌸𑌾𑌹𑌾𑌯𑍍𑌯𑌾𑌦𑌶𑍇𑌷𑌾𑌨𑍍𑌤𑌰𑌨𑌿𑌲𑌯𑌤𑌯𑌾 𑌭𑍂𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑍃𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌤𑌾𑌤𑌭𑌾𑌵𑌾𑌦𑍍 [illegible] 𑌶𑌰𑌣𑍍𑌯𑌂
𑌦𑍀𑌨𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹 [illegible] ॥

* கோற்றகோன்பு என்கிற பதத்திலே ஆழ்வார் வானமாமலை யெம்பெருமானை அசரண்ய சரண்யனாக அருளிச்செய்தாரென்கிறது.

1 ஸர்ப்பாதீசேசயத்வாத். * அரவினணையம்மானே * திருவனந்தாழ்வான்மேலே திருக்கண் வளர்ந்தமை சொன்னபடி.

2. அரிதரணாத். (அரி என்று சக்கரத்திற்குப் பெயர்; தரம் என்று சங்குக்குப் பெயர்;) * சங்கு சக்கரத்தாய்! தமியேனுக்கருளாயே * திருவாழி திருச்சங்குகளைத் தரித்துக்கொண்டிருக்கின்றமை சொன்னவாறு.

3. ஸாநுகம்பித்வயோகாத். * அருள் செய்து அங்கிருந்தாய் * கருணையோடே கூடியிருக்குந்தன்மை கூறியவாறு.

4. ஸத்ஸாஹாய்யாத். * ஐவர்க்காயன்று மாயப்போர்பண்ணி * ஸாதுக்களான பஞ்சபாண்டவர்கட்குத் துணை புரிந்தமை சொன்னபடி.

5. அசேஷாந்தரநிலயதயா. * எவ்வதெவ்வத்துளாயுமாய் நின்று * ஸர்வாந்தர்யாமியாயிருக்குமிருப்பு சொன்னவாறு.

6. பூஸமுத்தர்த்ருத்புதர்ஜை:. * ஏனமாய் நிலங்கீண்டவென்னப்பனே கண்ணா! * வராஹத் திருவுருவங்கொண்டு பூமியை யிடந்தெடுத்தமை சொன்னபடி. கண்ணா! என்பதிலும் நோக்காக 'உதர்ஜை:' என்றது.

7. ஸர்வேஷாம்தாதபாவாத். * உலகுக்கோர் முந்தைத் தாய் தந்தையே! * தாய் தந்தையர்போலே உலகுக்கெல்லாம் ப்ரியஹிதங்களை நடத்துந்தன்மை சொன்னபடி.

8. இதரஜநதுராதர்ஷதாதேः * என்றும் புகற்கரியவெந்தாய்! புள்ளின்வாய் பிளந்தானே! * ஆச்ரித ஜனங்கள் தவிர மற்றவர்களுக்கு அணுகவுமரியன் என்றவாறு. ஆதிசப்தத்தாலே மற்ற பாசுரங்களில் ப்ரதிபாதிக்கப்பட்ட குணசேஷ்டிதங்களும் ஸங்க்ருஹீதங்களாகக்கொள்க.

தேய்வநாயகன் என்றதைத் திருவுள்ளம்பற்றி "தேவதாஸார்வபௌமம்" என்றருளிச்செய்தபடி.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥

(கருத்து.) கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானைத் தம்மை அநுகரித்துத் தரிக்கப்பார்த்த ஆழ்வார் ஒருவழியாலும் அபிமதஸித்தி பெறாதவராய், கருமயோகம் முதலிய எவ்விதமான உபாயாந்தரமும் தமக்கு இல்லாமையை அப்பெருமானுக்குத் தெரிவித்து, அவனே உபாயமென்கிற திண்ணிய அத்யவஸாயங்கொண்டு ஒருவாறு தேறுதலடைந்தார் ஏழாந்திருவாய்மொழியில் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

கோற்ற கோன்பாதியிலே னுன்றனைவிட் டாற்றகில்லேன்
பேற்றுக்குபாய முன்றன் பேரருளே—சாற்றுகின்றேன்
இங்கென் னிலையென்னும் எழில்மாறன் சொல்வல்லார்
அங்கமரர்க் காரா வமுது.

| | |
|---|---|
| கோற்ற | ஸாதநாநுஷ்டானம் பண்ணிப் பெறப்பட்ட |
| கோன்பு ஆதி | கருமயோகம் முதலானவற்றை |
| இலேன் | உடையேனல்லேன்; |
| உன் தன்னை விட்டு | தாரகனும் போக்யனுமிருக்கிற வுன்னைவிட்டு |
| ஆற்றகில்லேன் | தரித்திருக்க சக்தனல்லேன்; |
| பேற்றுக்கு | புருஷார்த்த ப்ராப்திக்கு |
| உபாயம் | சாதனம் |
| உன் தன் | உன்னுடைய |
| பேர் அருளே | பரமக்ருபையே (என்று) |
| சாற்றுகின்றேன் | [illegible]த்திருக்கின்றேன்; |
| இங்கு | இவ்விஷயத்தில் |
| என் நிலை என்னும் | என்னுடைய உறுதி இதுவாயிருக்கும் என்றருளிச்செய்தவரான |
| எழில் மாறன் | அழகிய ஆழ்வாருடைய |
| சொல் | திருவாய்மொழியை |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| அங்கு | திருநாட்டுக்குச்சென்ற பின்பு |
| அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| ஆரா அமுது | ஆராத அமுதமாயிருக்கப் பெறுவர். |

* * * எம்பெருமானே! உன்னுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இடையூறாக உபாயாந்தரங்களில் தலையீடு உடையேனல்லேன்; 'உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையே ஸாதனம்' என்கிற மஹாவிச்வாஸமுடையேன்; இதுவாயிற்று என்னுடைய நிஷ்டை—என்று தம் உறுதியை * கோற்ற கோன்பிலேன் என்கிற திருவாய்மொழியில் விண்ணப்பஞ்செய்தவரான ஆழ்வாருடைய திவ்யஸூக்திகளை ஓதவல்லவர்கள் இவ்விபூதியில் ஸாம்ராஜ்யங்களையநுபவித்த பின்பு பரமபதத்திலும் நித்யஸூரிகளாலே மிகவும் கொண்டாடப் பெறுவர் என்றதாயிற்று. .... .... .... .... (௪௭)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி

## ஐந்தாம்பத்து-எட்டாந் திருவாய்மொழி

### ஆராவமுதே யடியேனுடலம்.

உ. **உரையவதாரிகை**:—கீழ்த் திருவாய்மொழியிலே வானமாமலை யெம்பெருமான் திருவடிகளிலே வேரற்றமரம்போலே விழுந்து மிகப்பெரிய ஆர்த்தியோடே சரணம் புகச்செய்தேயும் அப்பெருமான் முகங்காட்டிற்றிலன்; இன்னார்க்கு இன்னவிடத்திலே முகங்காட்டுவது என்றொரு நினைப்பு உண்டே எம்பெருமானுக்கு. அதனாலே இவர்க்குத் திருக்குடந்தையிலே முகங்காட்டுவதாக அவன் நினைப்பிட்டிருக்கவுங்கூடுமே. ஆழ்வார் அப்படியே கருதினர். நமக்குத் திருக்குடந்தையிலே காட்சி தந்தருள்வதாக எம்பெருமான் ஸங்கல்பித்திருக்கக் கூடுமென்று எண்ணினர். எண்ணி, 'அங்குச் சென்று புகவே நம் அபேக்ஷிதம் தலைக்கட்டும்; குறைகளெல்லாம் தீரும்' என்று கனக்கப் பாரித்துக்கொண்டு திருக்குடந்தையிலே சென்று புகுந்தார்.

சித்ரகூட மலைச்சாரலிலே வந்து சேர்ந்த பரதாழ்வான் தான் நினைத்தபடியான பரிமாற்றம் ஒன்றும் பெறாதாப்போலே, ஆழ்வாரும் புக்கவிடத்தில் திருக்கண்களை அலரவிழித்துக் குளிர நோக்கியருளுதல் திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையருளிச் செய்தல் அணைத்தல் முதலானவற்றிலே ஒன்றுஞ் செய்யக் கண்டிலர். அக்ரூரன் கண்ணபிரானிடத்து வரச்செய்தே * மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி * என்று கனக்கப் பாரித்துக்கொண்டுவந்து மனோரதித்தபடியே பெற்றானென்று கேட்டிருந்தோம்; அங்ஙனே ஒன்றும் தாம் பெறுமையாலே மிகவருந்தி, ஸ்தநந்தய ப்ரஜையானது தாய்பக்கலிலே கிட்டி முகம் பெறவிட்டால் அலமந்து நோவுபடுமாபோலே அவன் ஸந்நிதியிலே தளர்ந்து கிடந்து கூப்பிட்டு இன்னும் எத்தனை திருவாசல் தட்டித்திரியக்கடவேன்! என்னு மார்த்தியோடே தலைக்கட்டுகிறார்.

> * ஆராவமுதேயடியேனுடலம் நின்பாலன்பாயே *
> நீராயலைந்துகரையவுருக்குகின்ற நெடுமாலே!*
> சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
> ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே! (க)

| | |
|---|---|
| ஆரா அமுதே | எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபிறவாத அம்ருதமாகிய |
| எம்மானே | எம்பெருமானே! |
| அடியேன் உடலம் | என்னுடைய சரீரமானது |
| நின் பால் | உன் திறத்தில் |
| அன்பு ஆய் ஏ | அன்புதானே வடிவெடுத்ததாகி |
| நீர் ஆய் அலைந்து | நீர்ப்பண்டமாக உருகி வியாகுலப்பட்டு |
| கரைய | கரையும்படியாக |
| உருக்குகின்ற நெடுமாலே | உருகப்பண்ணுகிற ஸர்வேச்வரனே! |
| சீர் ஆர் செந்நெல் | சீர்மைமிக்க செந்நெற் பயிர்கள் |
| கவரி வீசும் | சாமரம்போல் வீசப் பெற்ற |
| செழு நீர் | செழுமைதக்கிய நீர்த்தகவையுடைத்தான |
| திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| ஏர் ஆர் கோலம் திகழ | அழகு பொருந்திய திருமேனி விளங்க |
| கிடந்தாய் | சாய்ந்தருளினாய்; (அவ்வழகை) |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன். |

* * * [ஆராவமுதே.] இத்திருவாய்மொழியிலே நம் பூருவர்கள் போரவும் ஈடுபட்டிருப்பர்களாயிற்று. இங்கு ஈட்டில் நம்பிள்ளை அருளிச் செய்வது பாரீர்;—"உத்தரபூமியிலே லோகஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியாநிற்க, இங்குத்தையானொருவன் அங்கேறச்செல்ல, 'பிள்ளாய் தக்ஷிணபூமியில் விசேஷமென்?' என்று கேட்க, 'திருவாய்மொழி யென்றொரு ப்ரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக் கொண்டாடிக்கொடு போராநின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவதொரு சந்தை சொல்லிக்காணாய்' என்ன, '* ஆராவமுதே * என்கிற வித்தனையும் எனக்குப்போம்' என்ன, 'நாராயணாதி நாமங்கள்கிடக்க இங்ஙனே யொரு நிர்த்தேச முண்டாவதே! இச்சொல் நடையாடுகிற தேசத்தேறப் போவோம்' என்று அப்போதே புறப்பட்டுப்போந்தார்."

அடியேனுடலம் நின்பாலன்பாயே—ஆழ்வார் இப்போது அடியேனென்கிறது தம்முடைய ஸ்வரூப முன்னபடியை நினைத்துச் சொல்லுகிறதன்று; ஆராவமுதே என்று பேசியநுபவித்த போக்யதைக்குத்தோற்று அடிமைபுக்கு அடியேனென்கிறார். [உடலம் அன்பாய்] அசேதநமான சரீரமானது பகவத் விஷயத்திலே அன்புதானே ஒருவடிவு கொண்டாற் போலேயாயிற்று. அன்பு ஆத்மாவினுடைய தருமமே யல்லது சரீரத்தினுடைய தருமமன்று; அப்படியிருந்தும் விஷயவைலக்ஷண்யமானது அசேதநமான உடலும் ஆத்மதர்மம் கொள்ளும்படி செய்ததாயிற்று. ஆசார்யஹ்ருதயத்தில் "உடலம் ஆத்மதர்மம் கொள்ள" வென்றருளிச்செய்தது இப்பாசுரம் நோக்கியேகாணும்.

நீராய் அலைந்து—உடலம் அன்பாகி, அன்புதான் நீராய்க்கொண்டு அலையாநின்றது. இங்ஙனே கரைந்து உருகும்படி செய்பவன் எம்பெருமானேயாயிற்று. அவனுடைய நிலைமைதான் என்னென்னில்; [நெடுமாலே!] ஆழ்வாருக்கு எம்பெருமானளவிலே யுண்டான வ்யாமோஹம் அற்பமென்னும்படியாய் எம்பெரு

மானுக்கு ஆழ்வாரளவிலே யுண்டான வ்யாமோஹம் கெடிதாயிருந்தது. 'பெரிய பித்துக்கொள்ளி' என்னும்படியானான் அவன்.

ஆழ்வார் இங்ஙனே உருகிப் பேசும்படி எந்த திருவுருவத்தைக் கண்டாரென்னில், அது சொல்லுகிறது பின்னடிகளில். மிகவும் கனத்து அசைந்து வருகிற செந்நெற்கதிர்கள் சாமரை விசுமாபோலேவீச, * செல்வம்மல்கு தென்திருக்குடந்தையில் திருமேனியழகு நிறம் பெறும்படி திருக்கண்வளர்ந்தருளும் பெருமானே! உனது கிடையழகுகண்டு இப்பாடு படுகின்றேனென்றாராயிற்று.

[சீரார் செந்நெல்] "செந்நெலுக்குச் சீர்மையாவது — ஆராவமுதாழ்வார்க்கு அமுதுபடியாகிற சீர்மை" என்பர் நம்பிள்ளை. அர்ச்சாவதாரத்திலே எம்பெருமானுடைய திருப்பவளத்துக்குப் பாங்காக நிவேதனமாகப் பெறுகிற சீர்மை செந்நெற்பயிர்களுக்காம்.

ஏரார்கோலம் திகழ="நாட்டார் உலாவித் திரியும்போது அவயவங்களிலுண்டான பொல்லாங்குகள் மறைந்து ஒன்று போலேயிருக்கும்; ஓரிடத்திலே இருத்தல் கிடத்தல் செய்தவாறே வைரூப்யம் தோற்றிக் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி யிருப்பர்கள்; இங்கு அங்ஙனன்றிக்கே கிடந்த கிடைக்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படியிருக்கை. இவனுணரில் செய்வதென்! என்று வயிறு பிடிக்கவேண்டும்படியிருக்கை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. (க.)

**எம்மானே! என்வெள்ளைமூர்த்தி என்னையாள்வானே! ***
**எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாயெழிலேறே! ***
**செம்மாகமலம்செழுநீர்மிசைகண்மலரும் திருக்குடந்தை ***
**அம்மாமலர்க்கண்வளர்கின்றானே என்நான்செய்கேனே? (உ)**

| | |
|---|---|
| எம்மானே | எல்லாவிதத்திலும் மஹானானவனே! |
| என் வெள்ளை மூர்த்தி | என்னை ஈடு படுத்திக்கொண்ட பரிசுத்தஸ்வரூபனே! |
| என்னை ஆள்வானே | என்னை அடிமை கொள்பவனே! |
| வேண்டும் ஆற்றால் | திருவுள்ளமான படியே |
| எம் மா உருவும் ஆவாய் | எப்படிப்பட்ட அவதார விக்ரஹங்களையும் பரிக்ரஹிப்பவனே! |
| எழில் ஏறே | அழகிற்சிறந்தவனே! |
| மா செம் கமலம் | பெரிய செந்தாமரைகள் |
| செழு நீர் மிசை | அழகிய நீரினிடத்து |
| கண் | கண்டவிடமெங்கும் |
| மலரும் | மலரப்பெற்ற |
| திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| அ மா மலர் கண் வளர்கின்றானே | அப்படிப்பட்ட சிறந்த மலர்போன்ற திருக்கண்கள் துயில்பவனே! |
| நான் என் செய்கேன் | நான் என்ன பண்ணுவேன்! [இவ்வழகுகண்டு என்னால் தரிக்கப்போகிறதில்லையே!] |

* * * [எம்மானே!.] கீழ்ப்பாட்டில் "கண்டேனெம்மானே!" என்ற ஆழ்வாருடைய கருத்து—பிரானே! உன்னை உலகத்தார் காண்கிறரீதியிலே நானும் காணு

மித்தனையேயோ? எனக்காக எழுந்திருத்தல், இருத்தல், உலாவுதல், குசலப்ரச்னம் பண்ணியருளுதல், அணைத்தல் செய்தருள வேண்டாவோ? என்று கேட்பதாம். அங்ஙனே கருத்துத் தொனிக்கக் கூப்பிடச் செய்தேயும் ஆராவமுதன் அசையாதேயிருக்க, மீண்டுமொருபடி கூப்பிடுகிறார்.

எனக்கு ஸ்வாமியானவனே! அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனே! அப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தின் அழகைக்காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவனே!, என்னைப் போன்ற ஸம்ஸாரிகள் நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு பலவகைப்பட்ட சரீரங்களைப் பரிக்ரஹிக்குமாபோலே, நிர்ஹேதுக கருணையினாலும் திவ்யஸங்கல்பத்தாலும் வேண்டினபடியெல்லாம் அவதார ரூபங்களைப் பரிக்ரஹித்துப் பேரருள் செய்பவனே!, இங்ஙனே உபகாரமே வடிவாயிருக்கின்ற நீ இன்னமும் எனக்குச்செய்யவேண்டிய உபகாரங்களைச் செய்யத்தவரலாமோ? ஒன்றும் செய்ய வேண்டா; திருக்கண்களைத் திறந்து கடாக்ஷித்தருளுமித்தனை போராதோ அடியேனுக்கு. இத்திருக்கண்களுக்குப் போலியான கமலங்களெல்லாம் நீரிலே மலர்ந்திருக்கும்படியைக் காணுகின்ற நான் * வன்காற்றறைய ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்கால் கமலத்தடம்போற் பொலிந்த எம்பிரான தடங்கண்கள் இப்படி மலரவேண்டாவோ என்று துடிக்கின்றேனே, இந்தத் துடிப்பைத் தவிர்க்க வேண்டாவோ வென்கிறார்.

என்வெள்ளைமூர்த்தி = தன்னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களில் ஒன்று தப்பாமல் அனைத்தையும் வெட்ட வெளிச்சமாக எனக்குக் காட்டித் தந்தவனே! என்றபடி.

என்னையாள்வானே != * அஞ்சிறைய மடநாரை தொடங்கிப் பல பலபதிகங்களிலேயுண்டான ஆற்றாமைகளைப்போக்கி முகங்காட்டி அடிமை கொண்டவனே! என்றவாறு.

வேண்மோற்றல் எம்மாவுருவும் ஆவாய் = * இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ: * என்கிறபடியே திருவுள்ளமானபடியெல்லாம் திருமேனிகளைப் பரிக்ரஹித்து ஸாதுபரித்ராணம் பண்ணுமவனே! என்றபடி. [எழிலேறே] நம்மைப் போலே கருமமடியாகப் பிறக்கையன்றிக்கே கருணையடியாகப் பிறக்கையாலே பிறக்கேடுதானில்லாமே ஒளிமல்கப் பெறுமாயிற்று.

செம்மாகமலம் செழுநீர்மிசை கண்மலரும் = திருக்குடந்தை வயல்களிலே தாமரைமலரக் காண்கிறேன்; எம்பெருமானுடைய திருக்கண்தாமரை அந்தோ! மலரக் காண்கின்றிலேனே! என்று தளர்கின்றார்.

என்னான் செய்கேனே? = திருக்கண்கள் மலர்ந்தாலன்றித் தரிக்ககில்லாத அடியேன் இப்படியே பட்டினிகிடந்து போகவேண்டியதுதானோ என்கிறார். (உ)

**என்நான்செய்கேன்? யாரேகளைகண் என்னைஎன்செய்கின்றாய்? * உன்னாலல்லால்யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன் * கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய் அடியேனருவாணாள் * சென்னாளெந்நாளந்நாள் உனதாள்பிடித்தேசெலக்காணே. (௩)**

| | |
|---|---|
| நான் என் செய்கேன் | அடியேன் என்ன செய்வேன்! |
| களைகண் யாரே | ரக்ஷகராவார் யாவர்? |
| என்னை என் செய்கின்றாய் | என்னை என்னசெய்வதாக இருக்கிறாய்? |
| உன்னால் அல்லால் | உன்னைத் தவிர்த்து |
| யாவராலும் | வேறு ஒருவிதமான உபாயத்தாலும் |
| குறை ஒன்றும் வேண்டேன் | சிறிதும் அபேக்ஷையுடையேனல்லேன்; |
| கன் ஆர் மதில் சூழ் குடந்தை கிடந்தாய் | வேலைப்பாடு பொருந்திய மதிள்சூழ்ந்த திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே! |
| அடியேன் | அடியேனுடைய |
| அரு | ஆத்மாவானது |
| வாழ் நாள் | வாழும் காலத்தில் |
| செல் நாள் எ நாள் | கழிகின்ற நாள்கள் எத்தனையானாலோ |
| அ நாள் | அந்த நாள்களெல்லாம் |
| உன தாள் பிடித்தே | உனது திருவடிகளைப் பற்றிக்கொண்டே |
| செல | நடக்கும்படி |
| காண் | கடாக்ஷித்தருளவேணும். |

* * * [என்னான் செய்கேன்.] இப்படி துடித்துக் கூப்பிட்ட விடத்திலும் குளிர நோக்குதல் குசலப்ரச்னம் பண்ணுதல் ஒன்றும் செய்யாமையாலே, 'நம் பேற்றுக்கு ஏதேனும் உபாயம் அநுஷ்டிக்கவேணும் என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கிறான் போலும்' என்று கொண்டு 'பிரானே! நான் என்காரியம் செய்கையென்று ஒன்றுண்டோ? நீயேசெய்து தலைக்கட்டித் தரவேணும்' என்கிறார்.

முதலடியில் மூன்றுவகையான கேள்விகள் அடங்கியிருக்கின்றன; என்தலையிலே ஏதேனும் காரியம் ஏறிடுவதாக எண்ணியிருக்கிறாயோ? பிறரை ரக்ஷகராகத்தேடியோடும்படி செய்ய நினைத்திருக்கிறாயோ? நீயே செய்வதாக நினைத்திருக்கிறாயோ? என்று கேள்விகள். உன் திருவடிகளைப் பெறுகைக்கு என்னால் செய்யலாவ தில்லாமையாலே என்தலையிலே ஒன்று ஏறிடவேண்டா; நீ உன்னைத் தரப்பார்த்தாயோ? உபாயாந்தரங்களைக்காட்டி அகற்றப்பார்த்தாயோ? "என்னான் செய்கேன்" என்பதனால் 'நான் என்ன செய்வது?' என்று கேட்கிறாரல்லர்; என்னாலே ஒன்றும் செய்ய முடியாதே என்று கையை விரித்துச் சொல்லுகிறபடி.

ஸ்ரீவசனபூஷணத்தில் "என்னான் செய்கேனென்கிற விடத்திலே இம்மூன்று மூண்டு" என்ற ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். அவ்விடத்து மணவாள மாமுனிகளின் வியாக்யான ஸ்ரீஸூக்தி காண்மின்;—"எம்பெருமான் தம்முடைய ஆர்த்திகண்டு இரங்கக் காணாமையாலே தன்னைப் பெறுமிடத்தில் சில ஸாதநாநுஷ்டானம் பண்ணவேணுமென்று இருந்தானாகக்கொண்டு உபாயாந்தர

னுஷ்டானத்துக்கு யோக்யதையில்லாதபடி அஜ்ஞனான நான் என்செய்கேன்? ஜ்ஞானம் தந்தோமே யென்னில், நீதந்த ஜ்ஞானத்தாலே ஸ்வரூப பாரதந்த்ரியத்தை யுணர்ந்து ஸாதநாநுஷ்டானம் அப்ராப்தம் என்றிருக்கிற நான் என் செய்கேன்? ஸ்வரூபத்துக்குச் சேராதாகிலும் உன்னைப் பெறலாமாகில் அதுதன்னையநுஷ்டிக்கலாயிற்றேஜ்ஞானமாத்ரத்தைத் தந்தாயாகில்; பக்தி ரூபாபந்நஜ்ஞானத்தைத் தருகையாலே ஒன்றையும் அடைவுபட அநுஷ்டிக்க க்ஷமனல்லாதபடி பக்திபரவசனான நான் என் செய்கேன் என்று இம்மூன்றும் ஆழ்வார்க்கு விவக்ஷிதம்."

உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறைவேண்டேன் = உன்னுடைய க்ருபையாலே உன் திருவடிகளைப் பெறுகையொழிய வேறோருபாயத்தால் பெறுவதானாலும் வேண்டா என்றபடி. உபேயமும் உபாயமும் ஒன்றேயாயிருக்க வேணு மென்கை. 'யாவராலும்' என்று உயர்திணையாயிருந்தாலும் அஃறிணையாகவே பொருள் விவக்ஷிதம். ஸ்தக்ரியா கலாபமும் உபாயமாக வேண்டிற்றில்லை என்றபடி. இங்கே ஈடு;—"யாவையாலு மென்னாதே யாவராலு மென்கிறது—உபாயபாவம் ஒருசேதநனாலே யென்றிருக்கையாலே" என்று.

[கன்னார்மதிள் இத்யாதி.] பரிவுடையார்க்கு அஞ்சவேண்டாதபடி திடமான மதிள்சூழ்ந்த திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருள்பவனே! என்னுடைய ஆத்மவஸ்து உள்ளவளவும் உன் திருவடிகளை அவலம்பித்துக்கொண்டே கடக்கும்படி பார்த்தருளவேணும்.

அடியேன் அரு = அரூபியான வஸ்துவுக்கு அருவென்று பெயர்; உருவமுடைத்தல்லாமையாலே ஆத்மாவை அரு வென்கிறது. 'அடியேனுடைய ஆத்மவஸ்து' என்றால் அடியேனிற் காட்டிலும் வேறான ஆத்மவஸ்து இருப்பதாகத் தோற்றுகின்றதே, இது பொருந்துமோ? என்று சங்கிக்க வேண்டா; அடியேனாகிய ஆத்மவஸ்து என்றபடியாமத்தனை. "சென்னனெக்காளக்கால்" என்றது யாவதாத்மபாவி என்றபடி. ஆத்மாவுக்கு ஒருநாளும் அழிவில்லாமையாலே சாச்வதகாலமும் என்றதாயிற்று. (ந)

**செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லும்கீர்த்தியாய்! ***
**உலப்பிலானே யெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி! ***
**நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய்! உன்னைக்காண்பான்நான்**
**அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனே. (ச)**

| | | | |
|---|---|---|---|
| செல காண் கிற்பார் | மேலே மேலே காணவல்லவர்கள் | உலப்பு இலானே | அந்தத் திருக்குணங்கட்கு முடிவு இல்லாதவனே! |
| காணும் அளவும் | எவ்வளவு காண்பர்களோ அவ்வளவும் | எல்லா உலகும் உடைய | எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமியான |
| செல்லும் கீர்த்தியாய் | வளர்ந்துசெல்கின்ற திருக்குணங்களையுடையவனே! | ஒரு மூர்த்தி | ஒப்பற்ற தலைவனே! |
| | | நலத்தால் மிக்கார் குடந்தை | பக்திமிகுந்தவர்கள் வாழ்கிற திருக்குடந்தையிலே |

| | | | |
|---|---|---|---|
| கிடந்தாய் | சயனித்தருள்பவனே! | ஆகாசத்தை நோக்கி | (நீ வருதற்குரிய) வானத்தைப்பார்த்து |
| நான் உன்னை காண்பான் அலப்பு ஆய் | நான் உன்னைக்காண வேண்டி அலமந்து | அழுவன் தொழுவன் | அழுவதும் தொழுவதும் செய்யாநின்றேன். |

* * * [சேலக்காண்கிற்பார்.] பிரானே! என்போல்வார்க்காக நீ திருக்குடந்தையிலே ஸந்நிதி பண்ணியிருந்தும் நினைத்தபடி பரிமாற்றம் கிடையாமையாலே நான் நோவுபடாநின்றேனென்கிறார். முதலடியினால், நீபடைத்த புகழெல்லாம் பாழாய்ப்போகிறதேயென்று வயிறு பிடிக்கிறார். தமக்கு உதவாமையினாலே இங்ஙனே சொல்லுகிறபடி. எம்பெருமானுடைய கீர்த்திகளை [அதாவது ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை] யார் யார் எவ்வளவு பேசுகிறார்களோ அவை அவ்வவ்வளவாயிருக்கும். மந்தமதிகள் பேசப்புக்காலும் அவர்களது வாக்கிலே அடங்கி நிற்கும்; மஹாமதிகள் பேசப்புக்காலும் அவர்களது திறமைக்குத் தக்கபடி கரைகட்டாக்காவேரிபோலே பெருகிச் சென்றிருக்கும்.

உலப்பு இலானே!=உலப்பு – முடிவு ; அந்த குணவிபூதிகளினுடைய கணக்கு முடிவில்லாமலிருக்குமவனே! என்றபடி. எல்லாவுலகுமுடைய ஒரு மூர்த்தீ!=மூர்த்தியென்று திவ்யமங்கள விக்ரஹத்துக்கும் பெயர், ஐச்வர்யத்துக்கும் பெயர் ; வடிவழகைக்காட்டி எல்லாப் பிராணிகளையும் ஈடுபடுத்திக்கொள்ள வல்லவனே! என்றும், ஸகல லோகங்களுக்கும் நிர்வாஹகனான ஸர்வேச்வரனே! என்றும் பொருள்படும். என்னை நிர்வஹியாதவுனக்கு ஸர்வேச்வரனென்று பெயர் தகுமாவென்று உறுத்திச் சொல்லுகிறபடி.

நலத்தால் மிக்கார் இத்யாதி.] நான் ஸ்ரீவைகுண்டத்திலே காண ஆசைப்படுகிறேனோ? திருப்பாற்கடலிலே காண ஆசைப்படுகிறேனோ? என்றைக்கோ சென்ற ராமக்ருஷ்ணாதி அவதாரங்களிலே காண ஆசைப்படுகிறேனோ? அன்பர்களை விடமாட்டாதே திருக்குடந்தையிலே கிடக்கிற கிடையையன்றோ நான் காண வாசைப்படுகிறது! இது கிடையாமையாலே அலமந்து ஆகாசத்தை நோக்கி அழுவதும் தொழுவதும் செய்யாநின்றேன். கஜேந்திராழ்வானுக்கு உதவ ஆகாசத்தில் நின்றும் வந்து தோன்றினாப்போலே எனக்காகவும் வந்து தோன்றுகிறாயோவென்று ஆகாசத்தை நோக்குகிறேன்காண். சிறுவர்களைப்போலே அழுவது, பெரியார்களைப்போலே தொழுவது எல்லாம் செய்யாநின்றேன்.

“குடந்தைக் கிடந்தாய்! உன்னைக் காண்பான்” என்று திருக்குடந்தையில் கிடந்த கிடையைத்தானே இவர்காண ஆசைப்படுவது; நாமெல்லாரும் இது காணப் பெற்றிலோமோ? இவரும் இது காணத் தடையுண்டோ? அலமருகை எதற்காக? என்று சங்கிக்க வேண்டா; காண்கை யென்றால் நம்மைப்போலே காண்கையன்று இவர்க்கு அபிமதம்; குளிர நோக்குதல் வினவுதல் தழுவுதல் எல்லாம் செய்யப் பெறுகையே காண்கையாமிவர்க்கு. (ச)

**அழுவன்தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் ***
**தழுவல்வினையால் பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் ***
**செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்!செந்தாமரைக்கண்ணா!***
**தொழுவனேனை உனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய்.** (௫)

செழு ஒண் பழனம் } செழுமைதங்கிய நீர்நிலங்களையுடைய
குடந்தை கிடந்தாய் } திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே!
செம் தாமரை கண்ணா } செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனே!
அழுவன் தொழுவன் } அழுவேன் தொழுவேன்;
ஆடி காண்பன் } கூத்தாடிப் பார்ப்பேன்;
பாடி அலற்றுவன் } வாயாரப்பாடிப் ப்ரலாபனம் செய்வேன்;
தழு வல் வினையால் } என்னைத் தழுவிக்கொண்டிருக்கிற வலிய பாவத்தினாலே
பக்கம் நோக்கி } (எந்தப்பக்கமாக நீவருகிறாயோவென்று) பக்கந்தோறும் பார்த்து (எங்கும் வரக்காணாமையாலே)
நாணி கவிழ்ந்து இருப்பன் } வெட்கப்பட்டுத் தலைகவிழ்ந்திருப்பேன்;
தொழுவனேனை } மிகுந்த அநுவருப்பையுடையனான என்னை
உன தாள் சேரும் வகையே } உன் திருவடியடையுமாறு
சூழ் கண்டாய் } உபாயசிந்தை பண்ணவேணும்.

* * * [அழுவன் தொழுவன்.] பிரானே! உன் கண்ணழகிலே யீடுபட்டுப் பலவகை ப்ரவ்ருத்திகளும் பண்ணினவிடத்திலும் பயன் பெற்றிலேன்; உன் திருவடிகளைச் சேரும்படி நீயே பார்த்தருளவேணுமென்கிறார்.

அழுவன் தொழுவன்—சிறுவர் அழுகையினாலேயே எதையும் ஸாதிப்பர்கள்; அறிவுடையார் தொழுகையினாலேயே எதையும் ஸாதிப்பர்கள்; இருவர் படியையும் நான் ஏறிட்டுக்கொண்டு அழுவதும் தொழுவதும் செய்தாயிற்று. ஆடிக்காண்பன்—“இத்தனை சோறிடுகிறோம்; ஆடுகிறாயா?” என்றால், பெரும் பசியாளர் ஆடுவதுண்டே; அப்படி ஆடியும் பார்ப்பேன். பாடியலற்றுவன் = சித்தப்ரமம் கொண்டவன் பாடுவதும் அலற்றுவதும் செய்யுமாபோலே அவையும் செய்யாநின்றேன்.

தழுவல்வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன் = இங்கே வல்வினையென்று காதலைச் சொல்லுகிறது; வல்வினையின் பயனாக வுண்டான காதல் என்றபடி. அபேக்ஷித்தபடி ஸித்தியாமையாலே காதலை வல்வினையாகக் கருதினாராயிற்று. என்னைத் தழுவி விடாதே நிற்கிற காதலாகிற ப்ரபல பாபத்தாலே, நீ வருவதாக நினைத்துப் பக்கங்களிலே பார்த்து, வந்து காட்சிதரக் காணாமையாலே லஜ்ஜையோடே கவிழ்தலையிட்டிருப்பேன்-தலைகவிழ்ந்து நிற்பேன்.

தமக்கு ஆகவேண்டிய காரியத்தைப் பின்னடிகளால் விண்ணப்பஞ்செய்கிறார். [செழுவொண்பழன மித்யாதி.] செழுமைதங்கி அழகிய நீர் நிலைகளையு

டைய திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருள்பவனே! எனக்கு ஜீவனமான திருக்கண்களையுடையவனே! புறம்பு புகலற்று உன்னையல்லது செல்லாதபடி க்ருபணனான நான் உன் திருவடிகளைக் கிட்டுவதொரு விரகு நீயே ஆலோசித்தருள வேணுமென்றாயிற்று. (௫)

**சூழ்கண்டாயென் தொல்லைவினையையறுத்து உன்னடிசேரும்**
**ஊழ்கண்டிருந்தே* தூராக்குழிதூர்த்து எனைநாளகன்றிருப்பன்?**
**வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்! வானோர்கோமானே!***
**யாழினிசையே! அமுதே! அறிவின்பயனே! அரியேறே! (௬)**

| பதம் | பொருள் |
|---|---|
| வாழ் தொல் புகழார்குடந்தை | விளங்குகின்ற அநாதியான புகழையுடையார் வர்த்திக்கிற திருக்குடந்தையிலே |
| கிடந்தாய் | சயனித்தருள்பவனே! |
| வானோர் கோமானே | நித்யஸூரிநாதனே! |
| யாழின் இசையே | வீணாகானம்போலே பரமபோக்யனானவனே! |
| அமுதே | அமிருதம் போன்றவனே! |
| அறிவின் பயனே | அறிவுக்குப் பலனானவனே! |
| அரி ஏறே | சிங்கமும் இடபமும் போன்று சிறந்தவனே! |
| உன் அடி சேரும் ஊழ் கண்டு இருந்தே | நான் உனது திருவடிகளையடையும்படியான முறைமையைக் கண்டிருந்தும் |
| தூரா குழி தூர்த்து | ஒருநாளும் தூர்க்கவொண்ணாத இந்திரியக்குழியை நிறைத்துக்கொண்டு |
| எனை நாள் | எத்தனைகாலம் |
| அகன்று இருப்பன் | உன்னை விட்டுப் பிரிந்திருப்பேன்! |
| என் தொல்லை வினையை அறுத்து | (இப்படி அகன்றிருக்கைக்குக்காரணமான) எனது அநாதி பாபங்களைத் தொலைத்து |
| சூழ் கண்டாய் | என்னை ஸ்வீகரித்தருள வேணும். |

• ❖ [சூழ்கண்டாய்.] பிரானே! உன்னுடைய போக்யதையிலே அகப்பட்டிருக்கின்ற எனக்கு ஓர் உபகாரம் செய்தருளவேணும்; உன்னைப் பெறுதற்கு இடையூறான தொல்லைவினைகளையெல்லாம் தொலைத்தருளி உன்னைப் பெறுவதொரு நல் விரகு பார்த்தருள வேணும் என்கிறார்.

நீ எழுந்தருளியிருக்குமிடமான திருக்குடந்தையானது சிறந்த கீர்த்தியையுடையவர்களான மஹான்கள் வர்த்திக்கும்படியானது; அவர்களுடைய கீர்த்தி யாதென்னில்; உன்னைப் பெறுதற்கு விரோதியான கரும பந்தங்களெல்லாம் கழியப்பெற்றவர்கள் என்னும் கீர்த்தியாம்; அத்தகைய கீர்த்தி வாய்ந்தவர்கள் வாழுமிடத்தே நீயிருந்துவைத்து எனக்கு அந்தக் கீர்த்தியை விளைக்காதொழியத்தகுமோ? [வானோர்கோமானே!] நித்யர்களையும் முக்தர்களையும் போலே எம்மை அடிமைகொள்ள வேண்டாவோ? [யாழினிசையே அமுதே] உன்னுடைய போக்யதையை நான் அறியப் பெறாதிருந்தேனாகில் இங்ஙனே கிடந்து துடிப்பேனோ? யாழின் இசைதானே வடிவெடுத்தாற்போலேயன்றோ உன்னுடைய இனிமைதான் இருப்

பது; அமுதமும் எனக்கு நீயேயன்றோ. [அறிவின் பயனே] "ஜ்ஞாநபோதாத் அபரம் ஸுகம்" என்கிறபடியே அறிவுக்குப்பலன் ஸுகமாகையாலே என்னுடைய ஸுகமே வடிவெடுத்திருப்பவனே! என்றபடி. [அரியேறே] அரி—சிங்கம்; ஏறு—ரிஷபம். இவ்விரண்டும் சிறப்புக்கு வாசகங்கள்; 'புருஷஸிம்ஹம்' 'புருஷர்ஷபம்' என்பர்களன்றோ? மிகச்சிறந்தவனே! என்றபடி. (சு)

**அரியேறே! என்னம்பொற்சுடரே! செங்கண்கருமுகிலே!**
**எரியேய்பவளக்குன்றே! நால்தோளெந்தாய்! உனதருளே**
**பிரியாவடிமையென்னைக்கொண்டாய்! குடந்தைத்திருமாலே!**
**தரியேனினியுன்சரணந்தந்து என்சன்மங்களையாயே.** (எ)

| | | | |
|---|---|---|---|
| அரி ஏறே | சிறந்த சிங்கமே! | உனது அருளே | உனது கிருபையினால் |
| என் | நான் அனுபவித்தற்குரிய | என்னை பிரியா அடிமை கொண்டாய் | என்னை அத்தாணிச் சேவகங் கொண்டவனே! |
| அம் பொன் சுடரே | அழகிய பொன்போன்ற ஒளியுருவனே! | குடந்தை திருமாலே | திருக்குடந்தையில் வாழும் திருமாலே! |
| செம் கண் கரு முகிலே | சிவந்த கண்களையுடைய காளமேகம் போன்றவனே! | இனி தரியேன் | இனிமேல் நான் தரித்திருக்ககில்லேன்; |
| எரி ஏய் பவளம் குன்றே | நக்ஷத்திர மண்டலத்தளவும் ஓங்கின பவளமலைபோன்றவனே! | உன் சரணம் தந்து | உனது திருவடிகளைக் கொடுத்தருளி |
| நால் தோள் எந்தாய் | சதுர்ப்புஜ ஸ்வாமியே! | என் சன்மம் களையாய் | எனது சரீரத்தொடர்பைத் தவிர்த்தருளவேணும். |

* * * [அரியேறே.] ப்ரானே! உன்னுடைய வைலக்ஷண்யத்தை நீயே காட்டித் தந்து அடிமையிலே என்னை ஊன்றவைத்தாயானபின்பு உன் திருவடிகளைத்தந்து தீரவேணுமன்றோ; தந்து பின்னை ஸம்ஸாரத்தைக் களைந்தொழியாய் என்கிறார். மேனாணிப்புத்தோற்ற இருக்குமிருப்பை அரியேறே! என்று விளி காட்டும். அந்த மேனாணிப்புக்குத் தகுதியான வடிவுபடைத்தவனென்கிறது அம்பொற்சுடரே! என்பது. விலக்ஷணமான பொன்போலே ஸ்ப்ருஹணீயமான ஒளியையுடையவனே! என்றபடி. வடிவின் புகரைக்காட்டி என்னை ஈடுபடுத்திக்கொண்டவனே! என்றவாறு. செங்கட்கருமுகிலே!—வாத்ஸல்யமாகிற அம்ருதத்தை வர்ஷிக்கிற திருக்கண்களையுடையவனே! என்றபடி.

எரியேபவளக்குன்றே! = எரியென்று கேட்டை நக்ஷத்ரத்திற்கு வாசகமாய் நக்ஷத்ரஸாமாந்யத்தைச் சொல்லி நிற்கும். நக்ஷத்ரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கிற பவளக்குன்றுபோலே [பவழமயமான மலைபோலே] விலக்ஷணமான வடிவு படைத்தவனே!. உகவாதார்க்கு அபிபவிக்க வொண்ணாமையும் உகந்தார்க்குப் பரமபோக்யனாயிருக்கையும் இத்தால் நினைக்கிறது. நால்தோளெந்தாய்! = கல்பக தரு பணைத்தாற்போலேயிருக்கிற திருத்தோள்களைக்காட்டி என்னை அநந்யார்ஹ

சேஷப்படுத்திக்கொண்டவனே! என்கை. எம்பெருமானுடைய திருத்தோள்கள் நம்மாழ்வாருடைய திருவாக்கில் நுழைந்து புறப்பட்டவாறே விலக்ஷணமானவொருபெருமைபெறும். ஐயங்கார் திருவரங்கக் கலம்பகத்தில் "அருமறைதுணிந்த பொருள் முடிவையின் சொலமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொற்பெற்றுயர்ந்தன —அழகிய மணவாளர் கொற்றப்புயங்களே" என்று பணித்ததுகாண்க. உனதருளே பிரியாவடிமை யென்னைக் கொண்டாய் = உன்னுடைய க்ருபையாலே மாத்திரம் என்னை அத்தாணிச் சேவகத்திற்கு ஆளாக்கிக்கொண்டவனே.! குடந்தைத்திருமாலே! — என்னைமாத்திர மன்றிக்கே என்போல்வாரையும் அடிமை கொள்ளுகைக்காகத் திருக்குடந்தையிலே பெரிய பிராட்டியாரோடுகூட வாழ்பவனே.! இனித்தரியேன் = இந்தச் சேர்த்தியழகை நான் காணப்பெற்ற பின்பு இனி ஆறியிருக்க விரகுண்டோ? மாதா பிதாக்கள் அருகேயிருக்க, அவர்கள் ஸ்ரீமான்களுமாய் உதாரருமாயிருக்க, ப்ரஜை பசித்துத் தரித்திருக்கமுடியுமோ? உன்சரணம்தந்து என்சன்மம் களையாய் — ப்ரஜைகளின் வாயிலே முலையைக்கொடுத்து சிகித்ஸை பண்ணுமாபோலே முன்னம் திருவடிகளைத் தந்து பின்னை ஜன்மஸம்பந்தத்தை யறுக்கவேணும் என்கிறார் போலும்.(எ)

களைவாய் துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் *
வளைவாய்நேமிப்படையாய்! குடந்தைக்கிடந்தமாமாயா!*
தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது *
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே. (அ)

| | |
|---|---|
| வளை வாய் நேமி படையாய் | வளைந்த வாயையுடைய திருவாழியை ஆயுதமாகவுடையவனே! |
| குடந்தை கிடந்த | திருக்குடந்தையிலே சயனித்தருள்கின்ற |
| மா மாயா | மஹாச்சர்யரூபனே! |
| துன்பம் களைவாய் | எனது துன்பங்களை நீ களைந்தாலும் சரி; |
| களையா தொழிவாய் | களையாவிட்டாலும் சரி; |
| களைகண் மற்று இலேன் | வேறு சரணமுடையேனல்லேன்; |
| உடலம் தளரா | உடல் தளர்ந்து |
| எனது ஆவி | என் உயிரானது |
| சரிந்து போம் போது | நிலைகுலைந்து உத்க்ரமணமடையும்போது |
| இளையாது | மெலியாமல் |
| உன தாள் | உன் திருவடிகளையே |
| ஒருங்க பிடித்து போத | ஒருமிக்கப் பிடித்துப் போரும்படி |
| நீயே இசை | நீயே திருவுள்ளம்பற்ற வேணும். |

*** [களைவாய் துன்பம்.] ப்ரபந்நர்கட்கு ஆகிஞ்சந்யம், அநந்யகதித்வம் என்ற இரண்டும் குலையாதிருக்கவேணும். உபாயாந்தரங்களில் அந்வயலேசமும் அற்றிருக்கை ஆகிஞ்சந்ய மெனப்படும். எம்பெருமான்பக்கலில் முகம் பெறுதொழியினும் பிறர்மனைதேடி யோட்டப்பாராதே "ரக்ஷித்தபோதோடு ரக்ஷியாதபோதோடு வாசியற இவ்விடமொழிய வேறுபுகலில்லை" என்கிற திண்ணிய அத்யவஸாயத்துடனிருக்கை அநந்யகதித்வமெனப்படும். அது இப்பாட்டின் முதலடியில் தெளி

வாகிறது. எனக்கு உன்னுடைய அநுபவம் கிடையாமற்போனாலும் உன் திருவடியே தஞ்சமென்று பிறந்த விச்வாஸம் குலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார். துன்பம் களைவாய், துன்பம் களையாதொழிவாய், களைகண்மற்றிலேன் = நீ சரமச்லோகத்தில் * ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடி செய்தாலும் செய், தவிர்ந்தாலும் தவிர்; உன்காரியத்தில் நீ எப்படியிருந்தாலும், என் காரியத்தில் நான் நிஷ்டை குலையமாட்டேன். வளைவாய் நேமிப்படையாய்— *கஃமேல் வினைகடிவான்—எப்போதும் கைகழலாநேமியான் * என்றன்றோ எம் போல்வாருடைய உறுதியிருப்பது. உன் கையிலே ஆயுதமிருந்தும் துன்பம் களையாதிருத்தல் தகுதியோ? குடந்தைக்கிடந்த மாமாயா திருக்குடந்தையிலேவந்து ஆச்சரியமான அழகோடே திருக்கண்வளர்ந்தருளுகிறது எதற்காக?

தளராவுடலம் = 'உடலம் தளர' என்று அந்வயிப்பது. தளரா வென்பது செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம்; தளர்ந்து என்றபடி. எனது சரீரமானது கட்டுக்குலைந்து என் பிராணன் முடிந்து போமளவு இதுவாயிற்று. [இளையாது இத்யாதி.] அபேக்ஷிதம் பெறுகிறேன், இல்லை, அது தனிப்பட்ட விஷயம். நான் உன் திருவடிகளைப் பற்றின பற்று கெகிழாமற் பண்ணியருளவேணும். அநுபவம் பெறுமையாலே அதுக்கடியான உபாயாத்யவஸாயமும் குலைகிறதோவென்று அஞ்சி அது குலையாதபடி பார்த்தருள வேணுமென்றாராயிற்று. ஒருங்க—நிரந்தரமாக என்றபடி. (அ)

**இசைவித்தென்னை யுன்தாளிணைக்கீழ் இருத்துமம்மானே!***
**அசைவிலமரர்தலைவர்தலைவா! ஆதிப்பெருமூர்த்தி!***
**திசைவில்வீசுஞ்செழுமாமணிகள்சேரும் திருக்குடந்தை***
**அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்! காணவாராயே. (கூ)**

| | |
|---|---|
| என்னை | நெடுநாள் விமுகனாயிருந்த வென்னை |
| இசைவித்து | அடிமைக்கு இசையும்படி செய்து |
| உன் தாள் இணை கீழ் | உனது உபயபாதங்களின் கீழே |
| இருத்தும் அம்மானே | தங்கும்படி செய்தருளின ஸ்வாமியே! |
| அசைவு இல் அமரர் தலைவர் | நித்யஸூரிகளுக்குள் தலைவரான அநந்தகருடவிஷ்வக்ஸேனர்களுக்கும் |
| தலைவா | முதல்வனே! |
| ஆதி பெரு மூர்த்தி | ஸகலஜகத்காரணபூதமான திவ்ய விக்ரஹத்தையுடையவனே! |
| திசை வில் வீசும் செழு மா மணிகள் சேரும் | எங்கும் ஒளி வீசுகின்ற மிகச்சிறந்த ரத்னங்கள் சேருமிடமான |
| திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| அசைவு இல் | ஓய்வில்லாதபடி [அநவரதம்] |
| உலகம் பரவ | உலகமெல்லாம் துதிக்கும்படி |
| கிடந்தாய் | சயனித்தருள்பவனே! |
| காண வாராய் | நான்கண்டு அநுபவிக்கும்படி வரவேணும். |

* * * [இசைவித்தென்னை.] கண்ணாலே காணலாம்படி வரவேணு மென்கிறார். இதின் முதலடியில் ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரம் பொதிந்து கிடக்கிறது. ஆசார்ய ஹ்ருதயத்தில் "மதியாலிசைந்தோ மென்னும் அநுமதீச்சைகள் இருந்துவ மென்னுதலென்னை யிசைவித்த வென்னிசைவினது" என்ற சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம். இதன் கருத்தாவது—ஆழ்வார்க்கு எம்பெருமான் திறத்திலே யுண்டான ஆபிமுக்யம் எம்பெருமானுடைய க்ருஷியினாலேயே உண்டானதத்தனை. * வைத்தேன் மதியாலெனதுள்ளத்தகத்தே * என்று தமக்கு அநுமதியிருப்பதாகச் சொல்லியிருக்கிறாரே ஆழ்வார்; * யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் * என்று தமக்கு இசைவும் இருப்பதாகச் சொல்லியிருக்கிறார்; அந்த அநுமதியும் இச்சையும் பகவத் விஷயீகாரத்தைக்குறித்து ஹேதுவானாலோ வென்னில்; ஆகாது. அவையும் எம்பெருமானுடைய க்ருஷிபலமென்னுமிடம் * யானொட்டி யென்னுளிருந்துவ மென்றிலன் * இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழிருத்து மம்மானே * என்னிசைவினை * என்பது முதலான தம்முடைய அருளிச்செயல்களினாலேயே விளங்கு மென்றபடி.

இசைவித்து என்னை என்கையாலே கெடுகாள் திருவடிகளைவக்கு இசையாதிருந்த தம்மை எம்பெருமான்தானே வருந்தி யிசைவித்தமை ஸ்பஷ்டமாகவிளங்கும். திசைவில்வீசும் செழுமாமணிகள் என்று திருமழிசை யாழ்வார்போல்வாரைச் சொல்லுகிறதென்று ஸம்ப்ரதாயம். திசைகள்தோறும் பரந்த புகழையுடைய மஹாஜ்ஞாதாக்கள் சேருமிடமான திருக்குடந்தை யென்கை. இங்கே பட்டுஸ்ரீஸூக்தி:—"ஆராவமுதாழ்வார் திருமழிசைப்பிரான் போல்வார் புருஷரத்னங்கள் சேரும் திருக்குடந்தை யென்று நிர்வஹிப்பர்கள்" என்று. (௯)

வாராவருவாய்வருமென்மாயா! மாயாமூர்த்தியாய்! *
ஆராவமுதாய் அடியேனாவி அகமேதித்திப்பாய் *
தீராவினைகள்தீரஎன்னையாண்டாய்! திருக்குடந்தை
யூரா! * உனக்காட்பட்டும் அடியேனின்னு முழல்வேனோ? ௧௦.

| | |
|---|---|
| வாரா | திருவுருவத்தோடு வாராமல் |
| அரு ஆய் வரும் | அருபியாய் உள்ளேவந்து தோன்றுகின்ற |
| என் மாயா | என் மாயவனே! |
| மாயா மூர்த்தியாய் | ஒருகாலும் அழியாத திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையவனே! |
| ஆரா அமுது ஆய் | எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபிறவாத அமிருதமாய்க்கொண்டு |
| அடியேன் ஆவி அகமே தித்திப்பாய் | என் உள்ளுக்குள்ளே தித்தித்திருக்குமவனே! |

| | |
|---|---|
| தீரா வினைகள் தீர | தொலையாத பாவங்களும் தொலையும்படியாக |
| என்னை ஆண்டாய் | அடியேனை ஆண்டருளினவனே!. |
| திருக்குடந்தை ஊரா | திருக்குடந்தைப்பதியோனே! |
| அடியேன் | அடியேன் |
| உனக்கு ஆள்பட்டும் | உனக்கு அடிமைப் பட்டும் |
| இன்னம் உழல்வேனோ | இன்னமும் கிலேசப்படுவேனோ! |

* * * [வாராவருவாய்.] திருக்குடந்தையிலே புகவே நம் அபேக்ஷிதங்களெல்லாம் பெறலாமென்று புக்க ஆழ்வார் அங்ஙனம் பெறாமையாலே இன்னம் எத்தனை யிடம் தட்டித் திரியக்கடவேனோவென்கிறார். வாரா அருவாய் வரும் = கண்ணுக்கு விஷயமாகி வாராதே அருபித்ரவ்யமாய் வருகிறவனே! என்கை. வெளியில் கண்ணாலேகண்டு அநுபவிக்க வாராதே, மறந்துபிழைக்கவு மொண்ணாதபடி அந்தரங்கத்திலே அரூபியாய்க்கொண்டு ப்ரகாசிக்கிற ஆச்சர்யபூதனே!. மாயமூர்த்தியாய் = ஒருபோதும் ஒருவிதமான விகாரத்தைப் பண்ணாத வடிவுபடைத்தவனே!. கருமமடியான விகாரம் இல்லையென்கிறதத்தனை; ஆச்ரிதர் திறத்தில் அநுக்ரஹமடியாக விளையும் விகாரம் சாஸ்த்ரவரம்புக்குக் கட்டுப்பட்டதன்றே. ஆராவமுதாய் அடியேனுவியகமே தித்திப்பாய்! = எல்லார் வாயிலும் ஆராவமுது என்று வருகிறாப்போலேயோ என்வாயிலும் வருகிறபடி! * உளங்கனித்திருக்குமடியவர்தங்கள் உள்ளத்துளூறிய தேனை * என்னுமாபோலே என்னுடைய அந்தரங்கமகப்படத் தித்திக்கும்படியை நானென்சொல்லேனென்கிறார்.

[தீராவினைகள் இத்யாதி.] அநுபவித்தே தொலைக்கவேண்டிய வினைகளும் தொலையுமாறு என்னையடிமை கொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலே வந்து நித்ய ஸந்நிதி பண்ணியிருக்குமவனே! ஸம்ஸாரிகளை அநுபவிப்பிக்கவந்து கிடக்கிற வுனக்கு ஆட்பட்டும் இன்னும் என் ஆர்த்தி தீரப்பெற்றதில்லையே. இன்னமெத்தனை திருப்பதிகள் புக்குத் தட்டித் திரியக்கடவேனாகத் திருவுள்ளமோ? தெரியவில்லையே என்கிறார்.

நான்காமடியின் முதற்சொல் ஊரா! என்றும் ஊராய்! என்றும் இருவகையினும் பொருந்தும். ஊரன் என்பது விளியுருபு ஏற்றால் 'ஊரா' என்றாகும்; ஊரான் என்பது விளியுருபு ஏற்றால் ஊராய் என்றாகும். (௧0)

உழலையென்பின்பேய்ச்சிமுலையூடு அவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே. (௧௧)

| பதம் | பொருள் |
|---|---|
| உழலை என் பின் பேய்ச்சி | உழல்தடிபோன்ற எலும்பு களையுடையவளான பூதனையினுடைய |
| முலை ஊடு | முலைவழியாக |
| அவள் உயிரை உண்டான் | அவளது உயிரைமுடித்த பெருமானுடைய |
| கழல்கள் அவையே | திருவடிகளையே |
| சரண் ஆக கொண்ட | சரணமாகப்பற்றின |
| குருகூர் சடகோபன் | ஆழ்வார் |
| குழலின் மலிய | குழலோசையிற் காட்டிலும் இனிதாக |
| சொன்ன | அருளிச்செய்த |

| | | | |
|---|---|---|---|
| ஓர் ஆயிரத்துள் | ஒப்பற்ற ஆயிரத்தினுள்ளே | வல்லார் | அதிகரிக்கவல்லவர்கள் |
| இப்பத்தும் | இப்பதிகத்தை | மான் ஏய் நோக்கியர்க்கு | மான்போன்ற நோக்கையுடைய திவ்யாப்ஸரஸ்ஸுக்களுக்கு |
| மழலை தீர | தமது அறியாமை தொலையும்படி | காமர். | ஆதரிக்கத்தக்கவராவர். |

* * * [உழலையென்பின்.] இப்பதிகம் பழுதறக் கற்கவல்லார் காமிநிகளுக்குக் காமுகர்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவர் என்று பலனுரைத்துத் தலைக்கட்டுகிறார். பூதனைமுலையுண்டு அவளை முடித்து விரோதிநிரஸநசீலனென்று புகழ்பெற்ற கண்ணபிரானுடைய திருவடிகளையே தஞ்சமாகக்கொண்ட ஆழ்வார், திருக்குழலோசையிற் காட்டிலும் அதிசயித்ததாப்படி யருளிச்செய்த ஆயிரம் பாசுரத்தில் இப்பத்தையும் ஊற்றத்துடனே சொல்லவல்லார்களை எம்பெருமானும் ஸ்ரீவைஷ்ணவர்களும் மேல்விழுந்து போக்யராகக்கொள்வர்கள் என்றதாயிற்று.

மூலத்தில் "காமர்மானேய் நோக்கியர்க்கு" என்று இவ்வளவே யிருப்பதால் மானேய் நோக்கியரான ஸ்த்ரீகளுக்கு விரும்பத்தக்கவராவர் என்று பொருள்பட வேண்டாவோவென்று சங்கிக்கலாகாது. * தூராக்குழி தூர்த்து எனைநாளகன்றிருப்பன் * என்று நாலு பாசுரங்களுக்குமுன்னே அருளிச்செய்த பரமவிரக்தாக்ரேஸரரான ஆழ்வார் அதற்குப் பொருந்தாதபடி பலச்ருதி சொல்லார். ஆகவே, அது உவமையாகக் காட்டினதத்தனை. உவமைக்கு வாசகமான சொல் இல்லையேயென்று கேட்கவேண்டா; * தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே * என்றதுகாண்க. தாமரைபோன்ற திருவடிகளைச் சொல்லவேண்டுமிடத்துத் தாமரையென்றே சொன்னது போலவாம். அன்றியே, திருநாட்டிலுள்ள அப்ஸரஸ்ஸுக்களால் விரும்பி ஆதரிக்கப் பெறுவர்கள் என்றுமாம். இது எளிதான பொருளென்று பதவுரையில் காட்டப்பட்டது. (கக)

எட்டாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம். நம்பிள்ளை திருவடிகளேசரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலி.

நிஸ்ஸீமஹித்யாம்ருதத்வாத் ஸ்வவசஜநிதயாநந்யபாவப்ரதாநாத்
மர்யாதாதீதகீர்த்யா நலிநநயநதோ நாயகத்வாத் ஸுராணும்
ஸர்வச்ரேஷ்ட்யாதியோகாத் அநிதரகதிதாத்யாவஹாஸக்தபாவாத்
தாஸ்யே ஸ்வே ஸ்தாபயேத் ஸ்வாந் ஹரிரிதி சடஜித் ஸ்தாபயாமாஸ க்ருஷ்ணம்.

எம்பெருமான் அடியார்களைத் தனது அடிமைத்தொழிலிலே மிகவும் ஈடு படுத்துகிருனென்னுமிடம் * ஆராவமுதே யென்கிற திருவாய்மொழியில் அருளிச் செய்யப்பட்ட தென்கிருர்.

1. நிஸ்ஸீமஹித்யாம்ருதத்வாத். * ஆராவமுதே * எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாதபடியான போக்யவஸ்துவா யிருக்கை.

2. ஸ்வவச ஜநிதயா. * எம்மாவுருவும் வேண்டுமாற்ருலாவாய் * இஷ்டப் படி எத்தனை யவதாரங்களும் செய்யவல்லனுகை.

3. அநந்யபாவப்ரதாநாத். * உன்னுலல்லால் யாவராலு மொன்றுங் குறை வேண்டேன் * அடியார்களுக்கு அநந்யபாவத்தைக் கொடுப்பவனுகை.

4. மர்யாதாதீத கீர்த்யா. * செலக்காண்கிற்பார் காணுமளவுஞ் செல்லுங் கீர்த்தியாய் * எல்லைகடந்த கீர்த்தியையுடையவனுகை.

5. நளிநநயந: * செந்தாமரைக்கண்ணு * தாமரைபோன்ற திருக்கண் களையுடையனுகை.

6. ஸுராணும் நாயகத்வாத். * வானேர் கோமானே * நித்யஸூரிநாதனுகை.

7. ஸர்வச்ரைஷ்ட்யா தியோகாத். * அரியேறே * புருஷச்ரேஷ்டனுயிருக்கை. ஆதிசப்தத்தாலே * தீம்பொற்சுடர் முதலானவை கொள்க.

8, 9, 10. அநிதரகதிதாத்யாவஹாஸக்தபாவாத். * களைவாய்துன்பம் தொடங்கி மூன்றுபாசுரங்களின் தாற்பரியம் ஸங்க்ருஹீதம். அநந்யகதித்வத்தை யுண்டாக்குகை எட்டாம்பாட்டில் சொல்லிற்று. ஆதி சப்தத்தாலே * இசை வித்துத் தாளிணைக்கீழிருத்துகையாகிற ஒன்பதாம் பாட்டிலர்த்தம் சொல்லிற்று. 'ஆஸக்தபாவாத்' என்று * திருக்குடந்தையூராய் * என்கிற பத்தாம்பாட்டி லர்த்தம் சொல்லிற்று.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் திருவடிகளேசரணம்.

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஆச்வாஸலப்தத்ருதிநா மதவஸா-ஸமேத்ய
ஸ்ரீகும்பகோணசயம் அப்ரதிமாபிரூப்யம்,
ஆலோக்ய யோந்த்விநவச'பரிரம்பணாதீந்
அப்ராப்தவாந் முனிரகித்யத ஸோஷ்டமேந.

(கருத்து). திருக்குடந்தையிலே நமக்குப்பேறு பெறுவிப்பதாக எம்பெருமான் திருவுள்ளம்பற்றி யிருக்கக்கூடுமென்று ஒருவாறு துணிந்து தேற்றமடைந்த ஆழ்வார் திருக்குடந்தையிலே போந்து அங்கே ஒப்பற்ற அழகுடன் சயனித்தருளாநின்றபடியைக்கண்டும், குசலப்ரச்நம்பண்ணுதல் தழுவுதல் ஒன்றும் செய்யப்பெறுமையாலே ஆழ்வார் எட்டாந்திருவாய்மொழியில் க்லேசித்தாரென்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஆரா வமுதாழ்வா ராதரித்த பேறுகளைத்
தாராமையாலே தளர்ந்து மிகத்—தீராத
ஆசையுட னாற்றாமை பேசி யலமந்தான்
மாசறுசீர் மாறனெம் மான்.

| | | | |
|---|---|---|---|
| எம்மான் | அஸ்மத்ஸ்வாமியும் | மிக தளர்ந்து | மிகவும் நெஞ்சுசிதிலப்பட்டு |
| மாசு அறு சீர் | குற்றமற்ற திருக்குணங்களை யுடையவருமான | தீராத ஆசையுடன் | அநுபவத்தாலல்லது தீராமட்டாத அபிநிவேசத்தாலே |
| மாறன் | ஆழ்வார் | ஆற்றாமை பேசி | தம்முடைய ஆற்றாமையை வெளியிட்டு |
| ஆதரித்த பேறுகளை | (திருக்குடந்தையிலே)தாம் ஆசைப்பட்ட பேறுகளை | அலமந்தான் | வருந்தினர். |
| ஆராவமுதாழ்வார் தாராமையாலே | ஆராவமுதப் பெருமான் அருள் செய்யாமையாலே | | |

திருக்குடந்தையெம்பெருமான்பக்கலிலே ஆழ்வார் விரும்பின பேறுகளாவன — குளிர நோக்குதல், குசலப்ரச்னம் பண்ணுதல், தழுவுதல் முதலியன. அவற்றை ஆராவமுதன் தந்தருளாமையாலே ஆழ்வார் மிகவும் தளர்ந்து தம்முடைய ஆற்றாமையைப் பேசினாராயிற்று இத்திருவாய்மொழியில். திருக்குடந்தையெம்பெருமானுக்கு 'ஆராவமுதாழ்வார்' என்றே ஸம்பிரதாயத்திருநாமம். "ஆராவமுது, ஆழ்வாராதரித்த பேறுகளைத்தாராமையாலே" என்று சிலர் பிரித்துப் பொருள்கூறுவது சிறிதும் பொருந்தாது.

ஜீயர்திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# அஞ்சாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி.

## மானேய்நோக்குநல்லீர்.



**உரையவதாரிகை:—** இத்திருவாய்மொழியில் திருக்குடந்தையிலே தளர்ந்தார். அங்குநின்றும் திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதியேறப் போகவொருப்பட்டு, அங்குப் போகவும்முடியாமே அவ்வூர்க்கு அருகிலிருந்த ஊரில், சோலைகளும் அங்குள்ள பரிமளத்தைக்கொய்து கொண்டு புறப்படுகிற தென்றலும் வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும் வைதிகாநுஷ்டான கோலாஹலங்களும் மற்றுமுண்டான ஸம்ப்ரமங்களுமெல்லாம் தம்மை மிகவும் நலிய, அவற்றாலுண்டான நோவுபாட்டைத் தோழிமாரைக் குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாகப் பேசுகிறது இத்திருவாய்மொழி.

**மானேய்நோக்குநல்லீர்! வைகலும்வினையேன்மெலிய ***
**வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் ***
**தேனார்சோலைகள்சூழ் திருவல்லவாழுறையும்**
**கோனை * அடியேன் அடிகூடுவதென்றுகொலோ?** க.

| | | | |
|---|---|---|---|
| மான் ஏய் நோக்கு நல்லீர் | மான் போன்ற நோக்கை யுடைய பெண்களே! | கமழும் | வாஸிக்கப்பெற்ற |
| வினையேன் | பாவியான நான | தேன் ஆர் சோலைகள் சூழ் | தேன் நிரம்பிய சோலைகளால் சூழப்பட்ட |
| வைகலும் மெலிய | எப்போதும் இளைக்கும் படியாக, | திரு வல்லவாழ் | திருவல்லவாழிலே |
| வான் ஆர் வண் கமுகும் | ஆகாசத்தை யளாவிய அழகிய பாக்கு மரங்களும் | உறையும் | நித்யவாஸம் பண்ணுகிற |
| மது மல்லிகை | மது வொழுகுகின்ற மல்லிகை மலர்களும் | கோனை அடி | ஸ்வாமியின் திருவடிகளை |
| | | அடியேன் கூடுவது என்று கொல் | அடியேன் கூடப்பெறுவது என்றைக்கோ? |

* * * [மானேய் நோக்கு.] அழகிய நோக்குடைய தோழிகளே! பிரிந்து வருந்துவதற்கே ஹேதுவான மஹாபாபத்தைப் பண்ணின நான் நாடோறும் வ்யஸநங்களால் மெலிவதற்காகவே நித்யவஸந்தமான, சிறந்த பொழில்களால் சூழப்பட்ட திருவல்லவாழிலே நித்யவாஸம் பண்ணுகின்ற ஸ்வாமியின் திருவடிகளிலே சேரப் பெறுவது என்றைக்கோ வென்கிறாள். தலைவியின் அவஸ்தாவிசேஷத்தைத்

தோழிகள் கூர்க்கப் பார்த்துக்கொண்டிருந்ததனால் 'மானேய் நோக்கு நல்லீர்!' என விளிக்கப்பட்டார்கள். மெலிய என்கிற வினையெச்சம் ஒரு வினையிலே அந்வயிக்க வேண்டும்; வானார் என்றவிடத்து 'ஆர்' என்ற வினையிலே அந்வயிக்கவுமாம், 'உறையும்' என்ற வினையிலே அந்வயிக்கவுமாம். முந்தின பக்ஷத்தில், நான் மெலிவதற்காகவே கமுகுகள் ஆகாசத்தளவும் ஓங்கியிருக்கின்றனவென்கிறாளென்க. பிந்தின பக்ஷத்தில், நான் மெலிவதற்காகவே அவன் திருவல்லவாழிலே உறைகின்றானென்கிறாளென்க. (௧)

**என்றுகொல்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்தென்செய்திரோ?**
**பொன்திகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவி ***
**தென்றல்மணங்கமழும் திருவல்லவாழ்நகருள்**
**நின்றபிரான் * அடிநீறு அடியோங்கொண்டுசூடுவதே.** ௨

| | |
|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே! |
| நீர் எம்மை நலிந்து | நீங்கள் எம்மை வருத்தப்படுத்தி |
| என் செய்தீர் | என்னகாரியம் செய்தீர்கள்! |
| தென்றல் | தென்றல் காற்றானது |
| பொன் திகழ் புன்னை | பொன்போல் விளங்குகிற தாதுகளையுடைய புன்னை மரங்களென்ன |
| மகிழ் | மகிழமரங்களென்ன |
| புது மாதவி | புதியகுருக்கத்திகளென்ன |
| மீது அணவி | ஆகிய இவற்றின் மேலே படிந்து |
| மணம்கமழும் | பரிமளத்தைவீசி உலாவுமிடமான |
| திருவல்லவாழ் நகருள் | திருவல்லவாழ்ப்பதியிலே |
| நின்ற பிரான் | நிலைபெற்றிருக்கிறஸ்வாமியினுடைய |
| அடி நீறு | ஸ்ரீபாத ரேணுவை |
| அடியோம் கொண்டு சூடுவது | அடியோம் ஸ்வீகரித்து அணிந்து கொள்வது |
| என்று கொல் | என்றைக்கோ! |

*** [என்று கொல்.] தோழிகாள்! என்ப்ரக்ருதியை அறிந்திருக்கிற நீங்கள் எனக்கு ப்ரியமானவற்றைச் சொல்லி என்னைத் தேற்ற வேண்டியது ப்ராப்தமாயிருக்க, என்னைக்கண்டிப்பதிலே ஒருப்பட்டிருப்பதனால் உங்கட்கு என்ன பயனுண்டாகும். உங்கள்வழியிலே நான் மீளப்போகிறேனென்று எண்ணமோ; அது ஒருநாளுமில்லை. திருவல்லவாழ்நகர்ச் சோலைகளிலிருந்து வீசுகின்ற நறுமணம் மிக்க தென்றலானது என்னை அவ்வழியே இழுக்க நான் உங்கள் வழியே வருவதற்கு ப்ரஸக்தியுண்டோ; அத்தலத்துப் பெருமானுடைய பாதாரவிந்த ரேணுவைச் சிரமீது அணியப்பெறவேணுமென்றன்றோ எனக்கு ஆவலிருப்பது; அதுபற்றி ஏதேனும் சொல்லவல்லீர்களாகில் சொல்லுங்கோள்; வீணாக என்னை நலிவது வேண்டா என்றாளாயிற்று. (௨)

சூடுமலர்க்குழலீர்! துயராட்டியேனைமெலியே *
பாடுநல்வேதவொலி பரவைத்திரைபோல்முழங்க *
மாடுயர்ந்தோமப்புகைகமழும் தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல் நிச்சலுமே ?

| | | | | |
|---|---|---|---|---|
| மலர் சூடும் குழலீர் | பூக்களணிந்த கூந்தலையுடைய மாதர்களே ! | | ஓமம் புகை கமழும் | ஹோமதூமங்கள் பரிமளிக்கப்பெற்ற |
| துயராட்டியேன் மெலிய | துக்கங்களை யனுபவிக்கின்ற நான் இளைக்கும்படியாக | | தண் திருவல்லவாழ் | குளிர்ந்த திருவல்லவாழிலே |
| பாடுநல்வேதம் ஒலி | பாடப்படுகின்ற ஸாமவேதகோஷமானது | | நீடு உறைகின்ற பிரான் | நித்யவாஸம் பண்ணுகின்ற எம்பிரானுடைய |
| பரவை திரை போல் முழங்க | கடலின் அலைக்கிளர்ச்சி போல் முழங்காநிற்க. | | கழல் | திருவடிகளை |
| | | | நிச்சலும் | எப்போதும் |
| மாடு உயர்ந்து | பக்கங்களிலே ஓங்கி | | காண்டும் கொல் | காணப்பெறுவோமா ! |

** [சூடுமலர்க்குழலீர்.] "எம்மைநீர் நலிந்தென் செய்தீரோ" என்னும் வாக்கியம் கீழ்ப் பாட்டிலும் மேற்பாட்டிலும் இருப்பதனாலே இப்பாட்டிலும் அதை அநுஷங்கம் செய்துகொள்ள [கூட்டிக்கொள்ள] உரியது. தோழிகாள்! நீங்கள் உங்களுக்கு அபிமதமானதைச் சூடிக்கொண்டு வாழ்வதுபோல நானும் எனக்கு அபிமதமானதைச் சூடிக்கொண்டு வாழ நினைத்தால் இதில் என்ன பிசகு? இதற்காக என்னை நீங்கள் கண்டிப்பது ஏன்? என்ன, அதற்குத் தோழிகள் 'உனக்கென்று ஒரு தனிவழியுண்டோ? எங்கள் வழியிலேதான் நீ வந்துதீரவேண்டும' என்ன; அதற்குத்தலைவி சொல்லுகிறாள்; திருவல்லவாழ்நகரிலே பரமவைதிகர்கள் கானம் செய்கிற ஸாமவேதத்தின் ஒலியும் அங்குற்ற ஹோமதூமங்களின் பரிமளமும் என்னை அவ்வழியே இழுப்பது கண்டிகோளே; அத்தலத்துப் பெருமானுடைய திருவடிகளையே அநவரதமும் கண்டுகொண்டிருக்க வேணுமென்னுங் காதலையுடைய எனக்கு அந்தக்காதல் நிறைவேற வழி சொல்லவல்லீர்களாகில் சொல்லுங்கோள் என்றாளாயிற்று. (௫)

நிச்சலும்தோழிமீர்காள்! எம்மைநீர் நலிந்தென்செய்தீரோ? *
பச்சிலைநீள்கமுகும் பலவும்தெங்கும்வாழைகளும் *
மச்சணிமாடங்கள்மீதணவும் தண்திருவல்லவாழ் *
நச்சரவினணைமேல் நம்பிரானது நன்னலமே.

| | |
|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே! |
| நீர் எம்மை நிச்சலும் கலிந்துஎன் செய்தீர் | நீங்கள் எம்மை எப்போதும் ஹிம்ஸித்து என்ன லாபமடைந்தீர்கள்! |
| பச்சிலை நீள் கமுகும் | பசுத்த இலைகளையுடைய நீண்ட பாக்கு மரங்களும் |
| பலவும் | பலாமரங்களும் |
| தெங்கும் | தென்னைமரங்களும் |
| வாழைகளும் | வாழைமரங்களும் |
| மச்சு அணி மாடங்கள் மீது அணவும் | மச்சுகளின் நிரையையுடைய மாடங்களின் மேலே தழைத்துப்பொருந்தும்படியான |
| தண் திருவல்லவாழ் | குளிர்ந்த திருவல்லவாழிலே |
| நச்சு அரவு இன் அணை மேல் | (ஆச்ரித விரோதிகளின் மேலே) நஞ்சை யுமிழ்கிற அரவாகிய இனிய படுக்கையின்மேலே சயனித்திருக்கிற |
| நம் பிரானது | எம்பெருமானுடையதாகி விட்டது (ஏதுவென்றால்) |
| நல் நலம் | (எனது) நற்சீவன். |

*** [நிச்சலும்.] தோழிகளே! என்னுடைய நற்சீவன் என் அதீனமாக இருந்தாலன்றோ நீங்கள் கண்டித்துச் சொல்லும் வார்த்தைகளுக்கு நான் செவி கொடுக்க முடியும்; அங்ஙனல்ல காண்மின். பார்க்கப் பார்க்கக் கண்ணும் நெஞ்சும் பிணிப்புண்ணும்படியான பாக்குமரங்களும் பலா மரங்களும் முதலியவை மச்சணிமாடங்களளவும் ஓங்கி விளங்கப்பெற்ற திருவல்லவாழிலே எழுந்தருளியுள்ள அனந்தசாயிக்கன்றோ என்னுயிர் அதீனமாயற்றது; இனி உங்கள் பேச்சு விலைச்செல்லுமளவன்றே என்றாளாயிற்று

உய்க்தபிள்ளை யென்கிற அரையர் இசைபாடும்போது "பச்சிலை நீள்கமுகும், பச்சிலை நீள் பலவும், பச்சிலை நீள் தெங்கும், பச்சிலை நீள் வாழைகளும்" என்று கூட்டிக்கூட்டிப் பாடுவராம்.

திருவல்லவாழில் எம்பெருமான் நின்ற திருக்கோலமேயன்றி சயனத்திருக்கோலமன்று; * திருவல்லவாழ்கருள் நின்றபிரான் * என்று மேலே இரண்டாம் பாட்டிலு மருளிச்செய்துள்ளது. இப்பாட்டில் "திருவல்லவாழ் நச்சரவினணை மேல் நம்பிரான்" என்று சயனத்திருக்கோலமாகக் கூறுகின்றாரென்று நினைக்க வேண்டா; நச்சரவினணை மேல் நம்பிரானென்றது அத்தலத்து ஸ்திதியைச் சொன்னபடியன்று; எம்பெருமானுடைய பொதுவிசேஷண மிருக்கிறபடி. * அத்தியூரான்.... அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான் * என்ற விடம்போல.

(ச)

நன்னலத்தோழிமீர்காள்! நல்லவந்தணர்வேள்விப்புகை *
மைந்நலங்கொண்டு உயர்விண்மறைக்கும் தண்திருவல்லவாழ் *
கன்னலங்கட்டி தன்னைக் கனியை யின்னமுதந்தன்னை *
என்னலங்கொள்சுடரை என்றுகொல்கண்கள் காண்பதுவே? ரு.

நல் நலம் தோழிமீர்காள் — சிறந்த நேசமுள்ள தோழிகளே!
நல்ல அந்தணர் வேள்வி புகை — வைதிக ப்ராஹ்மணர்கள் செய்யும் யாகங்களிலுண்டான புகை
மை நலம் கொண்டு — மையினுடைய நல்ல நிறத்தைக்கொண்டு
உயர் விண் மறைக்கும் — உயர்ந்த ஆகாசத்தை மறைக்குமிடமான
தண் திருவல்லவாழ் — குளிர்ந்த திருவல்லவாழிலே எழுந்தருளியிருப்பவனும்
கன்னல் அம் கட்டி தன்னை — கோதற்ற கன்னற்கட்டி போன்றவனும்
கனியை — பரிபக்குவமான பழம் போன்றவனும்
இன் அமுதம் தன்னை — இனிய அமுதமாயிருப்பவனும்
என் நலம் கொள் — என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொண்டவனும்
சுடரை — (அதனாலே)ஒளிபெற்று விளங்குபவனுமான எம்பெருமானை
கண்கள் காண்பது என்று கொல் — எனது கண்கள் காணப்பெறுவது எக்காலமோ!

* * * [நன்னலத் தோழிமீர்காள்.] தோழிகளே! உங்கள் குணங்கண்டன்றோ நான் உங்களோடு பழகியிருப்பது; நீங்கள் நன்னலத் தோழிகளல்லீரோ? தாய்மார் போலவே நீங்களும் எனக்குப் பகையாளிகளாக இருந்திகோளாகில் உங்களுக்குத் தோழிமாரென்னும் பெயர் அடுக்குமோ? திருவல்லவாழில் நல்லவந்தணர்கள் பகவத்ஸமாராதனமாக அனுஷ்டிக்கும் வேள்விகளில் தோன்றும் புகையானது ஆகாசப்பரப்பெங்கும் பரவியிருந்து என்னை வீர்க்கின்றது; இது ஒருபுறமிருக்க, அத்தலத்தெம்பெருமானுடைய அளவுகடந்த போக்யதையோ என்னை ஆத்மாபஹாரம் பண்ணுகின்றது; அந்தத் திருமூர்த்தியைக் கண்ணால் காணப்பெற்றால் போதுமென்றிருக்கிறவெனக்கு அது என்றைக்குக் கைகூடும்? சொல்லுங்கோளென்கிறாள். (ரு

காண்பதெஞ்ஞான்றுகொலோ? வினையேன்கனிவாய்மடவீர்! *
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகி யெங்கும் *
சேண்சினையோங்குமரச் செழுங்கானல் திருவல்லவாழ் *
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே. சு

கனி வாய் மடவீர் — கனிபோன்ற வாயையுடைய தோழிகளே!
எங்கும் — எங்குப்பார்த்தாலும்
பாண் குரல் வண்டினொடு — கானரூபமான மிடற்றோசையையுடைய வண்டுகளும்
பசு தென்றலும் ஆகி — புதுத்தென்றலுமாய்
சேண் சினை ஓங்கு மரம் — உயர்ந்தபணைகளையுடைத்தாய்க்கொண்டு வளருகிற மரங்களையுடைய
செழு கானல் திருவல்லவாழ் — அழகிய கடற்கரைச்சோலையையுடைத்தான திருவல்லவாழிலே நிற்கிற

| | | | |
|---|---|---|---|
| மாண்குறள் கோலம் பிரான் | சிறந்த ப்ரஹ்மசாரி வேஷத்தையுடையனான எம்பிரானுடைய | வினையேன் | பாவியாகிய நான் |
| தாமரை மலா் பாதங்கள் | தாமரைமலர்போன்ற திருவடிகளை | காண்பது | ஸேவிக்கப்பெறுவது |
| | | என்றுகொலோ | என்றைக்கோ |

• • • [காண்பது] தோழிகளே! நமதுவாய் இருக்கும்படியைப் பாருங்கள். என் வாய் வெளுத்து உலர்ந்துகிடக்க, உங்கள் வாய் தாம்பூலமருந்திச் செவ்வி பெற்றிருத்தல் தகுதியோ வென்கிற ரஸபம் கனிவாய் மடவீர்! என்கிற விளியில் தோன்றும். அன்றிக்கே, * ஏகம்துக்கம் ஸுகஞ்ச நௌ * என்கிற கணக்கிலே அவர்களும் தன்னைப்போலேயிருக்கையாலே, நீங்களும் கனிவாய் மடவாராக இருந்தவர்களன்றோ; அங்ஙனே உங்களை நான் மறுபடியும் காண்பது எப்போதோ வென்கிறாளென்னவுமாம். இக்கருத்தில், முன்னிருந்த தன்மையை யிட்டுக் கனிவாய்மடவீரென்று விளித்ததாகக்கொள்க.

நல்லமிடற்றோசையையுடைய வண்டுகளும் இளந்தென்றலும் பொருந்திய சோலைகளால் சூழப்பட்ட திருவல்லவாழ்ப்பதியிலே வாமனாவதார ஸௌந்தர்யத்தை நினைப்பூட்டிக்கொண்டு ஸேவைதந்தருளாநின்ற எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளை நான் காண்பது என்றைக்கு? நீங்கள் விரைவாகக் கூட்டி வைக்கவேணுமென்றபடி. (௬)

**பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல்? பாவைநல்லீர்! ***
**ஓதநெடுந்தடத்துள் உயர்தாமரைசெங்கழுநீர் ***
**மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்தும் திருவல்லவாழ் ***
**நாதன் இஞ்ஞாலமுண்ட நம்பிரான்தன்னை நாடொறுமே. (எ)**

| | | | |
|---|---|---|---|
| பாவை நல்லீர் | பாவைபோலே அழகிய தோழிகளே! | நாதன் | தலைவனாய் |
| ஓதம் நெடு தடத்துள் | கடல்போன்றுபெரிய தடாகங்களுக்குள்ளே | இ ஞாலம் உண்ட | இவ்வுலகங்களை யெல்லாம் ப்ரளயங்கொள்ளாதபடி காத்தவனான |
| உயர் தாமரை செங்கழுநீர் | உயர்ந்த தாமரைப்பூக்களும் செங்கழுநீர்ப் பூக்களும் | நம் பிரான் தன்னை | எம்பெருமானுடைய |
| மாதர்கள் வாள் முகமும் கண்ணும் ஏந்தும் | ஸ்த்ரீகளின் ஒளிபொருந்திய முகத்தழகையும் கண்ணழகையும் தாங்கும்படியான | பாதங்கள் மேல் அணி | திருவடிகளின் மேலே சாத்தின |
| | | பூ | புஷ்பங்களையாவது |
| திருவல்லவாழ் | திருவல்லவாழ்நகருக்கு | நாள் தொறும் தொழ கூடும் கொல் | நாடோறும் தொழ நேருமோ! |

* * * [பாதங்கள் மேலணி.] இப்பாட்டில் பாவைநல்லீர்! என்று தோழிகளை உகந்து விளித்திருக்கின்றது; ஆறாயிரப்படி யருளிச்செயல்—“ தன் மனோரதத்தை நிஷேதியாமையாலே தோழிமாரை உகந்து ஸம்போதிக்கிறாள்” என்று. ஈட்டு ஸ்ரீஸூக்தி— “இவளை நிஷேதிக்கைக்கு க்ஷமைகளன்றிக்கே ஸ்திமிதைகளா யிருந்தபடி; எழுதின பாவைபோலே யிருந்தார்கள்” என்று. கடல் போலே பெருத்திருந்துள்ள பொய்கைகளிலே வளர்ந்த தாமரைப்பூக்களும் செங்கழுநீர்ப்பூக்களும் ஸ்த்ரீகளுடைய அழகிய முகங்களோடும் கண்களோடும் ஒக்கும்படியாகவுள்ள திருவல்லவாழ்க்கருக்கு நாயகனாய் ஸமயவிசேஷங்களிலே ஸகல ஜகத்துக்கும் ரக்ஷகனானவனுடைய திருவடிகளிலே சாத்தின புஷ்பத்தை யாகிலும் ஸேவிக்கப்பெறுவோமோ வென்கிறாள். (எ)

நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்? நல்நுதலீர்! *
ஆடுறுதீங்கரும்பும் விளைசெந்நெலுமாகியெங்கும் *
மாடுறுபூந்தடம்சேர் வயலசூழ்தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் நிலம்தாவிய நீள்கழலே. (அ)

| | |
|---|---|
| நல் நுதலீர் | அழகிய நெற்றியையுடைய தோழிகளே! |
| எங்கும் | எவ்விடத்திலும் |
| ஆடு உறு தீம் கரும்பும் | ஆலையிலிட்டு ஆடுதற்குரிய இனிமையான கரும்புகளும் |
| விளை செந் நெலும் ஆகி | முதிர விளைந்த செந்நெற் பயிர்களுமாய் |
| மாடு உறு பூ தடம் சேர் | பக்கங்களில் நெருங்கிய பூத்த தடாகங்களை யுடைத்தாய் |
| வயல் சூழ் | கழனிகளாலே சூழப்பட்ட |

| | |
|---|---|
| தண் திருவல்ல வாழ் | குளிர்ந்த திருவல்ல வாழிலே |
| நீடு உறைகின்ற பிரான் | நித்யவாஸம் செய்தருளாகின்ற எம்பெருமானுடைய |
| நிலம் தாவிய நீள் கழல் | பூமிமுழுவதையு மொரு கால் அளந்துகொண்ட நீண்ட திருவடிகளை |
| நாள்தொறும் வீடு இன்றியே | நாடோறும் விச்சேதமில்லாமல் |
| தொழ கூடும் கொல் | தொழ நேருமோ! |

* * * [நாடொறும் வீடின்றியே.] இப்பாட்டில் நன்னுதலீர் என்கிறவிளியின் கருத்தாவது—திருவல்லவாழ் நாதனுக்கு நீங்கள் புருஷகாரம்பண்ண அவன் இங்கே யெழுந்தருளினால் அவன் திருவடிகளிலே தெண்டனிட்டு அதனால் நெற்றிக்கு அலங்காரமாகப்பெறும் ஸ்ரீபாத ரேணுவையுடையீர்களாக உங்களைக் காண்பேனோ? என்பதாம். ஈட்டு ஸ்ரீஸூக்தி—“அவன் வந்த வுபகாரத்துக்கு அவன் திருவடிகளிலேவிழுந்து ப்ரணாமபாம்ஸுல பாரர்த்ய லலாடைகளாக உங்களைக் காணவல்லேனோ” என்பதாம.

எப்போதும் பக்வபலமாய் அருகேயிருக்கிற பூத்த பொய்கைகளோடு சேர்ந்த வயல்சூழ்ந்த ச்ரமஹரமான திருவல்லவாழிலே அநுக்ரஹசீலனுக்

கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற எம்பெருமானுடைய ஸௌசீல்யமே வடிவெடுத்த திருவடிகளை இடைவிடாதே தொழும்படியான பாக்கியம் சேருமோ வென்கிறாள்.

கழல்வளைபூரிப்பயாம் கண்டு கைதொழக்கூடுங்கொலோ? *
குழலென்னயாழுமென்னக் குளிர்சோலையுள்தேனருந்தி *
மழலைவரிவண்டுகளிசைபாடும் திருவல்லவாழ் *
சுழலின்மலிசக்கரப்பெருமானது தொல்லருளே. (௯)

| பதம் | பொருள் |
|---|---|
| குளிர் சோலையுள் | குளிர்ந்த சோலைகளிலே |
| தேன் அருந்தி | மதுவைப் பருகி |
| மழலை வரி வண்டுகள் | மழலைத் தொனியையுடைய அழகியவண்டுகள் |
| குழல் என்ன யாழ் என்ன | வேணுகானமோ வீணாகானமோ என்னும்படியாக |
| இசை பாடும் | இசைபாடப்பெற்ற |
| திருவல்லவாழ் | திருவல்லவாழிலே |
| சுழலில் மலி சக்கரம் | சுழற்சி பொருந்திய திருவாழியையுடையனான |
| பெருமானது | ஸர்வேச்வரனுடைய |
| தொல் அருள் | இயற்கையான திருவருளாலே |
| கழல் வளை பூரிப்ப யாம் கண்டு கை தொழ கூடும் கொல் | கழல் வளைகள் பூரிக்கும்படியாக யாம் கண்டு கைதொழநேருமோ? |

*** [கழல்வளை] குளிர்ந்தசோலைகளிலே தேனைப்பருகி 'இது வேணு கானமோ? அல்லது வீணா கானமோ? என்று சந்தேகிக்குமாறு வண்டுகள் இசைபாடுமிடமான திருவல்லவாழிலே கையும் திருவாழியுமாகக் காட்சி தாரா நின்றுள்ள எம்பெருமானை அவன்றன்னுடைய திருவருளாலே யாம் கண்டு கை தொழ நேருமோ? என்கிறாள்.

பிரிவாற்றாமையால் கைவளை கழலுமென்றும் கலவியின்பத்தால் மேனி தடித்து வளை பூரிக்குமென்றும் அநுபவமாதலால் "கழல்வளைபூரிப்ப" எனப் பட்டது. பாட்டு முடிவிலுள்ள அருள் என்பதை எழுவாயாகவைத்து, அருளானது யாம் கைதொழும்படியாக, கூடுங்கொலோ என்னவுமாம். (௯)

தொல்லருள் நல்வினையால் சொலக்கூடுங்கொல் தோழிமீர்காள்! *
தொல்லருள் மண்ணும்விண்ணும் தொழநின்றதிருநகரம் *
நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ் *
நல்லருள் நம்பெருமான் நாராயணன்நாமங்களே. (௰)

| | |
|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே!, |
| மண்ணும் விண்ணும் | உபயவிபூதியிலுள்ளாரும் |
| தொல் அருள் | தனது இயற்கைத்திருவருளை |
| தொழநின்ற திருநகரம் | கொண்டாடும்படி நிற்குமிடமாய் |
| நல் அருள் ஆயிரவர் நலன் ஏத்தும் | மஹாதயாளுக்களான ஆயிரக்கணக்கான சிஷ்டர்கள் நன்மையோடு வர்த்திக்குமிடமான |
| திருவல்லவாழ் | திருவல்லவாழிலெழுந்தருளிநிற்கிற |
| நல் அருள் நம் பெருமான் நாராயணன் | மஹாக்ருபாளுவாய் அஸ்மத்ஸ்வாமியான நாராயணனுடைய |
| நாமங்கள் | திருநாமங்களை |
| தொல் அருள் நல் வினையால் | (அவனது) இயற்கைத்திருவருளாகிற ஸுக்ருதவிசேஷத்தாலே |
| சொல கூடும் கொல் | நாம் சொல்லநேருமோ ? |

*** [தொல்லருள்.] பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்ற ஐந்திலுள் அர்ச்சாவதாரமே அருள்மிக்கவிடமென்பது ப்ரஸித்தம். பரவ்யூஹங்கள் தேசவிப்ரகர்ஷத்தாலே இப்போது உபயோகப்படமாட்டாதவை; விபவங்கள் காலவிப்ரகர்ஷத்தாலே உபயோகமற்றவை; அந்தர்யாமித்வம் அதிகாரியருமையாலே பயனற்றது. அர்ச்சாவதாரம் அப்படியன்றிக்கே * பின்னானார் வணங்குமிடமாய் அருளே வடிவெடுத்ததாதலால் "தொல்லருள் மண்ணும் விண்ணும் தொழநின்ற திருநகரம்" என்றார். உபயவிபூதியிலுள்ளாரும் தொல்லருளை அநுபவிக்குமிடம் என்றபடி. இவ்விசேஷணம் இங்குத் திருவல்லவாழ்க்கு இடப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதார ஸாமாந்யத்திலே அந்வயிக்கக்கூடிய விசேஷணம் இது. அன்றியே, * மண்ணினிது போலுநகரில்லையென வானவர்கள் தாம் மலர்கள் தூய் நண்ணியுறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் * என்னுமாபோலே இவ்விடத்திற்கென்று விசேஷித்துக் கொண்டாடும் அருளைச் சொன்னதாகவுமாம்.

நல்லருளாயிரவர் நலனேத்தும் = எம்பெருமானைக்காட்டிலும் அருள்மிக்கவரான ஆயிர மந்தணாளர்கள் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வாழுமிடமென்கை. இப்படிப்பட்ட திருவல்லவாழிலே நல்ல அருளையுடையனாய் நமக்கு ஸ்வாமியாயிருக்குமவனுடைய திருநாமங்களையாவது, தோழிகளே! அவனுடைய கருணையாகிற ஸுக்ருதவிசேஷத்தாலே நாம்சொல்லி வாழக்கூடுமோ வென்றாளாயிற்று. "நல னேத்தும்" என்கிற பாடமுமுண்டென்பர். (௧௦)

நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல்
சேமங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
நாமங்களாயிரத்துள் இவைபத்தும்திருவல்லவாழ் *
சேமங்கொள்தென்னகர்மேல் செப்புவார்சிறந்தார்பிறந்தே. ௧௧.

| | |
|---|---|
| நாமங்கள் ஆயிரம் உடைய | ஸஹஸ்ரநாமங்களையுடையனான |
| நம் பெருமான் | எம்பெருமானுடைய |
| அடி மேல் | திருவடிகளின்மேலே |
| சேமம் கொள் | திண்ணிய அத்யவஸாயமுடையவரான |
| தென் குருகூர் சடகோபன் | ஆழ்வார் |
| தெரிந்து உரைத்த | ஆராய்ந்து அருளிச்செய்த |
| நாமங்கள் ஆயிரத்துள் | அவனது திருநாமம் போன்றதான ஆயிரத்தினுள்ளே |
| திரு வல்லவாழ் சேமம் கொள் தென் நகர் மேல் இவை பத்தும் | திருவல்லவாழாகிற அரணமைந்த அழகிய திருப்பதி விஷயமான இப்பத்தையும் |
| செப்புவார் | ஓதவல்லவர்கள் |
| பிறந்தே | இவ்விருள் தருமாஞாலத்தில் பிறந்திருந்தே |
| சிறந்தார் | சிறந்தவராவர். |

*** [நாமங்களாயிரம்.] இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் ஸம்ஸாரிகளாயிருக்கச்செய்தேயும் மற்றையோர்களிற்காட்டில் சிறப்புப்பெற்றாராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். திருக்கல்யாண குணங்களுக்கும் திவ்ய சரித்திரங்களுக்கும் வாசகமான ஆயிரந் திருநாமங்களையுடைய ஸர்வேச்வரன் திருவடிகளிலேயே தம்முடைய சேஷபாரங்களை யெல்லாம் வைத்தவரான ஆழ்வார் அருளிச்செய்ததாய், அந்தஸஹஸ்ரநாமம் போலவே பகவத்குண விபூதிகளை ஒழுங்குபடத் தெரிவிக்குமதான இவ்வாயிரத்தினுள் இவை பத்தையும் திருவல்லவாழ் விஷயமாகச் சொல்லவல்லவர்கள் சரீரஸம்பந்தத்தோடே யிருந்துவைத்தும் பகவதநுபவமாகிற சிறப்பையுடையராவர் என்றதாயிற்று.

சேமம் — சேஷமமென்ற வட சொல் விகாரம். (கக)

ஐந்தாம்பத்தில் ஒன்பதாந் திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம். நம்பிள்ளை திருவடிகளேசரணம்.



ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.

ஸ்வாமித்வாத் ஸம்ச்ரிதாநாமுபகரணரஸாத் ஸ்வேஷ்டஸம்ச்லேஷகத்வாத்
ஸர்வாஸ்வாதத்வபூம்நா கபடவடுதயா தாருணாபத்ஸகத்வாத்
திவ்யஸ்தாநோபஸத்த்யா ப்ரமதரிபரணாச் சாபி நாராயணத்வாத்
அத்யாஸந்ந: ச்ரிதாநாம் பவதி ஹரிரிதி ப்ராஹ காரேஸ் தநூஜ:.

திருவல்லவாழெம்பெருமான் அடியார்களுக்கு ஆர்த்தியெல்லாம் தீரும்படி அணியனாக வந்திரா நிற்கிறனென்று இத்திருவாய்மொழியில் ஆழ்வாரருளிச்செய் தாரென்கிறார்.

1. ஸ்வாமித்வாத். * திருவல்லவாழுறையுங் கோனாரை * கோனாரென்று ஸ்வாமி வாசகம். ஸ்வாமியாகையாலும்.

2. 3. ஸம்ச்ரிதாநாமுபகரணரஸாத். * நின்றபிரான் * நீடுறைகின்றபிரான் * பிரானென்று உபகாரகனைச் சொல்லுகிறதாகையாலே 'உபகரண ரஸாத்' என்றார். அடியார்களுக்கு உபகரிக்கையிலே ருசியுடையனாகையாலும். (இரண்டு பாட்டுகளைச் சேரப்பிடித்தபடி.

4. ஸ்வேஷ்டஸம்ச்லேஷகத்வாத். * நச்சரவினணைமேல் நம்பிரான் * தனக்கு இஷ்டனான ஆதிசேஷனோடு நித்யஸம்ச்லேஷ முடைமையாலும்.

5. ஸர்வாஸ்வாதத்வபூம்நா. * கன்னலங்கட்டிதன்னைக் கனியையின்னமுதந்தன்னை * ஸகலவித போக்யதையு முடையனாகையாலும்.

6. கபடவடுதயா. * மாண்குறட்கோலப்பிரான் * மாயாவாமனனாகையாலும்.

7. தாருணாபத்ஸகத்வாத். * இஞ்ஞாலமுண்ட நம்பிரான் தன்னை. * கொடிதான ப்ரளயாபத்திற்கு உதவி செய்பவனாகையாலும்.

8. திவ்யஸ்தாநோபஸத்த்யா. * ஆடுறு தீங்கரும்புமிள்யாதி. * விலக்ஷணமான திவ்யதேசத்திலே ஸந்நிஹிதனாகையாலும்.

ப்ரமத் அரிபரணாத். * சுழலின்மலி சக்கரப்பெருமான் * சுழற்சியையே இயல்வாகவுடைய திருவாழியாழ்வானை ஏந்துகையாலும்.

10. நாராயணத்வாத். * நல்லருள் நம்பெருமான் நாராயணன் * நாராயணனாகையாலும்.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் திருவடிகளேசரணம்.

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

அந்யம் மூநி: ப்ரதிஹதஸ் தத ஏவ கேதாத்
கந்தும் ப்ரவ்ருத்தமநவாபி து திவ்யதேசம்,
தத்போக்யதாமபிதத் தததிசபாதௌ
யாயாம் கதேத்யகதயந்நவமே ஸஹைந்யம்.

(கருத்து.) ஆற்றாமையின் மிகுதியினால் திருக்குடந்தையில் நின்றும் திருவல்லவாழாகிற வேறொரு திவ்யதேசத்திற்குச் செல்லவேணுமென்கிற திருவுள்ளத்தோடுகூடிய ஆழ்வார் அந்த திவ்யதேசத்தின் போக்யதையைப் பேசாநின்றுகொண்டு அத்தலத்தெம்பெருமானுடையதிருவடிகளை எப்போது ஸேவிக்கப்பெறுவேனென்று இன்னாப்போடே யருளிச்செய்தார் ஒன்பதாம்பதிகத்திலென்கை.

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாநலத்தால் மாறன் திருவல்லவாழ் புகப்போய் *
நாவிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில்—மேல்நலங்கித்
துன்பமுற்றுச் சொன்ன சொல்வுகற்பார் தங்களுக்கு *
பின்பிறக்க வேண்டா பிற.

| | | | |
|---|---|---|---|
| மாறன் தான் | ஆழ்வார் | துன்பம் உற்று சொன்ன | வருந்தி யருளிச்செய்த |
| மா நலத்தால் | மிகுந்த ப்ரேமத்தோடே | சொல்வு | ஸ்ரீஸூக்திகளை |
| திருவல்லவாழ் புக போய் | திருவல்லவாழிலே சென்று சேரப்புறப்பட்டு | கற்பார் தங்களுக்கு | கற்குமவர்களுக்கு |
| அவ் ஊர் தன் அருகில் | அத்தலத்தின் ஸமீபத்தில் | பின் | இனிமேலும் |
| இளைத்து வீழ்ந்து | தளர்ந்து விழுந்து | பிற | வேறு பிறப்புக்கள் |
| மேல் | அதற்குமேலே | பிறக்க வேண்டா | பிறக்கவேண்டியிராது (முக்திஸாம்ராஜ்யமாகும்). |
| நலங்கி | (தோழிமாருடையபரிஷேத வசனங்களாலும்) நலிவுபட்டு | | |

* * * திருக்குடந்தையிலே தம்முடைய மநோரதஸித்திபெறாத ஆழ்வார் திருவல்லவாழ் நகரிலாவது சென்று களிப்போமென்று அங்கேறச்செல்லப் புறப்பட்டு முட்ட முடியப்போகப்பெறுமே புறச்சோலையளவிலேயே தளர்ந்து விழுந்து ஆற்றாமை கரைபுரண்டு அருளிச்செய்த இத்திருவாய்மொழியைக் கற்பார்களுக்கு இனி யொருகாலும் பிறவித்துன்பம் நேராமே பேரின்பமெய்தலாகும் என்றதாயிற்று. (சகூ.)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# அஞ்சாம்பத்து — பத்தாந் திருவாய்மொழி.

## பிறந்தவாறும்.

உரையவதாரிகை :— கீழ்த் திருவாய்மொழியில் — திருவல்லவாழிலே சென்று சேர்ந்து அங்குறையும் பெருமானோடே பரிமாறவேணுமென்று மநோரதித்துக்கொண்டு சென்று கால்கடை தாராமல் நடுவழியிலே விழுந்து கிடந்து கூப்பிட்டார். * கோவிந்தன் குணம்பாடி... ஆவி காத்திருப்பேனே * என்கிறபடியே குணாநுபவம்பண்ணித் தரிப்பதென்று ஒன்றுண்டே; அப்படியாகிலும் தரிப்போமென்று பார்க்கையில் அதுதானும் அரிதாய் சைதில்யத்தை விளைப்பிக்க, பிரானே! உன்னைப்பிரிந்து நோவுபட்டாலும் தரித்துநின்று குணாநுபவம் பண்ண வல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்று அவன் திருவடிகளிலே சரணம் புகுகிறார் இத்திருவாய்மொழியில்.

——அர்ச்சாவதாரங்களிலே தம் அபேக்ஷிதம் பெற ஆசைப்பட்டவர் அவ்வாசை நிறைவேறப்பெறுமையாலே விபவாவதாரங்களிலே செல்லுகிறார். இது பொருந்துமோ? விபவாவதாரங்களை யிழந்தார்க்கும் இழவு தீரவன்றோ அர்ச்சாவதாரம் அமைந்திராநின்றது; இங்கே யிழந்துவைத்து அங்கே செல்லுகையாகிறவிது என்னே! என்னில்; கேண்மின்; அர்ச்சாவதாரத்தில் குளிர நோக்குதல் வினவுதல் அணைத்தல் செய்யலாகாதென்று ஸங்கல்பித்திருக்கையாலே 'ஸத்ய ஸங்கல்பனுடைய ஸங்கல்பம் குலையும்படி அதிக நிர்ப்பந்தம் பண்ணக்கடவோமல்லோம்' என்று அர்ச்சாவதாரத்திலே கையொழிந்தார். விபவாவதாரத்தில் அப்படியொரு நிர்ப்பந்தமில்லாமையாலும் * ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே * என்னும்படி அக்ரூரன் முதலானார்க்கு ஸர்வஸ்வதானம் பண்ணினபடியை அநுஸந்திக்கையாலும் அது காலவிப்ரக்ருஷ்டமென்பதிலே புத்தி செலுத்தாமல் அங்கே போருகிறார்.

ஈட்டு ஸ்ரீஸூக்தி :— "ஆழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணாவதாரமென்றவாறே போரமண்டியிருப்பர்கள். இதுக்கு ஹேதுவென்? என்று பட்டரைக்கேட்க 'ஒருவனுக்கு துக்கம் சிலநாள் கழிந்தால் பொறுக்கலாம்; அணித்தானால் ஆறியிருக்கப்போகாதிறே. அப்படியே அல்லாத அவதாரங்களைப் போலன்றிக்கே ஸமகாலமாகையாலே ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப் பெற்றிலோம்; பாவியேன்! பல்லிலேபட்டுத் தெறிப்பதே! என்னுமிழவாலே வயிறெரித்தலேயாயிருக்கும்' என்றருளிச்செய்தார்."

**பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரியபாரதம் கைசெய்து* ஐவர்க்குத்**
**திறங்கள் காட்டியிட்டுச் செய்துபோன மாயங்களும் ***
**நிறந்தனூடுபுக்கு எனதாவியை நின்று நின்று உருக்கியுண்கின்ற இச்**
**சிறந்தவான்சுடரே! உன்னையென்றுகொல்சேர்வதுவே? ௧.**

| பதம் | பொருள் |
|---|---|
| பிறந்த ஆறும் | ஸம்ஸாரிகளைப்போலே தானும்வந்து பிறந்தபடியும் |
| வளர்ந்த ஆறும் | தன்னை மறைத்துக்கொண்டு வளர்ந்தபடியும் |
| பெரிய பாரதம் | மஹாபாரத யுத்தத்திலே |
| கை செய்து | சேனைகளை அணிவகுத்து |
| ஐவர்க்கு | பஞ்சபாண்டவர்களுக்கு |
| திறங்கள் காட்டியிட்டு | வெற்றிவழிகளைக் காட்டிக்கொடுத்து |
| செய்துபோன மாயங்களும் | ஆக இப்படிப்பட்ட காரியங்களைச்செய்து முடித்துத் தன் தாமமே சென்று சேர்ந்த மாயங்களும் |
| நிறந்தனூடு புக்கு | மருமமான ஹ்ருதய ப்ரதேசத்தினுள்ளே புகுந்து |
| எனது ஆவியை | என் ஆத்மாவை |
| நின்று நின்று | இடைவிடாதே நின்று |
| உருக்கி உண்கின்ற | சிதிலமாக்கி நலியாநின்றன; |
| இ சிறந்த வான் சுடரே | இப்படிப்பட்ட சிறப்புப் பொருந்திய அபரிச்சேத்யதேஜோரூபனே! |
| உன்னை சேர்வது என்று கொல் | உன்னை நான் கிட்டப்பெறுவது என்றைக்கோ? |

• • • [பிறந்தவாறு.] கண்ணபிரானுடைய அவதாராதிகளைச் சுருங்கவருளிச் செய்து 'அந்தோ! இவை என்னை மருமத்திலே நலியாநின்றனவே; தரித்து உன்னையநுபவிக்க முடியவில்லையே! என்று தளர்கின்றார். கர்மவச்யரான ஸம்ஸாரிகள் கர்ப்பவாஸம் பண்ணிப் பிறக்குமாபோலே தானும் நிருபாவச்யனாய் கர்ப்பவாஸம் பண்ணிப் பிறந்தமை என்னே! என்று பிறந்தவாறும்! என்று சொல்லி ஆறுமாதம் மோஹித்துக்கிடந்தாராக ப்ரஸித்தம்.

பிறந்தவாற்றை விட்டு வளர்ந்தவாற்றிலே சென்று ஈடுபடுகிறார் வளர்ந்தவாறும்! என்று.* ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தவாறு என்னே!, * கஞ்சனும் காளியனும் களிறும் மருதும் எருதும் வஞ்சனையில் மடிய வளர்ந்தவாறு என்னே' என்று ஸ்மிதராகிறார். பாண்டவர்களுக்காக அபரிச்சேத்யமான பாரத ஸேனையை அணிவகுத்தும், ஆயுத மெடேனென்று சொல்லிவைத்து ஆயுதமெடுத்தும், பகலை யிரவாக்கியும், தூது போதல் தேரோட்டுதல் முதலியன செய்தும், இப்படிச்செய்த சீர்மையறியாத இக்கொடு வுலகத்திலே யிராமே எழுந்தருளின ஆச்சரியங்களும் என்னே!

இன்னாரை இன்னபடி கொல்லவேணுமென்று எதிரிகளுயிர்நிலைகளைக் காட்டிக்கொடுத்தமையைப்பற்றி "ஐவர்க்குத்திறங்கள் காட்டியிட்டு" எனப்பட்டது.

மூன்னடிகளில் அநுஸந்திக்கப்பட்டதெல்லாம் தம்முடைய ஆத்மாவை மர்மத்திலே புக்குவிடாதேநின்று சிதிலமாக்கி முடிக்கிறபடியைப் பேசி, பிரானே! உருகாதே கரையாதே தரித்துநின்று உன்னைப்பேசி மகிழும்வகை சொல்லாயென்கிருர் பின்னடிகளில். (க)

வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமாவினைவாய்பிளந்த
மதுவைவார்குழலார் குரவைபிணைந்தகுழகும் * [தும்
அதுவிதுவுதுவென்னலாவனவல்லஎன்னையுன்செய்கைநைவிக்கு
முதுவையமுதல்வா! உன்னை யென்றுதலைப்பெய்வனே? உ [ம்

| | |
|---|---|
| வதுவை வார்த்தையுள் | விவாஹப்ரஸ்தாவத்திலே |
| ஏறு பாய்ந்ததும் | விருஷபங்களை மேல்விழுந்து கொன்றதும் |
| மாயம் மாவினை | கபடமாகக் குதிரையுருக்கொண்டுவந்தஅசுரனை |
| வாய் பிளந்ததும் | வாய்கீண்டு ஒழித்ததும் |
| மதுவை வார் குழலார் | மதுவைப் பெருக்குகின்ற கூந்தலையுடைய இடைப்பெண்களோடு |
| குரவை பிணைந்த குழகும் | ராஸக்ரீடை பண்ணி ஒருநீராகக்கலந்திருந்ததும் |
| அது இது உது என்னல் ஆவன அல்ல | ஒருபடியும் விசேஷித்துச்சொல்ல முடியாதவை; |
| வையம் | உலகங்கட்கெல்லாம் |
| முது முதல்வா | மூலகாரணபூதனே! |
| உன் செய்கை | உனது சேஷ்டிதங்கள் |
| என்னை நைவிக்கும் | என்னைச் சிதிலமாக்குகின்றன; |
| உன்னை என்று தலைப்பெய்வன் | உன்னை என்றைக்குக் கிட்டுவேன்? |

* * * [வதுவைவார்த்தையுள்.] நப்பின்னைப்பிராட்டியை முன்னே நிறுத்தி, ஒருவர்க்குமடங்காத ஏழு ரிஷபங்களைக்காட்டி 'இவற்றை வலியடக்குமவர்க்கு இவளைக்கொடுக்கிறோம்' என்று ஒரு வார்த்தை விளைந்தவாறே தன்னைப் பேணாதே சென்று அந்தக் காளைகளின்மேலே பாய்ந்தபடி என்!, கறுக்கொண்ட கம்ஸனாலேவப்பட்டுக் குதிரைவடிவு கொண்டு கலிய வந்த கேசியென்னுமசுரனுடைய வாயைப்பிளந்து முடித்தபடி என்! * அங்கநாமங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ்சாந்தரேணாங்கநா * என்கிறபடியே ஒவ்வொரு கோபியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாக வடிவெடுத்து நின்று ராஸக்ரீடை பண்ணி ஸௌசீல்யம் காட்டின அழகு என்!; இன்ன சரித்திரம், இன்ன சரித்திரம் என்று நான் எடுத்தெடுத்துச் சொல்ல வேணுமோ? உன்னுடைய செய்கை எதுவானுமென்ன? 'நீ செய்த செயல்' என்னுமளவே போதுமானது. அவையெல்லாம் என்னை மிகவும் சிதிலமாக்காநின்றன; ப்ரளயத்திலே அழுந்தின ஜகத்தை உண்டாக்கினாப்போலே என்னைத் தரிப்பித்து உன்னையநுபவிக்க வல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்கிருர்.

* இஷ்டம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புதமதிப்ரியங்கரம் * என்ற ஸ்தோத்ர பாஷ்யத்தின் ஸ்ரீஸூக்தி இதில் மூன்றாமடிக்குச் சேர அநுஸந்தேயம். (உ)

**பெய்யும்பூங்குழல்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும்* பேர்ந்து செய்யபாதமொன்றால்செய்த நின்சிறுச்சேவகமும்* [நேர்சாடிறச் நெய்யுண்வார்த்தையுளன்னைகோல்கொள்ள நீயுன் தாமரைக்கண்கள் பையவேநிலையும்வந்து என்னெஞ்சையுருக்குங்களே. ங. [நீர்மல்க*]**

| | |
|---|---|
| பெய்யும் பூ குழல் பேய் முலை உண்ட | வைக்கப்பட்ட பூக்களையுடைய கூந்தலையுடையளான பூதனையின் முலையைச் சுவைத்துண்ட |
| பிள்ளை தேற்றமும் | இளமைத்தெளிவும், |
| ஓர் சாடு பேர்ந்து இற | (அஸுர வேசங்கொண்ட) ஒருசகடம் பேர்ந்து முறிந்து போம்படி |
| செய்ய பாதம் ஒன்றால் செய்த | சிவந்த திருவடியொன்றாலே செய்தருளின |
| நின் சிறு சேவகமும் | உன்னுடைய இளவீரமும், |
| நெய் உண் வார்த்தையுள் | நெய்யை உண்ட விஷயம் ப்ரஸ்தாவத்திற்கு வந்தவளவிலே |
| அன்னை, கோல் கொள்ள | தாயானவள் கையிலே கோலையெடுத்துக் கொள்ள, |
| நீ | எல்லாரையும் நியமிக்கப் பிறந்த நீ |
| உன் தாமரை கண்கள் நீர் மல்க | உனது தாமரைபோன்ற திருக்கண்கள் நீர் நிரம்பும்படி |
| பையவே நிலையும் | அஞ்சி நடுங்கிநிற்கும் நிலையும் |
| வந்து | இப்போதும் என்னெஞ்சிலேவந்து தோன்றி |
| என் நெஞ்சை உருக்குங்கள் | எனது உள்ளத்தை உருக்குகின்றன. |

*** [பெய்யும் பூங்குழல்] தாயென்று நினைத்து முலையுண்டு முடியட்டுமென்று என்னைத்தோட்டுயசோதைப்பிராட்டிபோலே தலையிலே மயிரணிந்துகொண்டு முலை கொடுக்க நள்ளிருளிலே வந்த பூதனையை முடித்தபடியும், அஸுர வேசங்கொண்ட சகடத்தை முலையுண்கைக்கு அழுகிற பாவனையாலே தூக்கின திருவடியைக்கொண்டு பொடிபடுத்தினபடியும், இந்த நெய்யை யெல்லாம் யார் குடித்தது? என்று ப்ரஸ்தாவம் செய்துகொண்டே தாயானவள் கையிலே கோலைக் கொள்ள அது தன்மேல்தான் விழப்போகிறதென்று கண்ணீர் பெருக ஒடுங்கி நின்றபடியும் அந்தோ! எனது நெஞ்சை உருக்குகின்றனவே யென்கிறார்.

பிள்ளைத் தேற்றம் = பசுங்குழந்தையாயிருக்கச்செய்தேயும் தாய்முலை யென்றும் வேற்று முலை யென்றும் அறியும் தெளிவு. சிறுச் சேவகம் = இளம்பிராயத்திலே காட்டின விக்கிரமம். (ங)

**கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும்* கலந்தசுரரை உள்ளப்பேதம்செய்திட்டு உயிருண்டவுபாயங்களும் * வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடைவேறலாமைவிளங்கநின்ற உள்ளமுள்குடைந்து என்னுயிரையுருக்கியுண்ணுமே. ச. [தும்***

| பதம் | பொருள் |
|---|---|
| கள்ளம் வேடத்தை கொண்டுபோய் | வேதபாஹ்ய புத்தரூபவேஷத்தைப் பரிக்ரஹித்து |
| புரம் புக்கவாறும் | த்ரிபுரத்திலே ப்ரவேசித்தபடியும், |
| அசுரர் கலந்து | அசுரரோடே சேர்ந்து |
| உள்ளம் பேதம் செய்திட்டு | மனவேறுபாட்டையுண்டாக்கி |
| உயிர் உண்ட உபாயங்களும் | அவர்களுடைய உயிரைக் கவர்ந்த விரகுகளும், |
| வெள்ளம் நீர் சடையானும் நின்னிடை வேறு அலாமை விளங்க நின்றதும் | கங்கா ப்ரவாஹத்தைச் சடையிலே தாங்கியுள்ள சிவனும் உன்பக்கல் வேறுபாடின்றி ஒற்றுமை பெற்று விளங்க நின்றதும் (ஆகிய இவை) |
| உள்ளம் உள் குடைந்து | என்னெஞ்சுக்குள்ளே அவகாஹித்து |
| என் உயிரை உருக்கி உண்ணும் | என் ஆத்மாவை நீராக வுருக்கியுண்கின்றன. |

*** [கள்ளவேடத்தை.] பௌத்தாவதார கதையைப்பேசி இப்படியும் ஒரு கள்ளவேடம் கொள்வதுண்டோ வென்று உருகுகிறார் அக்கதை வருமாறு:— சில அசுரர்கள் சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்தார்கள். அப்போது சிவன் ப்ரத்யக்ஷமாகி உவந்து 'உங்களுக்கு என்ன வேணும்?' என்று கேட்க, அவர்களும் 'ஒருவராலும் வெல்லமுடியாத மூன்று பட்டணங்கள் எங்களுக்கு வேணும்' என்ன, அதற்குச் சிவபிரான் "அப்படியே யுண்டாகுக, அந்தப் பட்டணங்கள் மூன்றும் ஒன்றோடொன்று கூடாமல் திரியக்கடவன; மூன்றும் ஓரிடத்திலே கூடுகிறபோது உங்களுக்கு மஹத்தான ஆபத்து விளையும், பேணிக் கொள்ளுங்கோள்" என்று சொல்லி மறைந்து போயினன். பின்பு இரும்புக் கோட்டையாயும் வெள்ளிக்கோட்டையாயும்பொற்கோட்டையாயுமிருந்தமூன்று பட்டணங்கள் உண்டாயின. அசுரர்கள் அவற்றிலே யிருந்துகொண்டு தேவர்களையும், அவர்களை நோக்கி வேள்விபுரிகின்ற அந்தணர்களையும் பலவாறு நலிந்து கொண்டிருந்தனர். யாகம் முதலியன நடைபெறுமையினாலே ஹவிஸ்ஸுகிடைக்காமற்போகவே தேவர்களுக்கு வலியொடுங்கிற்று; மிகவும் கஷ்டமாயிற்று. பிறகு பிரமன் முதலியோர் அனைவருங்கூடி சிவனருகிற்சென்று 'பெருமானே! எங்களுக்கு ஹவிர்ப்பாகம் இல்லாமற் போயிற்று; யாகம் நடத்துகிற வூர்களிலே அசுரர்கள் அந்தப்பட்டணங்களோடே சென்றிருந்து நலிகின்றார்கள்; இத்துன்பம் பொறுக்க முடியாதிருத்தலால் அவர்களை உடனே ஸம்ஹரிக்கவேணும்' என வேண்டிக் கொண்டார்கள். அதற்குச் சிவபிரான் "நச்சுமரமாகிலும் நட்டமரங்களை வெட்டுவாருண்டோ? அவர்களை ஸம்ஹரிக்க என்னாலாகாது" என்ன, பிறகு அனைவரும் திருப்பாற்கடலிற்சென்று பரமபுருஷனைத்துதிக்க, திருமால் கருடன்மீது காட்சிதந்து, வந்த செய்தி என்னென்று விசாரிக்க, இவர்களும் செய்தியைச்சொல்ல, "நீங்களெல்லாருங்கூடி அவர்களை ஸம்ஹரிக்கலாகாதோ?" என்று திருமால் கேட்க, "அந்த அசுரர்கள் தாங்கள் சில தருமங்களை யனுஷ்டிப்பது, சில யாகங்கள் பண்ணுவதாய் இப்படிச் சில தர்மச்ரத்தையைக் காட்டுகிறார்களாகையால் அவர்களை எங்களால் வெல்லப்போகாது" என்று தேவர்கள் சொல்ல, அதற்குத் திருமால் "ஆனால் அவர்களை நான் நிரஸிக்

கிறேன், நீங்கள் உங்கள் இருப்பிடம் சென்று சேருங்கள்" என்று விடை கொடுத்தனுப்பிவிட்டு ஒரு பௌத்தக்கிழவனாக வேஷம்பூண்டு புறப்பட்டு ஓர் எட்டுச்சுவடியையும் இடுக்கிக்கொண்டு பவித்ரமும் அணிந்துகொண்டு அவ்வசுரர்களின் பட்டணங்களிலே சென்று பரமதார்மிகனென்று அனைவரும் கருதும்படியாக நடந்துவந்தான். அப்போது அவர்கள் ஒரு யாகம் பண்ணத் தொடங்கினார்கள். காஷ்டம், ஹவிஸ் முதலியன சேமித்து வைத்திருந்தார்கள். கள்ள வேடத்திருமால் அங்கேசென்று 'இந்த ஸமித்துக்கள் எதுக்கு?' என்ன, ஹோமம் பண்ணுவதற்கென்று அவர்கள் சொல்ல; 'ஐயோ! காஷ்டம் தின்னப் பிறப்பதினுங்காட்டில் புல்லைத்தின்கிற பசுவாய்ப்பிறப்பது நலமே' என்றான். பிறகு இந்த ஹவிஸ்ஸு எதற்கு? என்று கேட்க, 'தேவர்களுக்குக் கொடுக்க' என்று அசுரர்கள் சொல்ல, அதற்குக் கள்ள வேடத்திருமால் "அயலூருக்குப் போகிற வொருத்தன் கட்டிப்போகிற சோற்றை வேறொருத்தன் கையிலே யிட்டுவைத்துத் தான் போனால் அவனுண்டசோறு இவனுக்கு வந்து உதவினுலன்றோ தேவர்களுக்குக் கொடுக்கிற ஹவிஸ்ஸும் உங்களுக்கு உதவும்" என்றான். பிறகு இந்த ஆடுகள் எதற்கென்று கேட்க, வ்பையை யெடுத்து ஹோமம் பண்ணவென்று அசுரர்கள் சொல்ல, "ஆனால் ஆட்டுவாணியனைப் பரம தார்மிகனாகக்கொள்ளலாம்போலும்" என்றான். இப்படியே பலபல க்ருத்ரிமோக்திகளாலே அவர்களை ப்ரமிப்பிக்க, அவர்களும் அவன் வார்த்தையிலே மிகவும் விச்வாஸங்கொண்டு யாகம் பண்ணுவதை விட்டு தர்மச்ரத்தையும் குலைந்து ருத்ரனையும் தூஷிக்கத் தொடங்கினார்கள். அவ்வளவில் அவன் (கள்ளவேடத்திருமால்) ருத்ரனருகே சென்று 'அசுரர்கள் உன்னை தூஷிக்கிறார்கள் காண்' என்ன, அதைக்கேட்டு அவன் சீறிச்சிவந்து அவர்களை ஸம்ஹரிக்க எண்ணங்கொண்டான். பூமியைத் தேராகவும் சந்த்ரஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மகா மேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில் நாணியாகவுங்கொண்டு போர் நடத்தினான். (இவ்வரலாறு ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் மூன்றுவது அம்சத்திலுள்ளது.)

ஸ்ரீராமாயணத்தில் (அயோத்யா காண்டத்தில்) சித்ரகூடபரிஸரத்தில் பரதாழ்வானுக்குப் பரிந்து நாஸ்திகவாதம் பண்ணின ஜாபாலியை நோக்கி ஸ்ரீராமன் * யதா ஹி சோரஸ் ஸ ததா ஹி புத்த: * என்றான்; அதையுட்கொண்டு இங்கு ஆழ்வார் கள்ளவேட மென்கிறார். எம்பெருமான் புத்தமுநிவேஷங்கொண்டு அசுரர்களின் பட்டணங்களிலே புகுந்தபடியை * புரம்புக்கவாறும் * என்கிறது. ஆஸுரப்ரக்ருதிகளான அவர்களுக்கு அவைதிகமதத்தை உபந்யஸித்து வைதிகச்ரத்தையைப்போக்கி அவ்வழியாலே அவர்களைக் கொன்றொழித்தபடியை * கலந்தசுரரை * இத்யாதியாலே சொன்னாரென்க.

* விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ: * என்கிற ப்ரமாண ப்ரஸித்தியின்படி எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாக இருந்து த்ரிபுரஸம்ஹாரத்தை நிறைவேற்றியதுபற்றி * வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேற

லமை விளங்க நின்றதும் * என்றார். இவ்வாழ்வார் தாமே முதல்திருவாய்மொழியில் * புரமொரு மூன்றெரித்து * என்று த்ரிபுரஸம்ஹாரத்தைத் திருமாலின் காரியமாகவே அருளிச்செய்தமையுங்காண்க. (௪)

**உண்ணவானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும் ***
**வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும் * [கள்**
**மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்**
**எண்ணுந்தோறுமென்னெஞ்சு எரிவாய்மெழுகொக்கும் நின்றே ரு.**

| பதம் | பொருள் |
|---|---|
| வானவர் கோனுக்கு உண்ண | தேவேந்திரனுடைய ஆராதனைக்காக |
| ஆயர் ஒருப்படுத்த | இடையர்கள் ஸங்க்ரஹஞ் செய்த |
| அடிசில் உண்டதும் | ப்ரஸாதங்களை யெல்லாம் தானே அமுதுசெய்ததும் |
| வண்ணம் மால் வரையை எடுத்து மழை காத்ததும் | அழகிய பெருமலையைக் குடையாக வெடுத்து மழையைத் தடுத்ததும் |
| மண்ணை முன் படைத்து | பூமியை ஆதிகாலத்திலே ஸ்ருஷ்டித்து |
| உண்டு உமிழ்ந்து கடந்து இடந்து மணந்த மாயங்கள் | (ஸமய விசேஷங்களிலே) உண்டது உமிழ்ந்தது அளந்தது இடந்தது மணந்தது ஆக இப்படியான மாயங்களுமாகிற விவற்றை |
| எண்ணுந்தோறும் | சிந்திக்கிற போதெல்லாம் |
| என் நெஞ்சு | என் மனமானது |
| நின்று | எப்போதும் |
| எரி வாய் மெழுகு ஒக்கும் | நெருப்பருகிலுள்ள மெழுகையொத்திரா நின்றது. |

* * * [உண்ணவானவர்.] திருவாய்ப்பாடியில் இடையர்கள் வழக்கப்படி தேவேந்திர ஸமாராதனைக்கென்று * அட்டுக்குவி சோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமாகச் சேமித்துவைக்க "அஹம் கோவர்த்தகோஸ்மி" என்று சொல்லி அவற்றையடங்கலும் அமுது செய்ததும், உடனே பகிக்கோபத்தாலே இந்திரன் விடாமழைபெய்விக்க, கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்து ஒருவர்மேல் ஒருமழைத்துளி விழாதபடி காத்ததும், உலகங்களைப் படைப்பது, ப்ரளயகாலத்திலே உண்பது, ப்ரளயம் நீங்கினவாறே உமிழ்வது, மாவலியின் கொழுப்படக்கி அளப்பது, வராஹாவதாரமெடுத்து இடந்து மணப்பது ஆகிய இவையும் ஒவ்வொன்றும் சிந்திக்கும் போதெல்லாம் என்மனம் நெருப்பிலேபுக்க மெழுகுபோலே முடியாதே நின்று உருகாநின்றதே! என்கிறார். (ரு)

***நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன ****
***ஒன்றலாவுருவாய் அருவாய நின் மாயங்கள் * [யேற்கு***
***நின்று நின்று நினைகின்றேன் உன்னையெங்ஙனம் நினைகிற்பன்? * பாவி***
***ஒன்று நன்குரையாய் உலகமுண்டவொண்சுடரே. ௬.***

நின்ற ஆறும் இருந்த ஆறும் கிடந்த ஆறும் } ஆங்காங்கு நிற்கிறபடிகளும் வீற்றிருக்கிற படிகளும் சயனித்திருக்கிற படிகளும்

நினைப்பு அரியன } நெஞ்சாலும் நினைக்கமுடியாதவையாயிருக்கின்றன ;

ஒன்று அலா உரு ஆய் } (இங்ஙனே) பலபடியாய்

அரு ஆய (எனக்கு அநுபவிக்கைக்கு) உருத்தெரியாத

நின் மாயங்கள் } உனது அற்புதச் செயல்களை

நின்று நின்று நினைகின்றேன் } சிறிது சிறிதாக நினைக்கப் பார்க்கின்றேன் ;

உலகம் உண்ட ஒண் சுடரே } உலகங்களை அமுதுசெய்த ஒளியுருவனே !

உன்னை எங்ஙனம் நினைகிற்பன் } உன்னை எப்படி நினைக்க வல்லேனுவேன் !

பாவியேற்கு ஒன்று நன்கு உரையாய் } தரித்து நின்று நினைக்க முடியாத பரவசத்தைப் பண்ணினவெனக்கு ஒரு நல்விரகு அருளிச்செய்ய வேணும்.

* * * [நின்றவாறும்.] நின்றது மிருந்ததும் கிடந்ததும் இன்ன இன்னவிடங்களிலேயென்று வகுத்துக்கூறுமையாலே ஆசாரியர்கள் பலபடியும் ஈடுபட்டு நிர்வஹிப்பர்கள். நின்றவாறும் = லங்காத்வாரத்திலே கையும் வில்லுமாய் நின்றவாறு; வாலிவதம் பண்ணிக் கையும் வில்லுமாய் நின்றபடியாதல். இருந்தவாறும் = திருச்சித்ரகூடம் முதலான விடங்களில் பர்ணசாலைகளில் வீற்றிருந்தவாறு. கிடந்தவாறும் = கடற்கரையிலே கிடந்த கிடை. ஆக மூன்றுபடிகளும் ராமாவதாரத்திலே அநுபவித்தபடி. இனி, க்ருஷ்ணாவதாரத்திலே அநுபவித்தபடியாகவுமாம் ; — கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையை யெடுத்து எந்தநின்ற நிலை ; ராஸக்ரீடைக்கு முன்பாகப் பெண்களோடே கழகமிருந்தவிருப்பு ; ஒரோருத்தர் மடிகளிலே சாய்ந்தபடி. அன்றிக்கே, * நிற்பதுமோர் வெற்பகத்திருப்பும் விண் கிடப்பதும் நற்பெருந் திரைக்கடலுள் * என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தின்படியே திருமலையிலே நின்றபடியும், பரமபதத்திலே இருந்தபடியும், திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியும் கொள்வர். அன்றிக்கே * நின்றதெந்தையூரகத் திருந்ததெந்தை பாடகத்து, அன்றுவெஃகணைக்கிடந்தது * என்கிறபடியே கச்சிப்பதியில் ஊரகத்தில் நின்று, பாடகத்தில் இருந்து வெஃகாவில் கிடந்தபடியுமாம். * புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கை யிருந்து வைகுந்தத்துள் நின்று * என்றபடியேயாகவுமாம். அன்றிக்கே, * நின்று மிருந்துங் கிடந்தும்.... ....என்னெஞ்சு அகலான் * என்று இவ்வாழ்வார் தாமே பெரிய திருவந்தாதியில் அருளிச்செய்தபடியே இவைமூன்றும் இவருடைய திருவுள்ளத்திலேயாகவுமாம்.

ஆழ்வார் என்கிற அரையர் இப்பாசுரத்தைப் பாடுகையில் "இவையெல்லாம் தொட்டிலிலே" என்று எம்பெருமானர் அருளிச்செய்தாராம். தொட்டிற் பழுவைப் பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்து நிற்கமாட்டாமை விழுந்திருக்கும்படியும், அதுதானும் பொறுக்கமாட்டாமே சாய்ந்து கிடக்கும்படியும்.

நினைப்பு அரியன = இவை என்றைக்கோ செய்து போகச் செய்தேயும் இன்று நினைப்பார்க்கு நினைக்கக் குறையில்லையே; ஆனாலும் தமக்கு நினைக்கப் போகாமை கூறுகின்றார். * நெஞ்சால் நினைப்பரிதால். *

நினைக்க முடியாமையென்ன? நாங்களெல்லாம் நினைக்கவில்லையா? அப்படி நீரும் நினைக்கலாகாதோ? என்று சிலர் சொல்வதாகக்கொண்டு, மேலே கூறுகின்றார். பிரானே! ஒன்றா இரண்டா? பல்லாயிரம்படிகளன்றோ உன்னுடையவை. எனக்கு அநுபவிக்கைக்கு உருத்தெரியாமலிருக்கிற உன்னுடைய ஆச்சர்ய சேஷ்டிதங்களானவற்றை எப்படியாவது நினைக்கவே நான் பார்க்கின்றேன்; அந்தோ! எப்படி நினைக்கவல்லேனாவேன்? நெஞ்சு சிதிலமாகாம லிருந்தாலன்றோ நினைக்க முடியும். நீயே உபாயம் சொல்லியருளவேணு மென்கிறார். (கூ)

**ஒண்சுடரோடிருளுமாய் நின்றவாறும் உண்மையோடின்மையாய்வந்து *
கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன * [என்
எண்கொள்சிந்தையுள்நைகின்றேன் என்கரியமாணிக்கமே!* என்
திண்கொள்ளவொருநாள் அருளாயுன் திருவுருவே. எ. [கண்கட்குத்**

| | |
|---|---|
| உண்மையோடு இன்மை ஆய் வந்து | மெய்யுணர்த் தோற்றுகை பொய்யுணர்த் தோற்றுகை ஆகிற இரண்டுபடியோடுங்கூடி |
| ஒண் சுடரோடு இருளும் ஆய் நின்ற ஆறும் | ஒண்சுடராயும் இருளாயும் நிற்கிறபடிகளும் |
| என் கண் கொளா வகை | என்கண் உன்னையநுபவியாதபடி |
| கரந்து | உன்னைமறைத்து நின்று |
| நீ என்னை செய்கின்றன | நீ என்னைப் படுத்துகிற பாடுகளும் ஆகிறவிவற்றை |
| எண் கொள் சிந்தையுள் | எண்ண வேணுமென்கிற அபிநிவேசங்கொண்ட சிந்தையோடே |
| நைகின்றேன் | சிதிலனாகின்றேன்; |
| என் கரிய மாணிக்கமே | என்னை ஈடுபடுத்தின நீலமணியுருவனே! |
| உன் திரு உரு | உனது திவ்யரூபத்தை |
| என் கண்கட்கு திண் கொள்ள | என்கண்களாலே திண்ணமாகக்காணும்படி |
| ஒரு நாள் அருளாய் | ஒருநாளாகிலும் கிருபை செய்தருளவேணும். |

* * * [ஒண்சுடரோடு.] ஒண்சுடராய் நிற்றல் இருளாய்நிற்றல் இன்னார்க்கென்று சொல்லாமையாலே ஸ்வவிஷயத்திலேயும் கொள்ளலாம்; ஆச்ரிதாநாச்ரித விஷயத்திலேயும் கொள்ளலாம். ஸ்வவிஷயத்திலே கொண்டால், உள்ளநுபவத்திலே உண்மையோடே ஒண்சுடராய் நிற்கும்; பாஹ்யாநுபவத்தில் வந்தால் இன்மையோடு இருளாய் நிற்கும் என்க. ஆச்ரிதா நாச்ரித விஷயத்திலே கொண்டால், ஆச்ரிதர்களுக்குத் தன்படிகளில் ஒன்றுங் குறையாதபடி காட்டிக்கொடுத்து ஒண்சுடராயும் உண்மையாயும் நிற்பன்; அநாச்ரிதர்களுக்குத் தன்படிகளிலொன்றும் தெரியாதபடிபண்ணி அத்தாலேஅவர்களுக்கு இல்லையென்னும்படி இருளப் பண்ணி நிற்பன் என்க.

பிரானே! என்னளவில் நீ ஒண்சுடராகவோ இருளாகவோ ஏதேனுமொரு படி நின்னமாக இருந்துவிட்டால் குறையில்லை. கண்ணுக்கு விஷயமாகாதபடியிருக்கையாலே இருளாய், மறக்கவொண்ணாதபடி நெஞ்சிலே விசதமாக நிற்கையாலே சுடராய் இப்படி இருபடியுமாக நின்று என்னை நீ செய்கிறவற்றை எண்ணிநினைக்கிற நெஞ்சோடே நான் சிதிலனாகின்றேன்; உன்வடிவழகை எனக்கு புஜிக்கத்தந்தருளினநீ நான் திடமாகக் காணலாம்படி என்னுடைய கண்களுக்கு உன்னுடைய திருவுருவை ஒருநாளாகிலும் அருளவேணுமென்றாராயிற்று. (எ)

திருவுருவுகிடந்தவாறும் கொப்பூழ்ச்செந்தாமரைமேல்* திசைமுகன்
கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும்*
பொருவிலுன்தனிநாயகமவை கேட்குந்தோறுமென்னெஞ்சம் நின்
அருவிசோரும்கண்ணீர்என்செய்கேனடியேனே? அ. [றுநெக்கு*

| | |
|---|---|
| திரு உருவு கிடந்த ஆறும் | அழகிய திருமேனிகண் வளர்ந்தருளின படியும் |
| கொப்பூழ்செம் தாமரை மேல் | திருநாபிக் கமலத்திலே |
| திசைமுகன் கரு உள் | நான்முகனுகிற கருவுக் குள்ளே |
| வீற்றிருந்து | அந்தராத்மாவாக எழுந் தருளியிருந்து |
| படைத்திட்ட கருமங் களும் | ஸ்ருஷ்டித்த வியாபாரங் களுமாகிற |
| பொரு இல் | எதிரில்லாத |
| உன் தனி நாய கம் அவை | உன்னுடைய பரத்வ ப்ர காசகமான அவற்றை |
| கேட்கும் தோ றும் | (வேதாந்திகள் சொல்லக்) கேட்கிறபோதெல்லாம் |
| என் நெஞ்சம் | என் நெஞ்சானது |
| நின்று நெக்கு | கட்டுக்குலைந்து நெகிழ்ந்து நின்று |
| கண் நீர் அருவி சோரும் | கண்ணீர் அருவியாகப் பெருகாநின்றது ; |
| அடியேன் என் செய்கேன் | தரித்திருக்க மாட்டாத அடியேனென்ன பண் ணுவேன் ? |

* * * [திருவுருவு.] காரணமான ஏகார்ணவஜலத்திலே அழகிய திருமேனியோடே கண்வளர்ந்தருளினது ஸ்ருஷ்டிக்காக. பிறகு அந்தத் திருமேனியில் திருநாபிக் கமலத்திலுண்டான நான்முகனை அதிஷ்டித்து நின்று ஸத்வாரகமாக ஸகலஸ்ருஷ்டியும் செய்தபடி. இப்படிப்பட்ட விலக்ஷணகுண சேஷ்டிதங்களைக் கேட்குந்தோறும் என்னெஞ்சம் நெகிழ்ந்து நின்று கண்ணீர் அருவிபோலே சோராநின்றது; இதனால் ஒன்றும் ஒழுங்குபட நினைக்கமுடிகிறதில்லையே! என்றாராயிற்று.

அடியைமூன்றையிரந்தவாறும் அங்கேநின்றாழ்கடலும் மண்ணும்
மூடிய * ஈரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும் * [விண்ணும்
நொடியுமாறவைகேட்குந்தோறு என்னெஞ்சம்நின்தனக்கேகரைந்
கொடியவல்வினையேன் உன்னையென்றுகொல்கூடுவதே? [துகும்

மூன்று அடியை இரந்தும் — (மாவலியிடத்தே) மூவடி நிலத்தை யாசித்தபடியும்

அங்கு நின்றே — யாசித்த அவ்விடத்தில் நின்று கொண்டே

ஆழ் கடலும் மண்ணும் விண்ணும் முடிய — ஆழ்ந்தகடல்களையும் மண் விண்ணுலகங்களையுமெல்லாம்

ஈர் அடியால் — இரண்டடியாலே

முடித்துக் கொண்ட முக்கியமும் அவை — ஆக்ரமித்துக்கொண்ட தனி வீரமுமாயஅவற்றைக்குறித்து

கொடியும் ஆறு கேட்குந்தோறும் — (ஞானிகள்) சொல்லுகிற படியைக் கேட்கும் போதெல்லாம்

என் நெஞ்சம் — எனது நெஞ்சு

நின் தனக்கே — உன்திறத்திலேயே

கரைந்து உகும் — சிதிலமாகாநின்றது;

கொடிய வல் வினையேன் — மிகக்கொடிய பாபத்தைப் பண்ணின நான்

உன்னை கூடுவது என்று கொல் — உன்னோடே கூடப்பெறுவது என்றைக்கோ?

*** [அடியை மூன்றை.] மாவலி பக்கலிலே மாணுருவாய்ச்சென்று மூவடிநிலம் இரந்தபடியும், அங்கேயே நின்றே இரண்டடியாலே மூவுலகையும் அகப்படுத்திக் கொண்டு நீ நினைத்தகாரியத்தை முடித்துக்கொண்ட அதிசயமும் ஆகிய இவற்றைச் சொல்லக் கேட்குந்தோறும் என்னுடைய நெஞ்சு கரைந்து உருகின்றதே!; உன்னையநுஸந்தித்தால் இங்ஙனே சிதிலனாகும்படி மஹாபாபத்தைப் பண்ணின நான் தரித்து நின்று உன்னையநுபவிப்பது என்றைக்கோ?

கொடிதல்—சொல்லுதல். (௯)

**கூடிநீரைக்கடைந்தவாறும் அமுதந்தேவருண்ண * அசுரரை**
**வீடும்வண்ணங்களே செய்துபோனவித்தகமும் ***
**ஊடுபுக்கெனதாவியை உருக்கியுண்டிடுகின்ற * நின்தன்னை**
**நாடும்வண்ணம்சொல்லாய் நச்சுநாகணையானே! ௧0.**

நச்சு நாகம் அணையானே — சேஷசயனனே!,

கூடி நீரை கடைந்த ஆறும் — தேவாசுரர்களோடு கூடித் திருப்பாற் கடலைக் கடைந்தபடியும்

அமுதம் தேவர் உண்ண — அம்ருதத்தைத் தேவர்கள் புஜிக்க

அசுரரை வீடும் வண்ணங்களே செய்து போன வித்தகமும் — அசுரர்கள் அந்த அம்ருதத்தை விடும்படியாக ஸ்த்ரீ வேஷபரிக்ரஹம் பண்ணிப்போன விஸ்மயநீயாகாரமும்

ஊடு புக்கு — உள்ளே புகுந்து

எனது ஆவியை — என் ஆத்மாவை

உருக்கி உண்டிடுகின்ற — நீர்ப்பண்டமாக உருக்கிக் கபளீகரிக்கின்ற

நின் தன்னை — உன்னை

நாடும் வண்ணம் சொல்லாய் — நித்யாநுபவம் பண்ணும் வழியை அருளிச் செய்யவேணும்.

*** [கூடிநீரை.] அமரர்களுக்கு அமுதங்கொடுக்கக் கடல்கடைந்த செய்தியிலே எனது நெஞ்சு உருகாநின்றது; உன்னை நிலைநின்று அநுபவிக்குமபடி யருளிச்செய்யவேணுமென்கிறார். அஸுரர்களோடே கூடி நின்று கடலைக்கடைந்தருளினபடியும், அதின் பலனான அம்ருதத்தைத் தேவர்கள் புஜிக்க, அஸுரர்கள் அதிலே ஆசையறும்படியாக ஒருவடிவை [அதாவது, மோஹிநீரூபத்தை]க் கொண்டு போந்தபடியும் உள்ளேபுக்கு என்னுத்மாவை யுருக்கி முடிக்கின்றன; திருவனந்தாழ்வான் உன்னோடு நித்யஸம்ச்லேஷம் பண்ணுமாபோலே நான் தரித்து நின்று உன்னைப்பூர்ணமாக அநுபவிக்கும் விரகுசொல்லவேணு மென்றாராயிற்று.

நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கென்று * நாடொறும்
ஏகசிந்தையனாய்க் குருகூர்ச்சடகோபன்மாறன் *
ஆக நூற்றவந்தாதி ஆயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார் *
மாகவைகுந்தத்து மகிழ்வெய்துவர்வைகலுமே கக.

| | |
|---|---|
| நாகணைமிசை நம் பிரான் சரணே நமக்கு சரண் என்று | சேஷசாயியான எம்பெருமானுடைய திருவடிகளே நமக்குத்தஞ்சமென்று |
| நாள் தொறும் ஏக சிந்தையன் ஆய் | ஸ்திரமான அத்யவஸாயத்தையுடையராய்க் கொண்டு |
| குருகூர் சடகோபன் மாறன் | ஆழ்வார் |
| ஆக | தாம்ஸத்தைபெறுவதற்கு |
| நூற்ற | அருளிச்செய்த |
| அந்தாதி | அந்தாதித் தொடையான |
| ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| இவையும் ஓர் பத்தும் வல்லார் | இத் திருவாய்மொழியை ஓத வல்லவர்கள் |
| மாகம் வைகுந்தத்து | பரமாகாசமான ஸ்ரீவைகுண்டத்திலே |
| வைகலும் | ஆத்மாவுள்ளதனையும் |
| மகிழ்வு எய்துவர் | ஆனந்திகளாயிருப்பர்கள். |

*** [நாகணைமிசை.] இத்திருவாய்மொழி கற்கைக்குப் பலனாகப் பரமபதத்தில் ப்ரஹ்மாநந்த ப்ராப்தியை அருளிச்செய்கிறார். சரணம் புகுந்தவர்களை எம்பெருமான் உபேக்ஷிக்க நினைத்தாலும் உபேக்ஷிக்க வொட்டாதே விஷயீகரிக்கப் பண்ணுமியல்வினன் திருவனந்தாழ்வான்; அன்னவன்மீது கண்வளர்ந்து அடியார்களுக்கு உபகாரகனாயிருக்கு மெம்பெருமானுடைய திருவடிகளே நமக்குத் தஞ்சமென்று இடையறுத அத்யவஸாயம் கொண்டவரான ஆழ்வார் தாம் ஸத்தை பெறுதற்காக அருளிச்செய்த ஆயிரத்திலும் இப்பத்தும் கற்றவர்கள், குணங்களை நினைத்துச் சிதிலராகாமே தரித்து நின்று நித்யாநுபவம் பெறும் பரமபதத்திலே வாழப்பெறுவர்களென்றாராயிற்று.

மஹாகம் என்னும் வடசொல் மாகமென்று விகாரப்பட்டது. கம் — ஆகாசம்; மஹாகம்—பரமாகாசம்; இது பரமபதத்திற்கு மறுபெயர். (கக)

ஐந்தாம்பத்து பத்தாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

ப்ராதுர்பாவாதிவ்ருத்த்யா வ்ருஷகணதமநாத் பூதநாசாதநாத்வா
மோஹார்த்தம் பௌத்தக்ருத்யா கிரிவரபஜநஸ்வீக்ருதே: ஸ்தாநபேதை:,
தேஜோத்வாந்தாதிபாவாத் ஜலநிதிசயநாத் பிக்ஷணாத்யைஸ் த்ரிபத்யா:
பீயூஷஸ்பர்சநாத்யை: சிதிலயதி ஹரி: ஸ்வீயஸம்ருச் சேத்யதோஷே.

எம்பெருமான் தன்னடியாருடைய நெஞ்சை உடைகுலைப்படுத்துகிருனென்பதை இந்தத் திருவாய்மொழியிலே ஆழ்வார் அருளிச்செய்தாரென்கிறர்.

1. ப்ராதுர்ப்பாவாதிவ்ருத்த்யா:. * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * பிறந்து ஒளித்துவளர்ந்த ப்ரகாரங்களாலும்.

2. வ்ருஷகணதமநாத். * வதுவை வார்த்தையுளேறு பாய்ந்ததும் * விருஷபக்கூட்டங்களை நிரஸித்ததனாலும்.

3. பூதநாசாதநாத்வா:. * பெய்யும் பூங்குழலித்யாதி. * பூதனையை முடித்தது, சகடு முறித்தது முதலானவற்றாலும்.

4. மோஹார்த்தம் பௌத்தக்ருத்யா:. * கள்ளவேடத்தைக் கொண்டு போய் இத்யாதி. * அஸுரமோஹநார்த்தமாக புத்தனாய் அவதரித்துப் பண்ணின க்ருத்ரிமவ்யாபாரங்களாலும்.

5. கிரிவரபஜநஸ்வீக்ருதே:. * உண்ணவானவரித்யாதி. * கோவர்த்தனமலைக்கு இடையரிட்ட பூஜையைத் தானே ஸ்வீகரிக்கையாலும்.

6. ஸ்தாநபேதை:. * நின்றவாறு மிருந்தவாறுமித்யாதி. *

7. தேஜோத்வாந்தாதிபாவாத். * ஒண்சுடரோடிருளுமாயித்யாதி. * சுடராயுமிருளாயு மிருக்கையாலும்.

8. ஜலநிதிசயநாத். * திருவுருவு கிடந்தவாறும் * அழகியவடிவோடே ஏகார்ணவத்திலே சயநித்தபடியாலும்.

9. த்ரிபத்யா: பிக்ஷணாத்யை:. * அடியை மூன்றையிரந்தவாறும் * மூவடி விண்யாசித்தபடியாலும்.

10. பீயூஷஸ்பர்சநாத்யை:. * கூடி நீரையித்யாதி.

இத்தம் காருண்யநிக்நம் துரிதஹரஜநம் ப்ரேம தீவ்ரம் துரந்தம்
லோகாநாம் ரக்ஷிதாரம் ஸ்ம்ருதிவிஷயம் அஹம்பாவநாகோசரஞ்ச
தீநாநாம் ஸச்சரண்யம் ஸ்வரஸக்ருதநிஜப்ரேஷ்யதாவாஞ்சருபே
ப்ராப்தம் சக்திப்ரதம் ஸ்ரீபதிமிஹ சதகே ச்ரேயஸே மேகஹேஹும்.

ஐந்தாம்பத்தில் பத்துப்பதிகங்களினுடையவும் அர்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறது இந்தச்லோகம்.

(காருண்யநிக்நம்) கையார் சக்கரத்தில் காருணிகத்வம். (துரிதஹரஜநம்) *பொலிக பொலிக பொலிகவில், ஸ்வீய ஜநங்களாலே ஜகத்தில் துரிதங்களை யெல்லாம் போக்குமவன் என்றது. (தீவ்ரம் ப்ரேம துரந்தம்) * மாசறு சோதியில், மடலெடுக்கத்துணியும்படியான ப்ரேமத்தை விளைக்குமவன் என்றது. (லோகாநாம் ரக்ஷிதாரம்) *ஊரெல்லாம் துஞ்சியில் ஜகத்ரக்ஷண ஜாகரூகனென்றது. (ஸ்ம்ருதிவிஷயம்) * எங்ஙனேயோவில், விச்லேஷ ஸமயத்திலும் மறக்க வொண்ணாதவனென்றது. (அஹம்பாவநாகோசரம்) * கடல் ஞாலத்திலே, அஹம் புத்தியாலே அநுபாவ்யனென்றது, (தீநாநாம் ஸச்சரண்யம்) * நோற்ற நோன்பில் அசரண்ய சரண்யனென்றது. (ஸ்வரஸக்ருத நிஜப்ரேஷ்யதாவாஞ்சம்) * ஆராவமுதில் அடியார்களுக்கு ஸ்வரஸமாக தாஸ்யரஸத்தைப் பண்ணுமவனென்றது. (ப்ராப்தம்) * மானேய் நோக்கில் ப்ராப்தனென்றது, (சக்திப்ரதம்) அநுபவ விரோதியான மகச்சைதில்யத்தைப் போக்கி சக்தியைக் கொடுக்குமவனென்றது.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் திருவடிகளே சரணம்.



## த்ராவிடோபநிஷத் ஸங்கதி.

அர்ச்சாஞ்ச மௌநநியதாம்படிமாயசௌரே:
ஆலாபயோக்யவிபவே புநராகதோஸௌ
சித்தஸ்ய தத்குணகணஸ்மரணே நிஜஸ்ய
சைதில்யவிக்நசமந தமயாசதாந்த்யே.

(கருத்து.) அர்ச்சாவதாரத்தில் எம்பெருமான் மௌனஸங்கல்பம் கொண்டிருக்கையாலே அதைவிட்டு, பேசுகை தழுவுகைமுதலானவற்றுக்கு யோக்யமான விபவாவதாரத்திலேயே மீண்டும் வரப்பெற்ற ஆழ்வார் அந்த விபவாவதாரகுண சேஷ்டிதங்களை ஸ்மரிக்குமிடத்தில் தம்முடைய நெஞ்சுக்கு உண்டாகிற சைதில்யரூபமான விக்னத்தைத் தொலைக்கும்படி எம்பெருமானையே வேண்டினார் பத்தாந்திருவாய்மொழியிலென்கை.

ஜீயர் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ:

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

பிறந்துலகங் காத்தளிக்கும் பேரருட் கண்ணா * உன்
சிறந்தகுணத்தா லுருகுஞ் சீலந்—திறந்தவிர்ந்து *
சேர்ந்தனுபவிக்கும்நிலை செய்யென்ற சீர்மாறன்
வாய்ந்தபதத்தே மனமே வைகு.

| | | | |
|---|---|---|---|
| பிறந்து | பலபிறப்பும்பிறந்து | சேர்ந்து அநுபவிக்கும் நிலை | பொருந்தி அநுபவிக்கும்படியான நிலைமையை |
| உலகம் காத்து அளிக்கும் | உலகங்களை ரக்ஷித்தருளாநின்ற | செய் என்ற | செய்தருளவேணுமென்று ப்ரார்த்தித்த |
| பேர் அருள் கண்ணா | பரமதயாளுவான கண்ணபிரானே! | சீர் மாறன் | ஆழ்வாருடைய |
| உன் சிறந்த குணத்தால் | உனது உயர்ந்த திருக்குணங்களால் | வாய்ந்த பதத்தே | ப்ராப்தமான திருவடிகளிலேயே |
| உருகும் சீலம் திறம் தவிர்ந்து | நெஞ்சு உருகும்படியான தன்மை நீங்கி | மனமே வைகு | நெஞ்சே நீ பொருந்தியிரு. |

விபவாவதாரகுண சேஷ்டிதங்களைச் சிந்தை செய்யப்புகுந்த ஆழ்வார் அவற்றைச் சிந்தைசெய்ய முடியாமல் நெஞ்சு உருகிப்போகவே, அந்த எம்பெருமானையே நோக்கி 'பிரானே! இப்படி உருகிப்போகாமல் தரித்து நின்று அநுபவிக்கும்படியாக நீயே க்ருபைபண்ணி யருளவேணுமென்று இத்திருவாய்மொழியில் ப்ரார்த்தித்தார்; அவருடைய திருவடிகளே சிந்திக்கத்தக்கன—என்றாயிற்று.

ஜீயர் திருவடிகளேசரணம்.

பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய
திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில்
ஐந்தாம்பத்து முற்றிற்று.